# சித்திர பாரதி

ஆதார பூர்வமான பாரதி வாழ்க்கை வரலாறு,
அரிய புகைப் படங்களுடன்

ரா. அ. பத்மநாபன்

அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்
தேனும்பேட்டை, :: சென்னை-18.

அமுதம்—151

முதல் பதிப்பு—ஹேவிளம்பி, கார்த்திகை
மூலம், 9௳
நவம்பர் 24, 1957.
(பாரதியின் 76-ம் பிறந்த நாள்)

*Amudham Series—151*

**Chitra Bharati**, *Documented life of Poet Bharati, by R. A. Padmanabhan.*

*First Edition, Bharati's 76th birthday (Hevilambi, Kaartigai 9, Moolam, November 24, 1957)*



**விலை ரூபாய் இருபது**

வெளி நாடுகளில் :

**அமெரிக்கா—5 டாலர்**
**பிரிட்டன்—30 ஷில்லிங்**
**ரஷ்யா—20 ரூபிள்**

***Price : Rupees Twenty***

*U.S.A.—$ 5*
*U.K.—30 sh.*
*U.S.S.R.—20 Rubles*



**நேஷனல் ஆர்ட் பிரஸ்**
**91, மவுண்ட் ரோடு**
**சென்னை-18, இந்தியா**

NATIONAL ART PRESS
91, MOUNT ROAD,
MADRAS-18, INDIA.

# முகவுரை

இச் சித்திர பாரதிக்கு முகவுரை அவசியமில்லை. ஆயினும் ஆசிரியரின் வேண்டுகோளை மறுக்க முடியவில்லை. அவர் இதற்காகப் பட்டுள்ள பாடு இவ்வளவு அவ்வளவன்று. பாரதியாரைச் சித்திரித்துக் காட்டும் படங்கள் இதில் பல இருப்பதோடு அவரைப்பற்றி வரைந்துள்ள சொற்சித்திரங்கள் பெரிதும் போற்றத்தக்கனவாகும். பாரதியார் சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், புத்தகங்கள், புகைப் படங்கள், கைப் பிரதிகள் சேகரிப்பதில் இவ் வாசிரியர் காட்டியுள்ள ஊக்கமும் உடல் உழைப்பும் சிறிதன்று. இவற்றின்பொருட்டு ஊர் ஊராய் அலைந்து திரிந்து, மூலை முடுக்குகளில் போய் பாரதியாருக்கு அறிமுகமானவர்களையும் அவருடன் நெருங்கிப் பழகிய நண்பர்களையும் கண்டுபிடித்துள்ளார். அவர்களோடு பாரதியார் கூடிக் குலாவிப் பேசிக் குலுங்கச் சிரித்தும், வம்புகள் பேசியும் விளையாடிப் பிரிந்த செய்திகளில் கிடைத்தமட்டும் நேரில் சேர்த்துள்ளார். பாரதியாரின் நடையுடை பாவனைகளுக்கு இந்நூலாசிரியரைத் தான் தற்கால பொக்கிஷம் எனலாம். தாம் இப்படி வருந்திச் சேர்த்த இரத்தினங்களை உலகமெல்லாம் படித்தும் கேட்டும் களிப்படைய புத்தக ரூபமாய்ப் பகிர்ந்து கொடுக்க முன் வந்துள்ளார். இந் நூலின் பொருட்டுத் தமிழ் உலகம் அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறது. சென்ற வருஷம் நான் குடும்பத்தோடு சென்னை சென்றபோது, இந் நூலாசிரியர் தாம் பாரதியார் விஷயமாய் சேர்த்துள்ள பொருள்கள் யாவற்றையும் ஒன்றுவிடாது அயர்வின்றி ஒருநாள் முழுதும் சுவையோடு எமக்குக் காட்டி விளங்க வைத்தார். அவருக்கு பாரதியாரிடமுள்ள அன்பும் ஆர்வமும் பக்தியும் அன்று எனக்கு விளங்கிற்று.

★

'இந்தியா' பத்திரிகை சென்னையில் வெளிவர ஆரம்பித்த கொஞ்ச நாட்களுக்கெல்லாம் பாரதியார் அதில் வந்து சேர்ந்தார். இதற்கு முன்பே 'பால பாரதா' என்னும் ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் அவர் எழுதியிருந்த ஒரு கட்டுரையைப் படித்து அவர் திறமையை நான் அறிந்திருந்தேன். பின்பு அவரை சந்தித்ததிலிருந்து எங்கள் நட்பு வெகு சீக்கிரத்தில் வளர ஆரம்பித்தது. அந்நாட்களில் அவரை நாங்கள் 'பாரதி, பாரதி' என்று அழைத்து வந்தோம். மகா காவியங்கள் இயற்றி, வரகவியாய், கவிச் சக்கரவர்த்தியாய் விளங்கும் இந் நாட்களில் எல்லாரும் அவரை 'பாரதியார்' என்று அழைக்கும்போது, "இவர் யார்? நம்மோடு சகஜமாய்ப் பழகி, குழந்தை போல், 'சி. சு. பாரதி' என்று சொல்லிக் கொண்டிருந்தோமே அவரா?" என்று கேட்கும்படி ஆகிவிட்டது.



ஸ்ரீ. ஸ்ரீ. ஆசார்ய
(மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார்)

சென்னையில் அவரோடு ஓரிரண்டு வருஷங்கள் பழகி இருந்தாலும் நாங்கள் அன்னியோன்யமாய் நெருங்கிப் பழகியது புதுச்சேரி சென்ற பிறகுதான். அங்கு எங்கள் சிறு கூட்டத்தில் அவர்தான் ராஜா. நாங்கள் சதுரங்கம், சீட்டு முதலியன ஆடியதுண்டு; பெரும்பாலும் வ. வே. ஸு. அய்யர் ஜயம் பெறுவார். இருந்தாலும் எங்கள் ஆட்டம் பாரதியார் இல்லாவிட்டால் சுவைபெறாது. ஆட்டத்தின் ஜயத்தில் எங்களுக்குச் சுவையில்லை. அங்கு நடக்கும் சம்பாஷணையில் உள்ள ரஸம் எங்களுக்கு வேண்டியிருந்தது. கடற்கரையில் அரை இருள் படர்ந்து வரும்

அந்திப் பொழுதில் கணீரென்று அவர் பாட ஆரம்பித்தால், அவர் மாத்திரமன்று, அவரைச் சுற்றியுள்ள நாங்களும், எங்களைச் சுற்றியுள்ள சராசரப் பொருள்களும்கூட அசைவற்று மெய் மறந்து அவரது இன்னொலியில் ஈடுபட்டிருப்பதுபோல் தோன்றும்.

★

சிறு வயதிலிருந்தே பாரதியார் தம் நாவில் தமிழணங்கு உலாவுவதை உணர்ந்திருந்தார். ஆனால் அவருடைய தகப்பனார் சின்னசாமி அய்யருக்கு தமிழைவிட ஆங்கிலம், கணிதம் போன்றவைகளில் தம் மகன் முன்னுக்கு வர வேண்டும் என்பது கருத்து. அவர் தகப்பனார் என்ற தோரணையில் மகன்மேல் தம் அதிகாரத்தைச் செலுத்தப் பார்த்தார். "சிங்கக் குட்டிக்குப் பசும்புல்லை உணவாகக் கொடுத்து வளர்க்க முயன்றது போலாயிற்று" என்று பாரதியாரே இதை ஏளனம் செய்திருக்கிறார். அவ்விதமாகத் தமக்கு இயல்பாயில்லாத வழியில் ஆங்கிலத்தைப் புகட்டும் முயற்சியை வெறுக்க ஆரம்பித்தார்.

இவ் வெறுப்பைத்தான் பிற்காலத்தில் தம் காவியங்களில் கூறியுள்ளார். இதனால் அவருக்கு இங்கிலீஷ் பாஷை தெரியாதென்றும், அதிலுள்ள பேரெண்ணங்களை அவர் இகழ்ந்தாரென்றும் எண்ணலாகாது. அது ராஷ்டிர பாஷை என்று நம் தாய்மொழிகளுக்கும் முன் அதைச் சிறுவர்களுக்கு வலுவில் புகட்டுவது தவறு என்பதே அவர் கருத்து. அவருக்குத் தக்க வயது வந்து காசியில் வசித்தபோது சொற்ப காலத்தில் ஷெல்லி, கீட்ஸ், வேர்ட்ஸ்வொர்த் என்னும் பெரிய பெரிய ஆங்கிலேய இயற்கைக் கவிகளைச் சுவையோடு படிக்கலானார். அதன் பயனாக ஆங்கிலக் காவியங்களையும் தமிழ்க் காவியங்களையும் ஒப்பிட்டுப் பார்த்து, மற்றவைகளுக்கு ஒரு சிறிதும் குறைவில்லாத தமிழ்க் காவியங்களும் அந்த ஆங்கிலக் காவியங்கள் போல் உலகனைத்தும் பரவாமல் மறைந்து கிடக்கின்றனவே என்று பெரிதும் குறைப்படுவார்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல்
இனிதாவதெங்கும் காணோம்;
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழர் எனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலக மெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்......"

என்று உலகிலுள்ள மூலை முடுக்குகளில்கூட ஒலிக்கவேண்டிய 'தமிழோசை'யை மூடிவைத்துக்கொண்டு "பாமரராய், விலங்குகளாய், நாமமது தமிழரென"ப் பெருமையோடு வெட்கமின்றித் திரிகின்றோமே என்று மனம் கசிந்து வருந்தினார். அவர் இப்பாட்டை எழுதி அரை நூற்றாண்டுக்கு மேலாகிறது. நம் நாடு சுதந்திரம் பெற்று பத்து வருஷங்களாகின்றன. அவர் காலம் சென்ற கால் நூற்றாண்டில் சுதந்தரம் பெற்ற தமிழ்நாடு அவர் கூறிய நிலையிலேயே இன்னும் இருப்பதைக் காண்பாரானால் அவர் மனம் எப்படித் துடிக்குமோ என்பதை நினைக்கவே பயமாயிருக்கிறது!

★

நம் நாடு சுதந்திரம் பெற்றதிலிருந்து தமிழ்த் தாய் தன் மக்களிடையே புதிய வழியில் தவழ்ந்து விளையாட ஆரம்பித்திருப்பதைக் காண்கிறோம். ஆனால் சொற்ப தினங்களில் பூமண்டலம் சுற்றி வரும் நிலையிலிருக்கும் நாம் நம் தாய்மொழியின் திருவிளையாடல்களை இக்குறுகிய சிறு தமிழ்நாட்டில் அடக்கி வைத்து வேடிக்கை பார்ப்பது தகுமா? கிரேக்க நாட்டினர் தாம் குறுகிக்கிடந்தாலும் தம் உயர்ந்த தாய் மொழியின் பெருமையை உலகம் போற்றும்படி செய்து விட்டார்கள். ஸாக்ரடீஸ், ப்ளேடோ, அரிஸ்டாட்டில் போன்ற மாபெரும் மேதாவிகள் மூலம் உலகில் அடைந்த தன் உச்சஸ்தானத்தை அம்மொழி இன்றைக்கும் பாதுகாத்து வருகிறது. அதன் அக்காடெமி (Academy) என்னும் பண்டிதக் குழுவுக்கு நம் தமிழ்ச் சங்கம் சிறிதும் குறைந்ததன்று. நீர்வள, நிலவளங்களிலும், விஸ்தீரணத்திலும் தமிழ்நாடு கிரேக்க தேசத்திற்குக் குறைந்ததில்லை. நம் கவிவாணர் அப் பண்டைக்காலப் புலவர்க்கு எவ்விதத்திலும் ஈடு கொடுக்க வல்லவரே. சிவபிரான் ஆதியில் தந்த தமிழ் மொழி இன்று நேற்றையதன்று. மனிதன் குகைவாசியாய் இருந்ததற்கும் முன்பு விருக்ஷவாசியாய்

இருந்தபோது அப்பண்டையினும் பண்டைக் காலத்தில் அவன் உச்சரித்த சொற்கள் பல இன்றைக்கும் தமிழில் காணக்கிடக்கின்றன.

நிலப் பரப்பில் மலைகளும் பள்ளத் தாக்குகளும் மாறி மாறி உயர்ந்தும் விரிந்தும் கிடப்பதுபோல் நமது இலக்கியப் பெருக்கிலும் காணக் கிடக்கின்றன. அதனால் மனம் குன்றுது பேரிலக்கியங்களைப் பரப்பப் பாடுபட்டு வருவோமானால் நம் தாய் மொழி ஓங்காமல் இராது. அதை வெளிநாடுகளில் பரப்புவதால் அந்நாட்டினர்க்கு நாம் புதிய கண்களைத் அளித்தது போலாகும். அவர்கள் உலகைப் புது நோக்கோடு காண்பார்கள். அவர்கட்கு தமிழின் பெருமையும் அதனால் விளங்கும்.

★

உதாரணமாக, திருக்குறளைச் சீராகப் படித்தறிந்த வெளிநாட்டுப் பேரறிஞர்கள் ஒரே குரலாய் அதன் பெருமையைப் போற்றுவதைக் காண்கிறோம். உலகில் எந்த பாஷையிலும் இம்மாதிரி நூல் கிடையாது என்று அவர்களே கூறுகிறார்கள். ஆனால், எவ்வளவு திறமையோடு மொழிபெயர்த்தாலும் முதல் நூலின் அழகும் சுவையும் மொழிபெயர்ப்பு பெறுவதில்லை.

'தொட்டனைத் தூறும் கேணி' போலத் தோண்டத் தோண்டச் சுரக்கும் தன்மையை மொழிபெயர்ப்பில் கொண்டுவர முடியாது.

**"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்**
**வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்**
**பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை,**
**உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை"**

என்கிறார் பாரதியார். இப்படிப்பட்ட மிக்குயர்ந்த இரத்தினங்களைக் கையில் வைத்துக் கொண்டு,

**"ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்**
**வாழ்கின்றோம், ஒரு சொற்கேளீர்!**
**சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்**
**தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!"**

தெருவெல்லாம் என்றது தமிழ் நாட்டுத் தெருக்கள் மாத்திரமன்று, மற்ற இந்தியப் பிராந்தியங்களிலும், விரிந்த இவ்வுலகிலுள்ள வெளிப் பிரதேச நகரங்களிலும் உள்ள தெருக்களில் எல்லாம் "தமிழ் முழக்கம் செய்வீர்" என்றே பாரதி தமிழ் மக்களைத் தூண்டுகிறார்.

பாரதியாரின் இக்கட்டளையை நிறைவேற்றவே இச் 'சித்திர பாரதி' வெளி வந்துள்ளது. இந்திய நாடுகள் மாத்திரம் அன்று, இவ்விரி உலகில் "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை" இது செய்தே தீரும் என்று எதிர்பார்க்கலாம். இதன் ஆசிரியரும், அந்நிய தேசத்தினர் தம் கலைகளை நம் நாட்டில் பரவச் செய்துவரும் முறைகளை நன்கறிந்தவரே. அம் முறைகளைப் பின்பற்றி தலைசிறந்த தமிழ் நூல்களை வெளிநாட்டினர் சுவைக்கச் செய்து பாரதியார் மனதைக் குளிரச் செய்வது அவருக்கு எளிதென்றே நம்புகிறோம்.

இதில் இவர் முயற்சி திருவினையாக்குக!

7/8 ஈஸ்ட் படேல் நகர்
புது டெல்லி-12
21—5—1957

ஸ்ரீ. ஸ்ரீ. ஆசார்ய

# நூல் தோன்றிய கதை

சரித்திர பூர்வமான ஆராய்ச்சி நூலாக பாரதியின் வாழ்க்கை வரலாறு ஒன்று எழுத வேண்டும் என்று எனக்குப் பல வருஷங்களாக ஆசை. அது இன்று நிறைவேறுகிறது.

*1934*-ம் ஆண்டு, நான் "ஆனந்த விகட"னில் உதவியாசிரியராக இருந்த சமயம் முதன் முதலாக பாரதியார் புகைப் படம் ஒன்றைப் பார்த்தேன். புதுவை அன்பர் எஸ். ஆர். சுப்பிரமணியம் கொண்டு வந்து கொடுத்த அப் புகைப் படத்தைப் பிரதியெடுத்துத் தரும்படி ஆசிரியர் 'கல்கி' பணித்தார். அப்போது எடுத்த அப்படத்தின் பிரதிகள் பிற பத்திரிகைகளுக்கும் உதவப்பட்டன. என்னிடம் வந்து சேர்ந்த முதல் பாரதிச் சின்னம் என்று இதைக் கூறலாம்.

## வேங்கட ஆரியா

*1937*-ம் ஆண்டில் "ஜெய பாரதி" என்ற தேசிய தினசரியில் நான் பணிபுரிந்து வந்தேன். *1909—10*-ல் பாரதியுடன் அவரது "இந்தியா" பத்திரிகையில் மாற்று-ஆசிரியராக இருந்த வேங்கட ஆரியா என்பவரும், திருவல்லிக்கேணியில் பாரதியுடன் பழகியவரான கி. சடகோபன் என்பவரும் அப்போது "ஜெய பாரதி"யில் உதவியாசிரியர்களாக இருந்தனர். இவர்களில், வேங்கட ஆரியாவுடன் நான் அதிகம் பழகுவதற்குள் அவர் ரஜாவில் போனுர்; நோய்வாய்ப்பட்டுத் திரும்பவேயில்லை. சடகோபனிடம் பாரதியைப் பற்றிப் பல விஷயங்களை அறிய சந்தர்ப்பம் கிடைத்தது.

"ஜெய பாரதி" தினசரியின் வாரப் பதிப்புக்கு ஆசிரியனுக நான் வேலை பார்த்து வந்த காலத்தில், ஒரு நாள் இரவு கடுமழை பெய்தது. மழைச் சாரலிலிருந்து பழம் பத்திரிகைகள் சிலவற்றை ஒதுக்கி வைக்கப் போன போது, 'வேங்கட ஆர்யன்' என்று மேலே பெயர் எழுதியிருந்த காகிதக் கட்டொன்று கிடைத்தது. ஆரியாவினுடைய காகிதங்கள் என்று அதை எடுத்து வைத்தேன்.

இது நடந்த சின்னுட்களில் வேங்கட ஆரியா நோய்வாய்ப்பட்டுக் காலமாகிவிட்டார். ஆனுல், அப்போதும் அவர் பெயரிட்ட கட்டில் என்ன இருக்கிறதென்று நான் பார்க்கவில்லை. வெகுநாளுக்குப் பின் ஒரு சமயம் கட்டைத் திறந்து பார்த்தபோது, "இந்தியா" என்ற பழைய புதுவைப் பத்திரிகையின் பிரதிகள் வரிசையாக இருப்பதைக் கண்டேன். ஆரியாவின் உறவினர் எவரேனும் வந்தால் தருவோமென்று இதை பத்திரமாய் வைத்திருந்தேன்; ஆனுல் எவரும் வரவில்லை.

## பாரதி கோழையா ?

*1933-34*ல் முதன் முதலாக வ. ரா. வைச் சந்தித்தேன். அப்போது அவர், "மணிக்கொடி" வாரப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். அவருக்கு பாரதி என்ருல் உயிர் என்பது அவருடைய பேச்சிலும் எழுத்திலும் தெரிந்தது. அக்காலத்தில் பாரதி சரித்திரம் ஏதும் கிடையாது. பாரதி தினக் கொண்டாட்டங்களில் நடக்கும் பிரசங்கங்களிலிருந்து பாரதி ஒரு தீர புருஷர் என்றும், ஆனுல் ஏனே அரெஸ்ட்டுக்கு "பயந்து" புதுச்சேரிக்கு ஓடிப் போனுர் என்றும் மட்டும் அறிந்திருந்தேன். அவரது கவிதைகள் எளிதில் புரிந்தன, விவரிக்கவொண்ணு இன்பத்தையும் தெம்பையும் வீராவேசத்தையும் கொடுத்தன. இத்தகைய வீராவேசப் பாடல்களைப் பாடியுள்ள ஒருவர் பயந்துகொண்டு புதுவைக்கு ஓடிப் போயிருப்பாரா என்ற சந்தேகம் மட்டும் எனக்கிருந்தது.

இந்த சந்தர்ப்பத்தில்தான் "காந்தி" மாதப் பத்திரிகையில் வ. ரா. "சுப்பிரமணிய பாரதியார்" என்ற தலைப்பில் பாரதியின் வாழ்க்கைச் சரிதத்தைத் தொடர்கதை போல எழுத வாரம்பித்தார். ஒவ்வொரு மாதமும் கட்டுரை எப்போது வருமென்று காத்திருந்து படிப்பேன். வ. ரா. வின் கட்டுரைகளில் பல புது விஷயங்கள் தெரிந்தன. பாரதி என்ற மேதையின் பலதரப்பட்ட தன்மைகளை ஒருவாறு உணர்ந்தேன். ஆனுல், வ. ரா. வின் கட்டுரைகளில்கூட பல இடங்களில் வருஷம் தேதி முதலான விவரங்கள் சரிவர ஞாபகமில்லையென்று அவரே குறிப்பிட்டிருந்தது ஆதார பூர்வமான விவரங்களைத் தேடத் தூண்டுதலாயிற்று.

*1936*-ல் ஆக்கூர் அனந்தாச்சாரியார் வெளியிட்ட பாரதி சரிதமும், பிறகு சக்தி தாஸன் சுப்பிரமணியன் வெளியிட்ட 'பாரதி லீலை' என்ற சிறு நூலும் முழுமையான பாரதி சரிதம் வேண்டுமென்ற ஊக்கத்தை வளர்த்தன.

அக்காலத்தில் பாரதிதினம், வ.வே.ஸு. அய்யர் தினம் முதலியவைகளுக்கான கூட்டங்கள் பழைய காங்கிரஸ் மாளிகையில் நடக்கும். அதில் வழக்கமாக வரும் இருபது முப்பது பேர்களே இருப்பார்கள். இந்தக் கூட்டங்களில்

"லோகோபகாரி" ஆசிரியர் பரலி சு. நெல்லையப்பரைச் சந்தித்தேன். நெல்லையப்பரின் பத்திரிகையில் ஒரு சில பாரதி கட்டுரைகள் திரும்பத் திரும்ப வெளியிடப்படுவதும் கண்டேன்.

இந்தச் சமயத்தில் நான் சந்தித்த இன்னொரு பாரதி அன்பர் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாராகும். பாரதியின் தேசிய முயற்சிகளுக்கெல்லாம் உறுதுணையாகவிருந்த மண்டயம் குடும்பத்தைச் சேர்ந்த இந்த அடக்கமிகுந்த பெரியவர் அப்போது சென்னையில் வசித்து வந்தார். இவர் இன்னும் ஜீவிதராய், தற்சமயம் டெல்லியில் தம் புதல்வருடன் வாழ்வது நமது பாக்கியமாகும்.

மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார், வ. ரா., நெல்லையப்பர் முதலியோருடன் பழகியதிலிருந்து பாரதியை நேரில் அறிந்த மற்றும் பலர் புதுவையில் வாழ்கிறார்கள் என்றும், பாரதியின் கவிதை, கதை, கட்டுரைகளில் இன்னும் பல வெளியாகாமலிருக்கின்றன என்றும் அறிந்தேன். புதுவை போய் பாரதி இருந்த இடங்களைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை இதனால் பிறந்தது.



ரா. அ. பத்மநாபன்
நூல் ஆசிரியர்

### புதுவைப் பயணம்

1938-ல் இதற்கேற்ற சந்தர்ப்பமும் ஏற்பட்டது. பாரதியை நேரில் அறிந்தவரும், பாரதியைப் போலவே திலகரை அரசியல் குருவாகப் பின்பற்றியவருமான "ஸண்டே டைம்ஸ்" ஆசிரியர் எம். எஸ். காமத் நடத்தி வந்த "ஹிந்துஸ்தான்" தமிழ் வாரப் பத்திரிகையின் உதவியாசிரியர்களில் ஒருவனாக இருந்த நான், என்னைப் புதுச்சேரிக்கு அனுப்பினால் பாரதி சம்பந்தமான பல விவரங்களையும் படங்களையும் கொண்டு வர இயலுமென்றும், இவைகளைக்கொண்டு ஸெப்டம்பர் 11-ந் தேதி இதழை விசேஷ "பாரதி மல"ராக வெளியிடலாமென்றும் தெரிவித்தேன். "ஹிந்துஸ்தான்" ஆசிரியர்கள் ஈ. ஆர். கோவிந்தனும், ரா. நாராயணனும் இதை ஆர்வத்துடன் ஆமோதித்தனர். காமத்தும் உற்சாகத்துடன் இதை ஏற்றார். காரியாலயப் புகைப் படக்காரரான யூ. என். ஸிங் என்பவரும் நானும் புதுவை சென்றோம். முன் ஜாக்கிரதையாக நானும் ஒரு காமிரா எடுத்துச் சென்றேன்,

புதுவை போகுமுன் சென்னையிலேயே குவளைக் கண்ணன் என்ற பாரதி சீடரைச் சந்திக்கும் பாக்கியம் பெற்றிருந்தேன். பாரதியின் உயிர்த் தோழரான அவர் அச்சமயம் திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வந்தார். வியப்புறு ஞாபகசக்தி படைத்தவர் அவர். பாரதி நண்பர்கள் பலரைப்பற்றி அவர் விவரம் சொன்னார்; அப்போது பிரசுரமாயிராத பாரதி பாடல்கள் பலவற்றை வரி பிசகாமல், எழுத்துப் பிசகாமல் மனப் பாடமாய்ச் சொன்னார். இப்பாடல்களில் சில பின்னர் புத்தமாக வெளி வந்ததும் ஒப்பிட்டுப் பார்த்தபோதுதான் அவரது ஞாபக சக்தியின் பெருமை புலனாயிற்று.

புதுவையில் முதன் முதலாக அம்மாக்கண்ணு என்ற கிழவியைக் கண்டோம். பொன்னு முருகேசம் பிள்ளை என்ற தனவான் வீட்டுப் பணிப் பெண்ணாகிய இவளுக்கு பாரதியிடம் வாஞ்சை அதிகம். நாங்கள் போன சமயம், 1938-ல், அம்மாக்கண்ணு தள்ளாமையடைந்துவிட்டாள்; காது கேட்கவில்லை. அவளிடம் பேசி அதிக விஷயங்கள் அறிய முடியவில்லை.

அம்மாக்கண்ணுவின் புதல்வர் வேணு என்ற வே. வேணுகோபால் நாயக்கர் எங்களைப் புதுவையில் பாரதி சம்பந்தப்பட்ட இடங்களுக்கெல்லாம் அழைத்துச் சென்று காட்டினார். மற்றும் புரொபஸர் என். சுப்பிரமணிய அய்யர் ("பிரம்மராய அய்யர்"), ஆறுமுகம் செட்டியார் ("எலிக்குஞ்சு செட்டியார்") பொன்னு முருகேசம் பிள்ளையின் புதல்வர் ராஜா பகதூர் முதலிய பாரதி நண்பர்களையும் அவர் அறிமுகப்படுத்தி வைத்தார். "பாரதி தாசன்" என்ற வாத்தியார் கனக சுப்புரத்தினத்தையும் தேடிச் சென்றோம்; அவர், துரதிர்ஷ்டவசமாய், ஊரில் இல்லை.

### 'பிரம்மராய அய்யர்'

பாரதி காலத்தில் புரொபஸர் சுப்பிரமணிய அய்யர் வீட்டுத் திண்ணையில் "இடிப் பள்ளிக்கூடம்" என்று பெயர் பெற்ற அரட்

டைக் கச்சேரி நடக்கும் என்று ஒரு கட்டுரையில் பாரதி குறித்திருக்கிறார். இந்தக் கச்சேரி, 20 வருஷங்களுக்குப் பின் நாங்கள் போன சமயமும் நடந்து கொண்டிருந்தது. ஆனால், வீட்டுத் திண்ணைக்குப் பதிலாக, மாடியில் நடந்தது; முன்பு நடந்ததுபோல புரொபஸரின் இடியோசை கேட்கவில்லை. அடக்கமாக, சிட்டுக் கச்சேரியாகத் திகழ்ந்திருந்தது.

பாரதியார் விஷயமாக நாங்கள் வந்திருக்கிறோமென்று அறிந்ததும் புரொபஸர் சுப்பிரமணிய அய்யர் வெகு நேரம் அளவளாவிக் கொண்டிருந்தார். பாரதியின் ஞாபகார்த்தமாகத் தாம் வைத்திருந்த "பொன் வால் நரி" (The Fox with the Golden Tail) என்ற ஆங்கிலப் பிரசுரத்தின் பிரதி ஒன்றையும், "விஜயா" என்ற புதுவைத் தினசரியில் வந்த தலையங்க மொன்றையும் கொடுத்தார். "விஜயா" தலையங்கத்தைக் கையிலெடுத்தவர் அதைத் தமது உரத்த குரலில் படித்துக் காட்டிக் களிக்கவும் ஆரம்பித்துவிட்டார். அவ்வளவுதான். அவருக்குப் பழைய ஞாபகங்கள் அலைமோதிக்கொண்டு வந்துவிட்டன. "வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் நீதிபதி பதவி ஏற்றதைக் கண்டித்து இந்தத் தலையங்கம் எழுதிவிட்டு, பாரதியார் இதை எங்களிடம் எப்படிப் படித்துக் காட்டிக் குதூகலித்தார் தெரியுமா!" என்று கடகடவென்று சிரித்தார்.

அடக்கவொடுக்கமான ஆறுமுகம் செட்டியார் தம் நினைவாக, வ. வே. சு. அய்யரின் "பால பாரதி" பத்திரிகை, தமக்கு அது தபாலில் வந்த மேலுறையுடன், கொடுத்தார்.

### 'ஹிந்துஸ்தான்' பாரதி மலர்கள்

புதுவையில் எடுத்த படங்களும் தேடிச் சேகரித்த பல தகவல்களும் "ஹிந்துஸ்தான்" பாரதி மலராக வெளிவந்தபோது, பல பாரதி அன்பர்கள் பாராட்டி, ஊக்குவித்தார்கள். இந்த ஊக்கம் காரணமாக, மறு வருஷமும் புதுவை போய்ப் பல புதிய தகவல்களையும் கடிதங்களையும் படங்களையும் கொண்டு வந்தேன். 1939-ம் ஆண்டு பாரதி மலரில், "சென்னை மாகாணத்தின் அரசியல் விழிப்பு" (Political Evolution in the Madras Presidency) என்ற இன்றும் வெளியாகாத பாரதியின் ஆங்கில நூலின் முதல் அத்தியாயத்தின் மொழிபெயர்ப்பு உட்படப் பல விஷயங்கள் வெளியிடப் பெற்றன. இதை பாரதியின் இளைய சகோதரர் சி. விசுவநாதன் அனுப்பி உதவினர்.

1940, 1941-ம் ஆண்டுகளிலும், "ஹிந்துஸ்தான்" சிறந்த பாரதி மலர்களை வெளியிட்டு, அதுவரை வெளிவராத பல புதிய விஷயங்களை வெளிக் கொணர்ந்தது.

பாரதி வாழ்க்கைச் சுவடுகளை வெளிப்படுத்தி, பாரதியைத் தமிழ் மக்கள் சரிவரப் புரிந்து கொள்ளச் செய்யவேண்டும் என்ற இக்கருத்தில் வேறு பல 'பாரதி நினைவு'களும் வெளிவரலாயின, ஆனால் அவ்வப்போது பத்திரிகைகளில் வெளியான இந்த நினைவுக் குறிப்புகளை ஒன்று சேர்த்து நூலாக்கி, பாரதி கடிதங்களையும் தொகுத்து வெளியிடுவதில் தமிழ் நாட்டில் எவரும் இதுவரை ஊக்கம் காட்டவில்லை.

### பாரதி பொருட்காட்சி

"ஹிந்துஸ்தான்" பத்திரிகையில் பணிபுரிந்ததற்குப் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பின்னர் மீண்டும் நான் சென்னைக்குத் திரும்பியபோது, என்னிடமுள்ள பாரதி நினைவுப் பொருள்களையெல்லாம் சேர்த்து ஒரு பாரதி பொருட்காட்சியாக அமைத்துப் பலரும் கண்டு களிக்கச் செய்ய விரும்பினேன். முடிவில், 1953-ம் ஆண்டு ஸெப்டம்பர் மாதம் பாரதியார் சங்கம் சென்னை ஹிந்தி பிரசார சபைக் கட்டடத்தில் நடத்திய பாரதி விழாவில் இத்தகைய பொருட்காட்சி யொன்று அமைக்க வாய்ப்புக் கிடைத்தது. இதை அமைப்பதற்கு, பாரதியார் சங்கக் காரியதரிசி ஆக்கூர் அனந்தாச்சாரி ஊக்கமளித்தார்; 'பார்த்தன்' எனப்படும் ஜி. பார்த்தஸாரதி என்ற இளம் சித்திரக்காரர் இரவு பகலாய் உழைத்துப் பெரும் உதவி புரிந்தார்.

பாரதி பொருட்காட்சி எதிர்பார்த்ததைவிட அதிகமான உற்சாகத்தை எங்களுக்கு உண்டாக்கியது. பொதுமக்களுக்கும் இக்காட்சி பாரதியிடம் புது உற்சாகம் பிறக்கும்படி செய்வதாயிருந்தது. பாரதியை அறிந்த பலர் மேன்மேலும் பல தகவல்களைக் கொடுக்க முன் வந்தனர்; பாரதியைப் பற்றிய பல புதிய ஆதாரங்கள் இருக்குமிடம் தெரிந்தது. இதே காட்சி மேலும் சிறப்பான முறையில், 1953ம் ஆண்டு இறுதியில் நடந்த சென்னை காங்கிரஸ் பொருட்காட்சியிலும் இடம் பெற்றது. இந்த பாரதி பொருட்காட்சியைக் கண்ட தலைவர் ராஜாஜி, "இது ஒரு பெரு முயற்சி. மகிழ்ச்சி தருகிறது" என்று பாராட்டினர்.

### நூல் யோசனை

பாரதி பொருட்காட்சியின் சேவையை சகோதரத் தமிழ் எழுத்தாளர்களும் பாராட்டினர்கள். சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கம், தனது 1954-ம் வருஷ மகாநாட்டில், இதற்கென இந்நூலாசிரியருக்கு ஒரு தங்க மெடல் அளித்து கௌரவித்தது.

பாரதி பொருட்காட்சி மேலும் சில புதிய சேர்க்கைகளுடன் 1954-ம் ஆண்டு அண்ணாமலை நகரில் நடந்த அகில இந்திய எழுத்தாளர்

மகாநாட்டிலும், அதே ஆண்டு ஸெப்டம்பரில் பாரதி தினத்தன்று சென்னை அமெரிக்கத் தகவல் ஸ்தாபனமான யுனைட்டெட் ஸ்டேட்ஸ் இன்பர்மேஷன் ஸெர்விஸின் நூல் நிலையத்திலும் காட்டப்பெற்றது.

கிடைத்தற்கரிய அசல் பாரதி கடிதங்களும் கையெழுத்துப் பிரதிகளும் பழம் பத்திரிகைகளும், அச்சில் இல்லாத பல பாரதி நூல்களும், பாரதியன்பர்களின் புகைபடங்களும் இன்னும் பல விஷயங்களும் பாரதி பொருட்காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. இந்த அரிய பொருள்களை அடிக்கடி பொருட்காட்சியாய் வைப்பதில் சில சிரமங்கள் இருக்கின்றன. தொட்டால் பொடித்து விழும் பழம் தாள்கள் இவ்வாறு அடிக்கடி எடுத்து வைப்பதால் மேலும் சேதமடைகின்றன. இதற்கு என்ன செய்வோமென்று நினைத்திருந்த சமயம், அமுத நிலயம் நிர்வாகி ரா. ஸ்ரீ. ஸ்ரீகண்டன், பொருட்காட்சியிள்ள விஷயங்களையும் படங்களையும் சேர்த்து ஒரு நூலாக வெளியிடலாம் என்றார்.

இது சிறந்த யோசனையென்று சம்மதித்தேன். ஆனால், நூலாக வெளியிடுவதென்றால் கூடுமானவரை முழுமையான தொடர் உருவம்கொண்டதோர் நூலாக இருக்கவேண்டும் என்றும், அதற்காக மேலும் கிடைக்கக்கூடிய விஷயங்களையெல்லாம் சேகரிக்கவேண்டும் என்றும், படங்களையெல்லாம் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் என்றும் தோன்றிற்று. உண்மையில் நூலாக வெளியிடுவது என்று ஒப்பமானதற்குப் பின் எனது முயற்சிகளை முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாக்க வேண்டியிருந்தது!

### மூன்று வருஷமாக

மூன்று வருஷ இடையருத முயற்சிக்குப் பின், இன்று ஒருவாறு திருப்தியடைந்து இந்நூலை வெளியிடுகிறோம். இந்த மூன்று வருஷங்களும் வீண்போகவில்லை. பாரதி பொருட்காட்சியில் இருந்ததைப் போல இரண்டு மடங்கு படங்களும் அதற்குப் பன்மடங்கு அதிகமான அரிய தகவல்களும் இப்போது சேர்ந்து இந்நூல் தயாரிப்பதில் உபயோகிக்கப்பட்டுள்ளன. இன்னும்கூட பல அபூர்வமான 'பாரதிச் சுவடுகள்' எதிர்பாராத படியெல்லாம் கிடைத்துக்கொண்டே யிருக்கின்றன என்பதும் குறிப்பிடத்தக்க விஷயமாகும். உதாரணமாக, இந்நூலின் விஷயப் பக்கங்கள் அச்சாகி வந்த சமயம், பாரதி 1907-ல் வெளியிட்ட "எங்கள் காங்கிரஸ் யாத்திரை", "புதிய கட்சியின் கொள்கைகள்" என்ற இரு கிடைத்தற்கரிய பிரசுரங்களின் பிரதிகள் கிடைத்தன! மேலும், காணமற் போய்விட்டதெனக் கருதப்பட்ட "சந்திரிகையின் கதை" கடைசி இரு அத்தியாயங்களின் கையெழுத்துப் பிரதி கிடைத்துள்ளது—பாதியாய்க் கிழிந்து!

இதிலிருந்து ஒன்று நிச்சயமாய்த் தெரிகிறது. போன காலதாமதமெல்லாம் போகட்டுமென்று நாம் இப்போதாவது விரிவானதோர் தேடுதல் முயற்சியைமேற்கொண்டோமானால் இன்று கிடைத்திராத இன்னும் பல பாரதி எழுத்துகள் கிடைப்பது சாத்தியமே. ஆனால் தனிப்பட்ட ஒருவரது முயற்சி மட்டும் போதாது. தமிழிலும் பாரதியிலும் ஊக்கமுள்ள பலரும், பாரதி பதிப்புக் குழு, ஸர்வ கலாசாலைகள், பாரதி சங்கங்கள் போன்ற பலவித ஸ்தாபனங்களும் பாரதிச் சின்னங்களையும் எழுத்துகளையும் தேடும் ஆராய்ச்சி முயற்சிக்கு ஆதரவு அளித்தால் இன்னும் எவ்வளவோ காரியங்களைச் சாதிக்க முடியும்.

ஏனெனில், இத்தகைய தேடுதல் ஆராய்ச்சி வேலைக்கு நிறைய அவகாசம் வேண்டும், செலவும் ஆகிறது. இந்த நூலுக்குப் புது விஷயங்கள் சேகரிப்பதற்காகச் சென்ற மூன்றரை ஆண்டுகளில், நான், பாரதி இருந்த எட்டயபுரம், கடயம், மதுரை, புதுவை முதலிய ஊர்களுக்குப் போய் அங்கங்கே தங்கியிருந்து விசாரித்துப் பார்த்துள்ளேன். புதுவை போன்ற ஊர்களுக்கு ஒரு தடவைக்குப் பல தடவை போய் வரவேண்டியிருந்தது. பாரதியை அறிந்த சிலரைச் சந்திப்பதற்காக வேறு பல ஊர்களுக்கும் போய் வந்தேன். சில சமயங்களில் நெடுந் தூரம் பயணம் செய்தும் பயனின்றித் திரும்பிய அநுபவமும் கிட்டிற்று.

### பலவகை ஆதாரங்கள்

வெளியூர்கள் போய் வருதல் மட்டுமல்ல, சென்னை நகரிலேகூட ஆராய்ச்சி நடத்துதற்குரிய பல விஷயங்கள் இருக்கின்றன. இந்நூலுக்காக, "சுதேசமித்திரன்", "ஹிந்து" முதலிய பத்திரிகைகளின் பாரதி காலத்து இதழ்களைப் புரட்டிப் பார்த்துப் பல விவரங்கள் சேகரித்துள்ளேன். அவகாசம் இருந்தால், இன்னும் சில ஆராய்ச்சிகள் செய்திருக்க முடியும்.

பிரபலஸ்தர்களும் அல்லாதாருமான பலரைச் சந்தித்து அவர்கள் அறிந்தபடி அவர்கள் கூறும் பாரதி பற்றிய விவரங்களைச் சேர்த்தும், ஏற்கனவே வெளியாகியுள்ள பாரதி நூல்கள், பாரதி சரிதங்கள், பாரதி நினைவு நூல்கள் முதலியவற்றில் கிடைக்கும் விவரங்களைச் சேர்த்தும், எல்லாவற்றையும் ஒன்றாக்கி, ஒப்பிட்டுப் பார்த்து, எது சரியாயிருக்குமென்று தீர்மானித்து, என் கருத்துகளை இந்நூலில் வெளியிட்டிருக்கிறேன்.

பாரதி வாழ்க்கை விவரங்களில் பல வருஷமாக ஈடுபட்டிருந்தும், சென்ற சில ஆண்டு

களாக விசேஷமான ஆயத்தங்கள் செய்து கொண்டும்கூட, நூலை எழுதத் தொடங்கிய போதுதான் இத்தகைய ஆய்வு நூல் எழுது வதிலுள்ள சிரமம் தெரிந்தது. இருப்பினும், துணிந்து இந்நூலை ஓர் ஆராய்ச்சி வரலாறாக எழுத முற்பட்டேன்.

இந்நூல் சாட்சிபூர்வமான நூலாக இருக்க வேண்டும் என்பதற்காக, இதில் கற்பனைப் படங்களுக்கு இடமளிப்பதில்லையென முதன் முதலாக முடிவு செய்தேன். அதையொட்டி, இந்நூலில் உள்ள 183 படங்களில் நாலைந்து போக மற்றெல்லாப் படங்களும் புகைப் படங்களாகவே இருக்கின்றன. புகைப் படங் களிலும், கிடைத்தவரை பாரதி காலப் படங் களையும், அவைகளிலும் கூடுமானவரை அசல் படங்களையுமே உபயோகித்திருக் கிறேன்.

## இன்றைய தமிழர் கடமை

இந்நூலில் காணப்பெறும் முடிபுகள் பல தரப்பட்ட அத்தாட்சிகளைச் சீர்தூக்கிப் பார்த்து நானறிந்தவரை சரியெனக் கொண் டவை யென்றாலும், சரித்திர ஆராய்ச்சியில் இறுதியான முடிவு என்பது கிடையாது. புதுப்புது அத்தாட்சிகள் கிடைக்கக் கிடைக்க சரித்திரமே மாறி வருவது நாம் கண்கூடாகக் காணும் உண்மை. அதேபோல, பாரதி வாழ் வில் இன்று தெரியாத பல உண்மைகள் மேன்மேலும் தெரியத் தெரிய அந்த ஆதாரங் களுக்குத் தக்கபடி நமது கருத்துகளையும் மாற்றியமைத்துக் கொள்ளவேண்டும்.

இதே சமயம், பாரதியின் வாழ்க்கை விவர ஆதாரங்களைப் போலவே பாரதியின் கையெழுத்துகளையும் அவர் எழுத்துகள் வெளியான பழம் பத்திரிகைகளையும் தேடிக் கண்டுபிடித்துக் காக்க வேண்டும். எனக்குத் தெரிந்த இந்த இருபத்தைந்து ஆண்டுகளுக் குள்ளாக பல பாரதி கையெழுத்துப் பிரதி களும் அவரது கதை, கட்டுரை, கவிதைகள் வெளியான அக் காலப் பத்திரிகை இதழ் களும் நமது அஜாக்கிரதையினால் போன இடம் தெரியாமல் போய் விட்டன. இவை களில், இன்று வேறு கிடைக்காமல், பெரும் பொக்கிஷங்களானவை சில. இத்தகைய அரிய பொருள்கள் பழம் காகிதக் கடைக்குப் போயிருக்கின்றன என்பதை நினைத்தால் தமிழ் மக்கள் பாரதியை உண்மையிலேயே விரும்புகிறார்களா என்ற ஐயம்கூட எழுந்து விடுகிறது! ஆனால் ஒரு சிலர் இப்படி அலட்சி யத்தால் தவறு செய்து விட்டபோதிலும், தமிழ் மக்களில் பெரும்பாலோர் பாரதியை விரும்புகிறார்கள் என்பது உறுதி.

எனது இம்முயற்சியினால் தூண்டப் பெற் றுத் தமிழ்நாட்டு அறிஞர்களும் உற்சாக மிக்க இளைஞர்களும் பாரதி வாழ்க்கை பற் றிப் பலப் பல புதிய ஆதாரங்களையும் இது வரை வெளியாகாத பாரதி எழுத்துகளையும் தேடிக் கண்டுபிடிப்பார்களானால் அதுவே இந்நூல் கண்ட பயனாகக் கருதுவேன்.

பழைய பத்திரிகைகளும் கையெழுத்துப் பத்திரிகைகளும் கல்வெட்டுகளல்ல, அஜாக் கிரதையையும் கால வேகத்தையும் எதிர்த்து நிற்க. எளிதில் சேதப்பட்டு அழிந்து போகும் தன்மை வாய்ந்த அவைகளைக் காலத்தில் தேடிக் காப்போமானால் நாமும் பயனுறு வோம், எதிர்கால சந்ததிகளும் நம்மை வாழ்த் துவர். ஒரு முந்திய தலைமுறை பாரதியை அறி யாது தவிக்கவிட்டதென அங்கலாய்க்கி றோம். அன்று பாரதிக்கு நேர்ந்த கதி இன்று அவரது எழுத்துகளுக்கு நேர்ந்து வருகிறது. இதற்கு இன்றையத் தமிழ்த் தலைமுறை சரி யான வழி செய்ய வேண்டாமா?

பாரதி நிலையம்
32, மூஸா ஸேட் தெரு,
தியாகராய நகர்,
சென்னை 17

ரா. அ. பத்மநாபன்
8—3—1957

# நன்றி

இந் நூல் இவ் வகையில் உருவாவதற்கு இருபதாண்டுகளுக்கு மேலான எனது பாரதி ஆராய்ச்சி உதவியுள்ளது. இந்த நெடுங் காலத்தில் பாரதி அடிச்சுவடுகளைத் தேடிக் கண்டுபிடிப்பதில் எனக்கு உதவிபுரிந்த பாரதி பக்தர்கள் எண்ணற்ற பேர். அவர் களில் சிலரை எனக்கு முன்பின் தெரியாது. இந் நூல் பூர்த்தியடைந்துள்ள இத் தருணத் தில் அவர்கள் அனைவருக்கும் எனது நன்றி முதலில் உரியதாகும்.

★

ஆசிரியர் 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி, அவர்கள், பத்திரிகைத் துறையில் எனது முதல் ஆசிரியர், பத்திரிகைத் துறைக்கு என்னைக் கொண்டு வந்தவர், அதேபோல பாரதித் துறையிலும் நான் ஈடுபடக் காரணமானவர். மேலும், 1954-ல், தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவரென்ற முறையில் எனது பாரதி பொருட் காட்சிக்குப் பரிசுக் கௌரவம் அளித்து என் ஊக்கத்தை மேன்மேலும் வளர்த்துவிட்ட அவருக்கு எனது நன்றி.

"ஜெய பாரதி", "ஹிந்துஸ்தான்" பத்திரிகைகளின் ஆசிரியராக இருந்தவரும், முதிய எழுத்தாளர்களில் ஒருவராகத் திகழ்பவருமான ரா. நாராயணன் அவர்களுக்கு பாரதியன்பர் விசேஷமாய்க் கடமைப்பட்டிருக்கிறார்கள். "ஹிந்துஸ்தான்" காரியாலயச் செலவில் புதுவை சென்று 1938-லும், 1939-லும் நான் சேகரித்த படங்களும் விவரங்களும், "ஹிந்துஸ்தான்" 1938, 1939, 1940, 1941, 1942-ஆம் ஆண்டுகளில் வெளியிட்ட 'பாரதி மலர்'களுமே வழக்கமான பாதையைவிட்டு பாரதி ஆராய்ச்சியில் புதுவழி வகுத்தன.

"ஹிந்துஸ்தான்" சார்பில் நானும் யூ. நரஸிங்க ஷெனாய் என்ற புகைப்படக்காரரும் புதுச்சேரி போய் வருவதென்ற என் யோசனையைஆர்வத்துடன் ஆதரித்து நடத்திவைத்த "ஸண்டே டைம்ஸ்", "ஹிந்துஸ்தான்" ஸ்தாபகரும் திலகரின் சிஷ்யருமான எம். சுப்பராய காமத் அவர்கள், ஆசிரியர்கள் ரா. நாராயணன், ஈ. ஆர். கோவிந்தன் (தற்சமயம் "ப்ரீ இந்தியா"வை நடத்திவருபவர்) ஆகியோருக்கு எனது நன்றியைச் செலுத்துகிறேன். 1938-39-இல் "ஹிந்துஸ்தான்" செய்ததற்குப் பிறகு சுமார் இருபதாண்டுகளாகியும் இன்னும் வேறு எந்தப் பத்திரிகையும் அதே முறையில் பாரதியின் அடிச்சுவடுகளைத் தேடத் திட்டமான முயற்சி எடுக்கவில்லை என்பதே "ஹிந்துஸ்தான்" ஆசிரியர்கள் எடுத்த காரியத்தின் தனிச் சிறப்பை விளக்கும்.

பாரதி அடிச்சுவடுகளைத் தேடும் பணியில், குவளைக் கண்ணன் என்ற குவளையூர் கிருஷ்ணமாச்சாரியாரும், புதுவை அம்மாக்கண்ணுவின் புதல்வர் வே. வேணுகோபால் நாயக்கரும், பரலி சு. நெல்லையப்பரும், வ. ரா. வும், 'பாரதிதாச'னும், பாரதியின் தாய்மாமன் (தற்சமயம் சதாசிவானந்தாவென விளங்கும்) ரா. சாம்பசிவய்யர், பாரதியின் மனைவி செல்லம்மா பாரதி, புதல்வியர் தங்கம்மா பாரதி, சகுந்தலா பாரதி, இளைய சகோதரர் சி. விசுவநாதன், பந்து வி. ஹரிஹர சர்மா முதலியோரும், பாரதியின் நெடுங்கால நண்பர் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் (ஸ்ரீ. ஸ்ரீ. ஆசார்ய) அவர்களும் அளித்துள்ள உதவி முக்கியமானது.

எட்டயபுரத்தில் பாரதியின் பள்ளித்தோழராகவும் பிற்காலத்தில் தொடர்ந்த நண்பராகவும் விளங்கிய ச. சோமசுந்தர பாரதி அவர்களும், பாரதி சென்னைக்கு முதன் முதலாக வந்தது முதலே அவரை அறிந்திருந்த சா. துரைசாமி அய்யர், வி. சக்கரை முதலியோரும், புதுவையில் பாரதியுடன் பழகிய நண்பர்கள் பிரம்மராய அய்யர் என்ற புரொபஸர் என். சுப்பிரமணிய அய்யர், அமிர்தா என்ற அமுதன், பொன்னு ராஜா பகதூர், டி. விஜயராகவாச்சாரியார் முதலியோரும், மதுரையில் அவருடன் உழைத்த ப. ரா. அய்யாசாமி அய்யர், காசியில் அவரையறிந்த பண்டிட் எஸ். நாராயணய்யங்கார் முதலியோரும் பாரதியைப் பற்றிப் பல அனுபவ விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள். பாரதி சம்பந்தப்பட்ட பொருள்கள் சிலவற்றையும் அவர்கள் கொடுத்து உதவியிருக்கிறார்கள்.

பாரதியாரும் காந்தியடிகளும் சென்னையில் தம் இல்லத்தில் சந்தித்தது பற்றிய வருஷம் முதலான சில சந்தேகங்களை ஸ்ரீ. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் நிவர்த்தித்தார்கள். அவருக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

மேலும், கவிஞரின் செட்டிநாட்டு விஜயம் பற்றி கானாடுகாத்தான் பாரதி பக்தர் வை. சு. சண்முகன் அவர்களும் மகளிர் இல்லம் சொ. முருகப்பா அவர்களும் கடிதமூலம் தெரிவித்த தகவல்களும், கடயம் வாழ்க்கைபற்றி மதுரை தேசபக்தர் ரா. ஸ்ரீநிவாஸ வரதன் அளித்த சான்றுகளும் ஏற்கனவே தெளிவாக இராத பல விவரங்களைத் தெளிவாக்க உதவின.

சங்கு சுப்பிரமணியம், சி. சு. செல்லப்பா, டாக்டர் வ.வே.ஸு. கிருஷ்ணமூர்த்தி (வ.வே. ஸு. அய்யரின் புதல்வர்), எம். ஆர். வைத்திய

நாத சர்மா (சுப்பிரமணிய சிவாவின் சகோதரர்), டாக்டர் எஸ்.டி. நரசிம்மன் ('இந்தியா' ஸ்தாபகர் எஸ். என். திருமலாச்சாரியாரின் புதல்வர்), மேஜர் வி. எஸ். மகாதேவன் (புதுவை சாமிநாத தீக்ஷிதரின் புதல்வர்), 'மதுரமித்திரன்' ந. சுப்பிரமணியம் முதலியோர் பல படங்களையும் இதர சான்றுகளையும் கொடுத்திருக்கிறார்கள். அவர்களுக்கும், சுரேந்திரநாத் ஆர்யாவின் படத்தை வாங்கிக் கொடுத்த பச்சையப்பன் ட்ரஸ்ட் நிர்வாகிகளுக்கும், சுரேந்திரநாத் ஆர்யாவின் கிழ் வேலை செய்துள்ளவரும் படத்தைக் கொடுத்துதவியவருமான ஆதிகேசவ பிள்ளைக்கும் எனது நன்றி.

வ. உ. சிதம்பரம் பிள்ளையின் பாரதி நினைவுக் குறிப்பு நூலையும் புகைப்படத்தையும் தந்துதவிய வ. உ. சி. சுப்பிரமணியம் (வ. உ. சி. யின் புதல்வர்), எட்டயபுரப் படங்கள் தந்துதவிய ரா. சாம்பசிவய்யர், அமிர்தசாமி, "பகீரதன்', "கல்கி" அலுவலகம், ஸத்திய மூர்த்தி காலப் படங்களை உதவிய அவரது அருமைப் புதல்வி லக்ஷ்மி, பாரதிதாசன் படமுதவிய சோ. சாமிநாதன், அரவிந்தர் படங்களும் பத்திரிகையும் உதவிய அரவிந்தாசிரமம், மணக்குள விநாயகர் படமுதவிய ரா. கனகலிங்கம், சுதேசி பத்மநாபய்யங்கார் படமுதவிய அவரது புதல்வர் பி. பார்த்தஸாரதி, பாரதியை ஆதரித்த வள்ளல்கள் எம். ராமசேஷ அய்யர், வை. சு. சண்முகன் படங்களை முறையே தந்த கணேஷ் கம்பெனி அதிபர் சுப்பையர், வை. சு. வின் பேரன் ராஜா சண்முகம் முதலியோருக்கும், ஸ்ரீ. ஸ்ரீ. ஆசார்ய வின் தற்காலப் படம் உதவிய எம் ஓ. அழகிய சிங்கராச்சாரிக்கும், இன்னும் பற்பல பேர்களுக்கும் இச்சமயம் நன்றி செலுத்த வேண்டும்.

சுப்பிரமணிய சிவாவின் "ஞானபாநு" பத்திரிகை இதழ்களின் புகைப் படங்களும், பாரதியின் பாடல் முதன்முதலில் வெளியான "விவேக பாநு" பத்திரிகைப் பக்கமும் என் பார்வைக்கு வருமாறு உதவிய மதுரை அன்பரும் 'பரிதிமாற் கலைஞன்' வி. கோ. சூரிய நாராயண ஸாஸ்திரியின் பேரருமான வி. ஜி. சீனிவாஸனின் உற்சாகமான உதவியை நான் விசேஷமாய்க் குறிப்பிட வேண்டும்.

மேலும், பாரதி, வ. வே. ஸு. அய்யர், திரு. வி. க. மூவருடனும் நெருங்கிப் பழகியுள்ள வெ. சாமிநாத சர்மா அவர்களும், பாரதி ஆராய்ச்சியாளர் பெ. தூரன் அவர்களும், பாரதி நண்பர் கே. எஸ். வெங்கட்ராமனும் இந்நூல் தயாரிப்பதில் அளித்துள்ள உற்சாகத்துக்கும் இதர உதவிகளுக்கும் நன்றி செலுத்துகிறேன்.

பாரதியுடன் "இந்தியா"வில் இருந்த பழம் பத்திரிகையாளர் வேங்கட ஆரியா பத்திரமாய்ச் சேர்த்து வைத்திருந்த "இந்தியா" இதழ்கள் தொகுதி இந் நூல் அமைப்புக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கிறது. இந்தப் பிரதிகளே முதலில் "இந்தியா" காரியாலத்தில் இருந்தன வென்றும், பாரதியே இவற்றை உபயோகித்திருக்கிறார் என்றும் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் மூலம் அறியும்போது, இவைகளை இவ்வளவு ஒழுங்காகவும் பத்திரமாகவும் சேர்த்து வைத்திருந்த வேங்கட ஆர்யா அவர்களுக்கு நாம் பன்முறை நன்றி செலுத்த வேண்டுமென்று தோன்றுகிறது.

பாரதி காலத்து "சுதேசமித்திரன்" இதழ்களையும், "ஹிந்து" இதழ்களையும் பார்த்து அக் காலத்திய செய்திகளைப் பிரதியெடுத்து உபயோகித்துக் கொள்ள "மித்திரன்" நிர்வாகிகளும் "ஹிந்து" நிர்வாகிகளும் அனுமதித்துள்ளார்கள். அவர்களுக்கு என் நன்றி.

முடிவாக, 1936-இல் நான் முதன்முதலாக அறிந்ததுமுதல் இன்றுவரை பற்பல யோசனைகளைத் தெரிவித்து பாரதிப் பணியில் எனக்கு ஊக்கமூட்டி வருபவரும், தமது தள்ளாத வயதிலும் அடிக்கடி கடிதமெழுதி இன்று செய்வதற்கிருக்கும் பணிகளை நினைப்பூட்டி வருபவரும், "சங்கு சுட்டாலும் வெண்மை தரும்" என்பதற்கொப்ப தமது குடும்பத்தின் பெரும் செல்வத்தை பாரதிக்காகவும் சிதம்பரம் பிள்ளையின் கப்பல் முயற்சிக்காகவும் தேசத்திற்காகவும் அள்ளிக் கொடுத்துப் பொருட் செல்வம் குன்றிய இந் நாளிலும் மங்காத இன்முறுவலுடன் பக்குவம் நிறைந்த வாழ்க்கைக்கு உதாரணமாக விளங்கி வருபவருமான 81 வயது இளைஞர் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் (ஸ்ரீ. ஸ்ரீ. ஆசார்ய) அவர்கள் மனமுவந்து இந்நூலுக்கு அளித்துள்ள முகவுரைக்கு அப்பெரியவருக்கு உளம் கனிந்த நன்றி செலுத்துகிறேன்.

இப் பணியில் என் மனைவி மக்கள் புரிந்துள்ள பற்பல உதவிகளை நான் மறக்க இயலாது. அதே போல, எனது பல குறைபாடுகளின் நடுவே இப் பெருநூலை சாதித்துக் கொடுத்த அமுத நிலைய ஊழியர்களுக்கும் நன்றி உரியது.

பாரதிப் பணியில் எனைப் பங்குகொள்ளச் செய்த இறைவனுக்கும் நன்றி செலுத்தி, இனி வரும் காலத்தில் இப் பணி பன்மடங்காய்ப் பெருகி உலகெங்கும் பாரதி எண்ணங்களும் தேமதுரத் தமிழோசையும் பரவ வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

ரா. அ. ப.

# பொருளடக்கம்

—

# பட அட்டவணை

### பாரதி கண்ட தென்னாடு

கவியரசர் சி. சுப்பிரமணிய பாரதி தென்னாட்டில் வசித்தோ விஜயம் செய்தோ உள்ள ஊர்களைக் காட்டும் தென்னாட்டுப் படம். எட்டயபுரத்திற்கு, கோயில்பட்டி ஸ்டேஷனில் இறங்கி பஸ்ஸில் போக வேண்டும்.



# 19–ஆம் நூற்ருண்டில் தமிழ் நாடு

**ப**த்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வெள்ளையர் ஆட்சி நாட்டில் வலுவாக ஏற்பட்டது.

முதன் முதலில், பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதியில், தென் தமிழ் நாட்டில் ஆதி சுதந்திரப் போராட்டம் நடந்தது. "பாளையக்காரர் சண்டை" என்று அதை வெள்ளையர் வர்ணித்தனர். அக்காலத்திய ஆங்கிலம் படித்த அறிவாளிகளும் அதை அப்படியே ஏற்றனர். ஆனால் கட்டபொம்மனும் ஊமைத் துரையும் சிவத்தையாவும் நடத்தியது நமது சுதந்திரப் போராட்டத்தின் ஆரம்பம் என்று பிற்காலத்தவர் உணர்ந்து விட்டனர்.

கட்டபொம்மன் சம்பவம் நடந்து ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் இரண்டாவது சுதந்திர முயற்சி நடந்தது. அதையும், ஏளனமாக, "சிப்பாய்க் கலகம்" என்றனர் ஆங்கிலப் பண்டிதர்கள். ஹிந்துவும் முஸ்லிமும் ஒன்று சேர்ந்து, சகோதர பாவத்துடன் அந்நியரை எதிர்த்த சுதந்திரப் போர் என்று இதையும் பிற்காலத்திய மக்கள் உணர்ந்தனர்.

இந்தப் போராட்டமும் வாள் வலிமையால் ஒடுக்கப்பட்டபோது, பிரிட்டிஷ் ஆட்சி இந்நாட்டில் ஸ்திரமாக வேரூன்றிற்று. "கும்பெனி ஆட்சி" முடிந்து, "மாட்சிமை தங்கிய விக்டோரியா மகாராணியின் கருணை மிக்க ஆட்சி" ஏற்பட்டது. பழைய கும்பெனிக் கவர்னர் ஜெனரல்கள் போய், ராஜப் பிரதிநிதிகள் வந்து சேர்ந்தனர். இந்தியாவின் தலைவிதிக்கு பிரிட்டிஷ் பார்லிமெண்ட் முழுப் பொறுப்பும் ஏற்றது.

ஆனால், இந்திய மக்களைப் பொறுத்த வரையில் நிலைமையில் விசேஷமான லாபம் ஏதுமில்லை. இந்திய சுதந்திரப் போராட்டத்தை ஒடுக்கவென ஏற்பட்ட கெடுபிடிகள் ஒரு புறம் நீடித்து வந்தன. மறுபுறம், "காட்டுமிராண்டி" இந்தியர்களுக்கு ஆங்கிலக் கல்வி மூலம் மேலை நாகரிக வாசனை உண்டாக்கி, படிப்படியாக இவர்களை மனிதர்களாக்குவதான "சீர்திருத்த" முயற்சிகள் நடந்துவந்தன. ஏமாளி இந்திய மக்களும் பிரிட்டிஷ் அரசாங்கத்தை யாராலும் அசைக்க முடியாதென்றும், இந்தக் கருணை மிக்க ஆட்சி இல்லாவிட்டால் பெருங் கேடுதான் விளையும் என்றும் நம்பி வந்தார்கள். அது ஒரு விநோதமான காலம்.

அது, நகர வாழ்க்கை பரவாத காலம். கிராம வாழ்க்கை பாழாகாத காலம். காப்பிக் கடைகள் தோன்ருத காலம். சினிமாக்கள் இல்லாத காலம் நாடக மேடை கூட இல்லாத காலம். தெருக் கூத்துகளும், சதிர்க் கச்சேரிகளுமே இருந்த காலம். தேரும் திருவிழாவுமே மக்கள் மனதைக் கவர்ந்த காலம். ரூபாய்க்கு இருபது படி அரிசி விற்ற காலம். நோட்டுகள் பரவாத காலம். மேல் உத்தியோகங்களெல்லாம் வெள்ளைக்காரரே வகிக்கத் தக்கவை என்றிருந்த காலம். தாசில் என்ருல் இந்திரலோகப் பிறவி என ஜனங்கள் நினைத்த காலம். கோச்சு வண்டியும் ஸாரட்டு வண்டியும் மிகப் பெரிய செல்வத்தின் சின்னங்களாய்க் கருதப்பட்ட காலம். மோட்டார்கள் ஏற்படாத காலம். சலங்கை கட்டிய இரட்டை மாட்டு வண்டிகள் ஜல் ஜல்லென்று பாதைகளில் முழங்கிய காலம். யந்திரக் கைத் தொழில்கள் தோன்ருத காலம். நாட்டுக் கைத் தொழில்கள் நலிந்த காலம்.

'விதி விதி' என்று ஏழ்மை முதல் நோய் வரை எல்லாவற்றையும் மந்திர தந்திரத்தால் போக்க முயன்ற காலம். இகம் பரமென்று வாயளவில் பேசிக்கொண்டே, பட்டம் பதவிகளுக்குப் பத்தாயிரம் சலாம் போட்ட காலம். குட்டி ஜமீன்தார்களெல்லாம் ராஜ மகாராஜாக்களாய் விளங்கிய காலம். நம் மதம், நம் கலாசாரம் என்ற உணர்வே இல்லாத காலம். சீமைப் படிப்பு, சீமை மனேபாவம் இவையே சிறந்தவை யென்ற காலம். வெள்ளைக்காரனைப்போல நாமும் யந்திர சக்தியைக் கையாளக் கற்ருல்தான் முன்னேற முடியும் என்ற உலகாயத வாதம் தோன்றிய காலம்.

ராமன் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டாலென்ன என்றும், பிரிட்டிஷ் ராஜ்யமே ராம ராஜ்யமென்றும், ஆளும் சக்கரவர்த்தினிக்கு அடி பணிவதே தேச பக்தி யென்றும் கொள்கை மலிந்திருந்த அக் காலத்திலும், இந்தப் பழம் பெரும் நாட்டில் பல பெரும் மணிச் சுடர்கள் தோன்றின. ராஜாராம் மோஹன் ராயும், கேஷுப் சந்தர் ஸென்னும் ராமகிருஷ்ண பரமஹம்ஸரும், விவேகானந்தரும், வள்ளலாரும் இந்தியப் பண்பாட்டின் பெருமையை, இந்திய மதங்களின் பெருமையை வலியுறுத்தினர். பண்பாட்டின் பக்தியோடு தேச பக்தியும் வளரலாயிற்று. 1885-ல் இந்திய தேசீய காங்கிரஸ் மகா சபை தோன்றிற்று. அதற்கு மூன்று வருஷம் முன்னல், 1882-ல் தென் பாண்டி நாட்டில் எட்டயபுரம் என்ற ஜமீனில் சுதந்திர தேவியின் திருவவதாரமாய்ப் பிறந்தது ஓர் ஆண் குழந்தை. முன்னர் கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்த கும்பலைச் சேர்ந்த எட்டயபுரத்தில் இக் குழந்தை பிறந்ததே விதியின் விளையாட்டுகளில் ஒன்று.

# எட்டயபுரம்

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் எட்டயபுரம் ஜமீன் மிகுந்த கீர்த்தியுடன் விளங்கியது. அரசியலில் அதிக சிரத்தை காட்டாவிட்டாலும், சுதந்திரம் என்ற பேச்சு துளியும் இல்லாவிட்டாலும், அங்கே தாய்மொழிக்கு மரியாதை இருந்தது. எட்டயபுர மன்னர் தமது ஜமீனை இரண்டாவது மதுரை ஆக்கிவிட விரும்பினர். இதில் அவருக்கு உறுதுணையாக அவரது சிற்றப்பன் வெங்டேசுர எட்டப்பன் நின்றூர்.

இவர்கள் காட்டிய ஊக்கத்தால் தமிழ்ப் புலவர்களும் சங்கீத மணிகளும் எட்டயபுரத்தை நாடினூர்கள்.

“தென் பாண்டி நாட்டிலே, பொதிய மலைக்கு வடக்கே இருபது காத தூரத்தில் பூமி தேவிக்குத் திலகம் (வைத்து அது உலர்ந்து போயிருப்பது) போலக் கவுண்டபுரம் என்ற நகரம் திகழ்ச்சி பெற்றது. அதைத்தான் பாமர ஜனங்கள் கவுண்டனூர் என்பார்கள். இந்நகரத்தில் நமது கதை தொடங்கும் காலத்திலே, மகா கீர்த்திமானுகிய ராமசாமிக் கவுண்டரவர்கள் அரசு செலுத்தி வந்தார்கள். வெளியூர்ப் பாமர ஜனங்கள் இவரை ‘ஜமீன்தார்’ என்பார்கள். கவுண்டபுரத்திலே இவருக்கு மகாராஜா என்று பட்டம்......ராமசாமிக் கவுண்டர் (இவருடைய முழுப் பெயரைப் பட்டங்கள் சகிதமாகப் பின்பு சொல்கிறேன்.) தமிழில் அபிமானமுள்ளவராதலால் கவிதை பாடத் தெரிந்தவர்களுக்கு அவ்வூரில் மிகுந்த மதிப்புண்டு.”

பாரதியாரது சுயசரிதம் எனத் தக்க “சின்னச் சங்கரன் கதை”யில் கவுண்டனூர் அரசரின் அன்றாட வாழ்க்கை, அவரது சபையை அலங்கரித்த பண்டிதப் புலவர்கள், அவர்களிடையே சின்னச் சங்கரன் (பாரதி) இடம் பெற்றது, பண்டிதர்களது பொறாமை, அவர்களிடையே சூழ்ச்சிகள் முதலியன விவரிக்கப் பெற்றுள்ளன.

“சின்னச் சங்கரன் கதையில்” விவரிக்கப் பட்டுள்ள எட்டயபுரம் ராஜசபை, அந்த ஜமீனில் அக் காலத்தில் இருந்த ஊழல்களை நன்கு எடுத்துக்காட்டுகிறது. ஊரிலுள்ள அனைவர் வீட்டிலிருந்தும் உணவுப்பதார்த்தங்களைத் தருவித்தல், கோழிச் சண்டை, சிங்கார ரஸப் பாடல்களை—முக்கியமாக “கூளப்ப நாய்க்கன் காதல்” என்ற பாடலை—ரஸித்தல், தமக்கு வரும் மனுக்களுக்கு யதேச்சாதிகாரமாய் உத்தரவிடுதல்—இத்தகைய விஷயங்கள் அங்கு சகஜமாய் நடந்தேறி வந்தன.

எட்டயபுரம் மன்னரின் அரண்மனையில் காலை முதல் இரவு பத்து மணி வரை தமிழ் வித்வான்கள், தெலுங்கு வித்வான்கள், ஸமஸ்கிருத வித்வான்கள், ஸங்கீத வித்வான்கள் குழாம் மொய்த்துக் கொண்டிருக்கும். எப்பொழுதும் வித்வத் விஷயமாய் விவகாரங்களும் யுத்தங்களும் நடந்து கொண்டேயிருக்கும்.

எட்டயபுரம் அறிஞர்களுக்கு உறைவிடமாய் விளங்கியதால், அங்கு சென்று முன்னுக்கு வரலாமென்று, தம் சொந்த ஊராகிய சீவலப்பேரியை விட்டு எட்டயபுரத்துக்கு வந்தார் சின்னசாமி அய்யர் என்ற அறிஞர். பிரஹசரண பிராமணராகிய இவர் தமிழில் சிறந்த பண்டிதர். ஆங்கிலத் தேர்ச்சியும் கலாசாலை உதவியின்றியே அடைந்தவர். மேனுட்டுக் கணித முறைகளில் நிபுணர். தர்க்கத்தில் நிகரற்றவர். இவ்வளவும் போதாதென்று, நவீன யந்திர சாஸ்திர ஆராய்ச்சியிலும் திறமை படைத்தவர். எந்த யந்திரமாறுலும் அக்கக்காய்ப் பிரித்துப் பார்த்து, மீண்டும் பூட்டி ஓட்டும் சாமர்த்தியசாலி.

அறிவாளி சின்னசாமி அய்யருக்கு எட்டயபுரம் அரசவையில் முதல் ஸ்தானம் கிடைத்தது. அவர், தமது திறமைக்கு அறிகுறியாக, சுமார் 1880-ம் ஆண்டிலேயே பஞ்சு அறைக்கும் மில் ஒன்றை எட்டயபுரத்தில் நிறுவிப் புகழெய்தினர்.

எதிரே உள்ள பக்கத்தில், மேலே, ஆண் சிங்கமெனத் தோற்றமளிப்பவரே பாரதி பிறந்த சமயம் எட்டயபுரம் மன்னராக இருந்தவர். “சின்னச் சங்கரன் கதை”யில் வரும் ராமசாமிக் கவுண்டர் இவரே. பாரதி இளைஞராக இருந்த சமயம் அவருடைய துடுக்குப் பேச்சிலும் பாட்டிலும் லயித்துப் போனவர் இவர். பிற்காலத்தில், காசியிலிருந்த பாரதியை, 1902-ல், மறுபடி எட்டயபுரம் அழைத்து வந்தவரும் இவரே.

மன்னரின் சிற்றப்பனும், அவர் சந்ததியின்றிக் காலமானபின் பட்டத்துக்கு வந்தவருமான, வெங்கடேசுர எட்டப்ப நாயக்கர் படம் கீழே உள்ளது. மன்னரிலும் சிறந்த தமிழ்ப் பற்றுள்ள இவரும் இளம் பாரதியின் மேதையில் மோகித்துப் போனவர். பாரதி ஆறேழு வயதில் இயற்றியதோர் பாடலை இவர் அச்சிட்டுப் போற்றியதாகத் தெரிகிறது; ஆனுல் அப் பாடல் இப்போது கிடைக்கவில்லை. 1919-ல் புதுவையிலிருந்து திரும்பியபின் பாரதி சீட்டுக்கவி அனுப்பியது இம்மன்னருக்கே.

2. **எட்டயபுர மன்னர்**: 1902-ல் காசியிலிருந்து பாரதியை அழைத்து வந்தவர். "சின்னச் சங்கரன் கதை"யில் குறிப்பிடப்படுபவர்.



3. **எட்டயபுர மன்னர்: 1919**-ல் மன்னராக இருந்த வெங்கடேசுர ரெட்டப்பர். தமிழ்ப் பற்றுள்ளவர், இளம் பாரதியிடம் லயித்தவர். இவருக்கே பாரதி சீட்டுக்கவி அனுப்பியது. (கீழே இடப்புறம்.)

4. **எட்டயபுரம் அரண்மனை**: இளம் பாரதியின் அருட்கவிதைகள் முதன் முதலாக ரசிக்கப்பட்ட இடம். (கீழே வலப்புறம்.)







**5. கவிஞர் பிறந்த வீடு**: எட்டயபுரத்தில் பாரதி பிறந்த வீடு; அவருடைய தாய்வழிப் பாட்டனர் இல்லம்.



**6. பிறந்த அறை**: பாரதி பிறந்த அறையை அவரது தாய் மாமன் ரா. சாம்பசிவய்யர் சுட்டிக் காட்டுகிறுர்.

# சித்திரபாநு, கார்த்திகை, மூலம்

கலை, தொழில் இரண்டிலும் புகழெய்திய சின்னசாமி அய்யர் தமது தாய்மாமன் மகளான லக்ஷ்மி அம்மாளை மணந்திருந்தார். லக்ஷ்மி அம்மாள் அழகிலும் அருளிலும் பெயருக் கேற்பச் சிறந்திருந்தார்.

இந்த அந்நியோந்நியத் தம்பதிகளுக்கு சித்திரபாநு வருஷம் கார்த்திகை மாதம் 27-ந் தேதி மூல நக்ஷத்திரத்தில் (1882, டிஸம்பர், 11) மூத்த குழந்தை பிறந்தது. பிள்ளைக் குழந்தை. சுந்தர வடிவம். சுப்பிரமணியன் என்று பெயரிட்டனர். செல்லப் பிள்ளை. வீட்டாராலும் ஊராராலும் பிரியமாக "சுப்பையா" என்றழைக்கப்பெற்முன். இவனே பிற்காலத்தில் ஊரும் உலகும் பெருமைப்படும்படி சுப்பிரமணிய பாரதி ஆக விளங்கினுன்.

சுப்பையா பிறந்த நேரத்தை யாரும் சரியாய்க் குறிக்கவில்லை. ஆகையால், பாரதி யாருக்கு ஜாதகம் இல்லாமல் போய்விட்டது.

சுப்பையா நாளில் பெரும்பகுதியைத் தாய் வழிப் பாட்டனுர் ராமசாமி அய்யர் வீட்டிலும் சிறு பகுதியைப் பெற்றேர் வீட்டிலும் கழிப்பான். தாயின் உடன் பிறந்த சகோதரிகளும் சிறுவனை மிகச் செல்லமாக வளர்த்தார்கள். சிறுவனும் துடுக்கும் மிடுக்குமாகப் பேசுவான். எல்லாரும் அவனுடன் உரையாடுவதை விரும்பினர்.

சுப்பையாவுக்கு வயது ஐந்து. திடீரெனப் பேரிடி வீழ்ந்தது. சுப்பையாவின் தாய் காலமாகிவிட்டாள். தாயில்லாக் குழந்தை என்று பாட்டனுர் வீட்டில் இன்னும் அதிக செல்லம் காட்டினுர்கள்.

தாம் தாயின் அன்பை இழந்துவிட்டதால், பிற்காலத்தில், வயதுவந்து காளைப் பருவமெல்லாம் தாண்டிய பிறகுகூட, சுப்பையா "அம்மா" என்ற சொல்லைக் கேட்டால் ஒரு க்ஷணம் துடித்துப் போவாராம். இளமையில் தாயை இழந்த அவர், பிற்காலத்தில் அன்னை பராசக்தியையே தம் இஷ்ட தெய்வமாகக் கொண்டதும் இக்காரணத்தினுல்தானே என்னவோ?

சுப்பையாவின் தாய் காலமான இரு ஆண்டுகளில் தந்தை மறுமணம் செய்துகொண்டார். தமது மறுமணத்தின்போது புத்திரன் சுப்பையாவுக்கு உபநயனமும் செய்வித்தார் சின்னசாமி அய்யர். மாற்றுந் தாய் வள்ளியம்மாள் குணவதி. சுப்பையாவைத் தன் குழந்தை போலவே அன்போடு நடத்தினுள். சுப்பையா சங்கோஜி. தந்தையிடம் எதிரே நின்று பேசவும் பயப்படும் சுபாவமுள்ளவராயிருந்தார் என்று செல்லம்மா பாரதி கூறுகிறுர். பாரதி தமக்கு ஆகவேண்டிய காரியங்களைத் தந்தையிடம் கேட்டுப் பெறுவதற்கு பதிலாக சிற்றன்னையிடமே தாராளமாய்க் கேட்டுப் பெற்று வந்தாராம்.

சுப்பையாவின் இளமைத் தோழர்களில் ஒருவர் அவருடைய தாய்மாமன் சாம்பசிவ அய்யர். சுப்பையாவை விட இரண்டே வயது பெரியவர் இவர். இரு சிறுவர்களும் சேர்ந்து ஊர் சுற்றுவார்கள். ஸ்ரீ ஆர். சாம்பசிவய்யர் இன்றும் ஜீவிதமாயிருக்கிறுர்.

இளமையில் ஒரு சமயம் சுப்பையா உயிர் தப்பியதைச் சாம்பசிவய்யர் கூறியிருக்கிறுர்.

பாரதியின் தந்தை சின்னசாமி அய்யர் நடத்திய பஞ்சாலைக்குச் சுப்பையாவும் சாம்பசிவமும் அடிக்கடி போய்வருவார்கள். தம் மகன் யந்திரக் கலை பயில இது ஊக்கமளிக்குமெனச் சின்னசாமி அய்யர் மகிழ்வார். ஒரு சமயம், சாயந்திரம் அந்தி வேளையில், இரு சிறுவர்களும் பஞ்சாலைக்குள் சுவரேறிக் குதித்து உள்ளே சென்றுர்கள். அங்கே சின்னசாமி அய்யரின் மேஜை திறந்திருந்தது. காசு கிடைக்குமாவெனச் சிறுவர்கள் மேஜையைக் குடைந்தனர். காசு இல்லை. பளபளப்பான குழாய் ஒன்று இருந்தது. அது ஒரு சுழல் துப்பாக்கி. சிறுவர்களுக்கு அது என்னவென்று தெரியாது. சாம்பசிவம் அதை எடுத்து விஷமம் செய்துகொண்டிருந்தான். துப்பாக்கிக் குதிரையை டப், டப்பென்று அழுத்தினுன். காலி அறைகள் போன சமயம் வெறும் சத்தம் கேட்டது. அடுத்தாற்போல் தோட்டா இருந்த ஒரு அறை வந்ததும், டபார் என்று வேட்டுப் பறந்தது. எதிரேயிருந்த பாரதியின் தலைக்கருகில் குண்டு பாய்ந்து சென்றது. பாரதி மயிரிழையில் பிழைத்தார்!

சின்னசாமி அய்யர் தம் புதல்வன் நன்றுகப் படித்து ஆங்கிலக் கல்வியில் தேறி பெரிய உத்தியோகம் பார்க்க வேண்டுமென்று விரும்பினுர். குழந்தையாக ஆடிப் பாடி, தோழர்களுடன் உறவாடி ஊர் சுற்றி வரவேண்டிய இளம் வயதில் பாடம், படிப்பு, புஸ்தகம் என்று தந்தையின் உத்தரவினுல் தவித்தார் பாரதி. பகற் கனவுகள் காண்பதிலும், கவிகள் இயற்றுவதிலும், இயற்கை எழிலை நுகர்வதிலுமே அவருக்கு விருப்பமிருந்தது. பள்ளிக்கூடத்துக்குக் கொண்டுபோகும் கற்பலகை, குச்சி, புத்தகங்களை அவர் மறந்தே விடுவார். பாடங்களைக் கவனிக்கமாட்டார். உபாத்தியாயர் தம்மை நிற்கச் செய்து திட்டினுல், அவர் உபயோகித்த சொற்களுக்கு அடுக்குமொழிகளைசொல்லிப்பார்த்துக்கொள்வாரே தவிர பாடத்தை கவனிக்க மாட்டார்!

# சுப்பையா "பாரதி" ஆனது

தந்தை எவ்வளவுக்கெவ்வளவு நவீன ஆங்கிலக் கலை, கணிதம், யந்திர அறிவு முதலியவைகளை வற்புறுத்தினரோ அவ்வளவுக்கவ்வளவு இளம் சுப்பையாவுக்கு அவை வேப்பங்காயாக இருந்தன. தமிழ் இலக்கியமும் புலவர் விவாதங்களும் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. வயதான புலவர் பேச்சுகளில் சிறு குழந்தையான அவனும் கலந்துகொள்வான். இது தகப்பனுர் இல்லாத சமயம் நடக்கும். தமிழபிமானமுள்ள மன்னரும் அவருடைய சிற்றப்பனும் சுப்பையாவின் ஆர்வத்தை ஊக்குவித்தார்கள். சிறுவன் சொந்தமாய்க் கவிதை புனைந்து வந்து மன்னர் மகிழப் பாடிக் காட்டுவான்!

எட்டயபுரத்தில் கம்ப ராமாயணத்துக்குப் பெயர் போன ஒரு கிழட்டுப் பண்டிதரிடம் பாரதி இலக்கிய பாடம் கேட்டான். இளமைத் தோழர் சோமசுந்தர பாரதியும் அவனுமாக, திருட்டுத்தனமாய்க் கோயில் பல்லக்குகளின் நடுவே உட்கார்ந்துகொண்டு தமிழ் இலக்கியம் படித்தார்களாம். "எங்கள் இருவருடைய வீட்டிலும் நாங்கள் தமிழ் படிக்க அவ்வளவு தடை இருந்தது. தமிழ் படித்துக் கெட்டுப் போகிருன்களே என்ற வசவு கிடைக்கும்" என்று சோமசுந்தர பாரதி சொல்கிருர்.

சுப்பையாவின் தாய்வழிப் பாட்டனுர் மட்டும் தந்தைபோலின்றி அவன் தமிழ் படிப்பதற்கு ஊக்கமளித்தார். தந்தைக்கும் மகன் தமிழ் கற்க வேண்டாமென்ற கருத்தல்ல; புதிய கலைகளை முதலில் கற்கவேண்டுமென்றே எண்ணம். ஆனுல் கம்பனையும் வள்ளுவனையும் சுவைத்த சுப்பையா அவர்களைப்போல் புகழெய்தவே விரும்பினுன்.

சுப்பையாவின் இளமை பற்றிச் ஸ்ரீ சோமசுந்தர பாரதி பல அழகான சம்பவங்களை விவரித்துள்ளார். அவர் கூறுகிருர்:

"பாரதியார் தமது ஏழாவது பிராய முதலே அருமையான தமிழ்க் கவிகளை விளையாட்டாக விரைந்து கவனஞ் செய்வதைக் கண்ட வித்வான்கள் நமது கவியின் தந்தையாரைப் புகழ்ந்திருப்பதை நான் நேரில் அறிவேன். எட்டு ஒன்பது ஆண்டுகளில் ஸர்வ சாதாரணமாய், கொடுத்த ஸமஸ்யைகளை வைத்து அற்புதமான கவிகளைப் பூர்த்தி செய்து பெரிய புலவர் கூட்டங்களைப் பிரமிக்கச் செய்த பல காலங்களிலும் நான் கூட இருந்திருக்கிறேன்."

குமரகுருபரர், ஞானசம்பந்தர்போல் அருள் பெற்ற கவி பாரதி என்பது சோமசுந்தர பாரதியின் அபிப்பிராயம்.

பதினெரு வயதில் சுப்பையாவுக்கு பாரதி என்ற பட்டம் கிடைத்தது. இளம் புலவனைச் சோதிக்க ஒரு பெருஞ் சபை கூடியது. பெரும் புலவர்கள் புதிது புதிதாகக் கொடுத்த அடிகளைக் கொண்டே பூர்ணமான கவிதைகளைப் பாடி, சபையோரை வியப்பித்தான் சுப்பையா. சிறுவனுடைய கவித்திறனையும் அமிர்த வாக்கையும் கண்ட புலவர்கள் "பாரதி" (ஸரஸ்வதி) என்ற பட்டத்தை அவனுக்களித்தனர்.

சுப்பையாவுக்கு ஏற்பட்ட பெருமையை எல்லாருமே மகிழ்வுடன் ஏற்கவில்லை. அவனை மட்டம் தட்டும் எண்ணத்துடன் சிலரும் அவன் பெருமையை அறியும் கருத்துடன் சிலரும் அவனைச் சோதித்தார்கள். ஒரு பண்டிதர் வாழை, கமுகு இரு பொருள்களும் ஒரே பாட்டில் வரும்படி பாடச் சொன்னுர். அவர் கேட்டு வாய்மூடு முன்னே பாரதி பாடிவிட்டான். மற்றொரு சமயம், எட்டயபுரம் மன்னரும் புலவோரும் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்துபோல் பாடுதல் யாராலும் முடியாதென்றனர். அன்று மாலையே "பச்சைத் திருமயில் வீரன்" என்று தொடங்கும் ஒரு சிந்தைப் பாடினுன் பாரதி. அதே போல, படிக்காசுப் புலவர் பாடலொன்றைக் கேட்டதும், "செல்வத்துட் பிறந்தனமா" என்று தொடங்கும் பாடலைப் பாடினுன்.

பாரதி எட்டயபுரத்தில் ஆங்கிலோ-வெர்னகுலர் ஸ்கூலில் படித்துவிட்டு, திருநெல்வேலி ஹிந்து காலேஜுக்கு அனுப்பப்பட்டான். அங்கே மூன்று வருஷங்கள் ஐந்தாம் படிவம் வரைபடித்தான். ஹிந்து காலேஜ் தமிழ்ப்பண்டிதர் சிவராம பிள்ளைக்கும் பாரதிக்கும் நடந்த வாக்குவாதங்கள் பல. வகுப்பில் காலரியில் உயரமான இடத்தில் உட்கார்ந்திருந்த பாரதியிடம் ஒரு சமயம் பண்டிதர், "மேகம்போல் கவி பொழிவதாகப் புகழப்படுகிறீர். உயரேயும் இருக்கிறீர். கேள்விக்குக் காளமேகம் போல் பதில் பொழியாமல் இருப்பதேன்?" என்று கிண்டலாகக் கேட்டார். உடனே பாரதி, "பண்டிதரவர்களுக்கு மேகத்தின் ஸாமான்ய குணம் கூடத் தெரியவில்லையே. காளமேகம் தனக்குத் தோன்றியபொழுது பொழிவதன்றிப் பண்டிதர் உத்தரவுக்குப் பயந்து பெய்வதில்லையே!" என்றுன்.

காந்திமதிநாதப் பிள்ளை என்ற உயர் வகுப்பு மாணவர், தமிழ் கற்றிருக்கும் மமதையில், "பாரதி சின்னப் பயல்" என்ற சொற்களைக் கடைசி அடியின் முடிவாகக்கொண்டு ஒரு வெண்பா பாட முடியுமாவென பாரதியைக் கேட்டார். அப்படியே பாடினுன் பாரதி.

"காரதுபோல் நெஞ்சிருண்ட காந்திமதி [நாதனைப்
பார்அதி சின்னப் பயல்!"

என்று முடிந்தது அந்தப் பாடல்!



7. **படித்த பள்ளிக்கூடம் :** பாரதி சில ஆண்டுகள் படித்த திருநெல் வேலி ஹிந்து காலேஜ் (தற்சமயம் எம். டி. டி. காலேஜ்)



8. **இளமைத் தோழர் :** பாரதியின் இளமைத் தோழர் ச. சோமசுந்தர பாரதி. (பிற்காலப் படம்)



9 **சிறு தாயார் :** தாயற்ற பாரதியை அன்புடன் பராமரித்து வந்த சிறு தாயார் (தாயின் இளைய சகோதரி) சீதை அம்மாள்.



10. **காசியில் கங்கைக்கரை:** காசியிலிருந்த பாரதிக்கு கங்கை நதியின் அழகில் ஈடுபாடு அதிகம்

# திருமண வைபவம்

**1897** முதல் *1904* முடிய எட்டு ஆண்டு களுள் பாரதியின் வாழ்க்கை இன்பமும் துன் பமும் கலந்த பற்பல சூழல்களைக் கண்டது.

*1897*-ம் வருஷம் ஜூன் மாதம் (ஆனி 15-ஆம் தேதி என்று சோமசுந்தர பாரதி குறிப்பிடு கிறார்) பாரதிக்கும் கடையம் செல்லப்பா அய் யரின் குமாரி செல்லம்மாளுக்கும் அதிவிமரி சையாக நாலு நாள் கல்யாணம் நடந்தது. அதே சமயம், பாரதியின் மூன்று வயதுத் தங்கை லக்ஷ்மிக்கும், செல்லம்மாளின் தமக்கைக்கும் கூடத் திருமணம் நடந்தது. நான்கு நாட்க ளும் ஊர்வலம். ஹரிகேசவ நல்லூர் முதலிய ஊர்களிலிருந்து சங்கீத வித்வான்களும் தமிழ் வித்வான்களும் வந்திருந்தனர்.

கல்யாண விமரிசையைச் செல்லம்மா பாரதி பின்வருமாறு விவரிக்கிறார்: "கிருஷ்ண சிவன் (பாரதியின் அத்தை கணவர்) அவர் களின் நண்பர்களான ராமநாதபுரம் ராஜா விடமிருந்தும், சேத்தூர், தலைவன்கோட்டை ஜமீன்தார்களிடமிருந்தும், பட்டும் பட்டாவ ளியுமாகச் சால்வைகள், மோதிரங்கள், முத்து மாலைகள் முதலிய வெகுமதிகள் ஏரா ளமாய் வந்தன. தங்க நாதஸ்வர வித்வான் ரத்னசாமியை ராமநாதபுரம் ராஜா அவர்கள் அனுப்பியிருந்தார்கள். அந்தச் சமயம் கியாதி யடைந்திருந்த திருநெல்வேலி அம்மணி பரத நாட்டியம். பாரதியாருக்கு பால்ய விவாகத் தில் அவ்வளவாகப் பிரியமில்லாவிடினும், ரசிக்கத் தகுந்த கேளிக்கைகள் மிகுதியாயி ருந்தமையால் விவாகத்தில் உற்சாகமாகவே காணப்பட்டார்." அப்போது பாரதிக்கு வயது $14\frac{1}{2}$; செல்லம்மாளுக்கு வயது 7.

விவாகமானவுடன் கணவன் மனைவி பேசு வது வழக்கமாக இல்லாத அந்தக் காலத்தி லேயே, பாரதி தமது புதிய கருத்துக்களைக் காட்டத் தொடங்கினாராம். எல்லோருக்கும் எதிரில்,

**"தேடக் கிடையாத சொன்னமே—உயிர்ச்**
**சித்திரமே! மட அன்னமே!......**
**கட்டியணைத் தொரு முத்தமே—தந்தால்**
**கை தொழுவேன் உனை நித்தமே"**

என்று காதல் பாட்டுகள் பாடினாராம்.

"நான் நாணத்தால் உடம்பு குன்றி, எல்லா ரையும் போல் சாதாரணமான ஒரு கணவன் கிடைக்காமல், நமக்கென்று இப்படி ஓர் அபூர்வமான கணவர் வந்து வாய்க்க வேண் டுமா என்று எண்ணித் துன்புறுவேன். கிரா மத்தில் பழகிய, ஒன்றும் தெரியாத ஏழு வய துச் சிறுமிக்குக் கவிஞர்களின் காதல் ரஸ அனுபவம் எப்படிப் புரியும்?" என்று செல் லம்மாள் கூறுகிறார். மேலும்:

"விவாகத்தின் நாலாம் நாள், ஊர்வலம் முடிந்து, பந்தலில் ஊஞ்சல் நடக்கிறது. ஓர் ஆசுகவி இயற்றினர். அதை இனிய ராகத் தில் பாடி, பொருளும் உரைத்துக் குட்டிப் பிரசங்கம் ஒன்றும் செய்தார். கல்யாண விம ரிசையைப் புகழ்ந்து, அதை நடத்தியவர்களின் சலியா உழைப்பையும், என் தகப்பனார் கல்யா ணத்திற்குக் கஞ்சத்தனமின்றி மிகத் தாராள மாகச் செலவு செய்ததையும் வியந்து, வித் வான்களின் சங்கீதத் திறமையை மெச்சி இயற்றிய பாடல் அது. அதைக் கேட்டு யாவரும் 'பலே பேஷ்!' என்று ஆரவாரித்து, 'மாப்பிள்ளை வாய்த்தாலும் செல்லப்பா அய் யருக்கு வாய்த்ததுபோல் வாய்க்க வேண்டும். மணிப் பயல், சிங்கக்குட்டி!' என்றெல்லாம் அவரவர் போக்கின்படி புகழ்ந்தார்கள். என் தகப்பனார் மாப்பிள்ளையைக் கண்டு உள்ளம் பூரித்து, உடல் பூரித்து மகிழ்ச்சியடைந்தார். திருநெல்வேலி ஜில்லாவிலேயே சில காலம் வரையில் அந்தக் கல்யாண விமரிசை மக்கள் காதில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தது. எங்கும் அதுபற்றியே பேச்சு."

* * *

இவ்வளவு கோலாகலமான கல்யாணம் நடந்த மறு வருஷம் பாரதிக்குப் பெரும் துக் கம் நேர்ந்தது. பாரதியின் தந்தை பஞ்சாலை யில் பெரு நஷ்டமடைந்தார். அதனால் மன முடைந்து போய், அதே வருஷம் காலமுமா னார். தாயில்லாச் சிறுவன் பாரதி, தந்தை யற்றவனுமானான். இருவரையு மிழந்த பாரதி எங்கே, யாரிடம் வசிப்பதென்ற பிரச்னை எழுந்தது. முடிவில், தன்னிடம் பிரியமுள்ள அத்தை குப்பம்மாள் அழைக்கவே, காசிக்குச் சென்று, அத்தை வீட்டில் இருந்துகொண்டு மேல் படிப்புப் படிக்கலானான்.

அத்தை குப்பம்மாளின் புருஷர் கிருஷ்ண சிவன் பெரிய சிவ பக்தர். காசியில் பக்தி செய்து வாழச் சென்ற அவரது பக்தியைக் கண்டு, ஹநுமந்த கட்டத்தில் உள்ள சிவ மடத்தின் சொந்தக்காரரான பிரம்மச்சாரி மடத்தைக் கிருஷ்ணசிவனுக்கு எழுதிவைத்து விட்டுக் காலமானார். மடத்துக்கு வரும் தென் இந்திய வட இந்திய யாத்ரீகர்களுக்கு உப சரணை செய்து வாழ்ந்தனர் கிருஷ்ண சிவனும் அத்தை குப்பம்மாளும் அவர்களுடைய புதல் வர்களும். இவர்களிடையே போய்ச் சேர்ந் தான் சுப்பையா.

# பிரசுரமான முதல் பாடல்

**அ**த்தை அழைத்துக் காசி போனுரென்றாலும், அங்கே படிப்பு எளிதாயிருக்கவில்லை. அலாகாபாத் சர்வகலாசாலையின் பிரவேசப் பரீட்சைக்காக பாரதி புதிதாக ஹிந்தியும் ஸமஸ்கிருதமும் கற்பது அவசியமாயிற்று, இரு பாஷைகளையும் கற்று, ஓரளவு புலமை பெற்று, பரீட்சையிலும் தேறினுர்.

காசியில் எதிர் வீட்டில் இருந்தவரும் பாரதிக்கு நண்பராக விளங்கியவருமான பண்டிட் எஸ். நாராயண அய்யங்கார், காசியில் சுப்பையாவைப் பற்றி வருமாறு விவரிக்கிருர் :

"சுப்பையா மிக்க வறுமையில் ஆழ்ந்திருந்தார். ராஜீய விஷயங்களில் எவ்வித சம்பந்தமும் அவருக்கு அப்போது கிடையாது. சுப்பையா அரசியல் விஷயத்தில் கொஞ்சமும் அறிவு இல்லாமலே இருந்து வந்தது எனக்கு வியப்பைத் தந்தது. அக்காலத்தில் காசியில் தங்கியிருந்த அன்னி பெஸண்ட் அம்மையாருடன் சர்ச்சை செய்யப் போவார். அம்மையார் பதில்களில் திருப்தி கொள்ளாமல் அம்மையார் அறிவைப் பற்றி கேலி செய்வார்.

"காசியில் அவர் கடைசியாக ஒரு பள்ளியில் ஆசிரியர் பதவி பெற்று மாதம் இருபது ரூபாய் சம்பாதித்து வந்தார். அக்காலத்தில் அவருக்குத் தமிழ் இலக்கியம் தெரியும் என்றோ, கவிபாடும் திறமை பெற்றவர் என்றோ நான் நினைக்கச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. கையில் எப்பொழுதும் ஷெல்லியின் ஆங்கிலக் கவிதைப் புத்தகத்தை வைத்துக் கொண்டு படிப்பார். ஓய்வு நேரங்களில் கங்கைக் கரையில் படிக்கட்டில் உட்கார்ந்து ஷெல்லி பாடல்களைப் படித்து அர்த்தம் சொல்லுவார். வடமொழியில் அவருக்குப் பயிற்சி அல்பமே. ஆனுல் வடமொழிக் கவிகளின் அர்த்தத்தைக் கேட்டு ரசிப்பதில் நிகரற்றவர்."

காசியில் ஸரஸ்வதி பூஜையன்று பாரதி ஒரு கூட்டம் கூட்டி, "பெண் கல்வி" என்பது பற்றித் தமிழில் பேசினுர். பெண்கள் கல்வியின்றித் தேசம் முன்னுக்கு வராது என்று அடித்தும் பேசினுராம். "பெண்களின் சமத்துவத்தைப் பற்றி அடிக்கடி வற்புறுத்துவது அவர் வழக்கம். பெண்கள் கல்வி, சமத்துவம், இந்த இரு விஷயங்களைத் தவிர அப்போது வேறு எதிலும் அவர் அதிக கவனம் செலுத்தவில்லை" என்று பண்டிட் நாராயண அய்யங்கார் எடுத்துக் காட்டுகிருர்.

காசியிலிருந்த சமயம்தான் பாரதி அதுவரை இருந்த சிகையை எடுத்துவிட்டு கிராப் வைத்துக்கொண்டார். வட இந்தியர் போல் வால்விட்ட தலைப்பாகையும், மீசை வைத்துக் கொள்ளும் பழக்கமும் இச்சமயம் ஏற்பட்டதே.

ஏழாம் எட்வர்டு முடிசூட்டலையொட்டி லார்டு கர்ஸன் நடத்திய டெல்லி தர்பாருக்கு எட்டயபுர மன்னரும் வந்தார். திரும்பிச் செல்கையில் ஜமீன்தார், தமது பரிவாரங்களுடன், காசிக்கு வந்தார். ஜமீனைச் சேர்ந்த பலர் சுப்பையாவை எட்டயபுரம் அழைத்துச் செல்லவேண்டும் என்றும் ஜமீனில் உத்தியோகம் தரவேண்டும் என்றும் ஜமீன்தாரிடம் சொன்னுர்கள். ஜமீன்தாரும் இசைந்தார். ஜமீன் உத்தியோகம் நீடிக்குமென்ற நம்பிக்கை இல்லாவிட்டாலும், எட்டயபுரத்திலிருந்த செல்லம்மாளை மீண்டும் பார்ப்போம், சேர்ந்து குடித்தனம் நடத்துவோம் என்ற காரணத்தினுல் பாரதிக்கு ஓரளவு உற்சாகம் இருந்தது.

காசியிலிருந்து திரும்பிய பாரதி, எட்டயபுரத்தின் வரண்ட உலகில் உண்மைக் கவிதை ரசனையை உண்டாக்க முயன்றுர். கவிதையென்ருல் சிருங்கார ரசம் என்பதே மன்னர் அறிந்தது; யமகம் திரிபுகளே எட்டயபுரப் பண்டிதர் அறிந்தது. இரண்டையும் தவிர்த்த உணர்ச்சிப் பெருக்கான உயர் சுவைக் கவிதைகளுக்கு ஆதரவாளர் இல்லை. பாரதி ஆங்கிலக் கவி ஷெல்லியின் கவிதை நயங்களை நண்பர்கள் உணரும் பொருட்டு "ஷெல்லியன் கில்டு" என்ற ரஸிகர் குழு அமைத்தார். "ஷெல்லி தாஸன்" என்ற புனை பெயரில் கட்டுரைகளும் எழுதினுராம்.

ஆங்கிலக் கவிதை வடிவமான ஸானெட் என்ற 14 வரிப் பாடலைத் தமிழில் அமைக்க பாரதியும் முயற்சி செய்தார். (ஏற்கனவே 1902-ல் "பரிதிமாற் கலைஞன்" வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி இவ்வாறு தமிழ் ஸானெட் நூலொன்று வெளியிட்டிருந்தார்.)

இத்தகைய ஸானெட் ஒன்று, "தனிமை இரக்கம்" என்ற பாடல், மதுரையிலிருந்து கந்தசாமிப் புலவர் நடத்தி வந்த "விவேக பாநு" பத்திரிகையில் 1904 ஜுலை இதழில் பாரதியின் பெயருடன் பிரசுரமாயிற்று. நாமறிந்தவரை முதன் முதலாகப் பிரசுரமான பாரதி பாடல் இதுவே. இது வெளியான சமயம் பாரதி எட்டயபுரத்தை விட்டுக் கிளம்பவில்லை.

இந்தப் பாடலின் கடுமையான பண்டித நடைக்கும், இரண்டு வருஷங்களுக்குப் பின் வெளியான வந்தேமாதரம் பாடல் மொழி பெயர்ப்பின் சரள நடைக்கும் உள்ள வித்தியாசம் கவனிக்கத் தக்கது.

"விவேக பாநு", மதுரை. 1904, ஜூலை மாத இதழ்
(வால்யூம் 3 - புத்தகம் 7.)



## தனிமை யிரக்கம்.

குயிலனாய் ! நின்னொடு குலவியின் கலவி
பயில்வதிற் கழித்த பன்னாள் நினைந்துபின்
இன்றெனக் கிடையே எண்ணில் யோசனைப்படும்
குன்றமும் வனமும் கொழிதிரைப் புனலும்
மேவிடப் புரிந்த விதியையும் நினைந்தால்
பாவியேன் நெஞ்சம் பகீரெனல் அரிதோ?
† கலங்கரை விளக்கொரு காவதம் * கோடியா
மலங்குமோர் சிறிய மரக்கலம் போன்றேன்
¶ முடம்படு தினங்காள்! முன்னர்யான் அவளுடன்
உடம்பொடும் உயிரென உற்றுவாழ் நாட்களில்
|| வளியெனப் பறந்தநீர் மற்றியான் எனது
கிளியினைப் பிரிந்துழிக் கிரியெனக் கிடக்கும்
செயலையென் இயம்புவல் சிவனே
மயலையிற் றென்றெவர் வகுப்பரங் கவட்கே.

முற்றும்.

இங்ஙனம் எட்டயபுரம்.
ஸி. சுப்பிரமணியபாரதி.

---

† கப்பல்கட்கு வெளிச்சங்காட்டுங் கடற்கரை விளக்கு தனை Light-house என்பர்.

* கோடியாக. ¶ காலக்கழிவின் அருமையைக் குறிப்பித். || காற்று.

11. **அச்சில் வந்த முதல் பாடல்:** பாரதி எட்டயபுரத்தில் இருந்தபோதே, 1904-ல், மதுரை "விவேக பாநு" பத்திரிகையில் வந்த பாடல். 14 வரி 'ஸானெட்', பண்டித நடையில் உள்ளது!

சின்னச் சங்கரன் கதை. 35

திலே கொன்று விடுவாராயின், அஃதெனக்கு இதனைக்காட்டிலும் நன்றேயாம். (46)

ஸஞ்ஜயன் சொல்லுகிறான்;—இங்ஙனம் சொல்லி, அர்ஜுனன், சோகத்தினால் நொந்த மனத்தினனாய், அம்பையும் வில்லையும் எறிந்து விட்டுத் தேர்ப் பீடத்தின் மேல் உட்கார்ந்து கொண்டான். (47)



## சின்னச் சங்கரன் கதை.



(சாவித்திரி என்னும் நமது கிருபநேயர் எழுதியது.)

### முதலாவது குட்டியத்தியாயம்.

#### படிப்பவர்களுக்கு ஒரு வார்த்தை.

நமது நாட்டுக் கதைகளிலே பெரும்பாலும் அடிதொடங்கிக் கதா நாயகனுடைய ஊர், பெயர், குலம், கோத்திரம், பிறப்பு வளர்ப்பெல்லாம் கிரமமாகச் சொல்லிக்கொண்டு போவது வழக்கம். நவீன ஐரோப்பியக் கதைகளிலே பெரும் பகுதி அப்படியல்ல. அவர்கள் நாடகத்தைப்போலே கதையை நட்ட நடுவில்தொடங்குகிறார்கள். பிறகு போகப்போகக் கதாநாயகனுடைய பூர்வ விருத்தாந்தங்கள் தெரிந்துகொண்டே போகும். எங்கேனும் ஒரு காட்டில், ஒரு குளக்கரையில், ஒரு தனி மேடையில் இவன் தனது காதலியுடன் இருப்பான். இல்லாவிட்டால் யாரேனுமொரு சிநேகிதனுடன் இருப்பான். அப்போது கதையின் ஆரம்பங்களை எடுத்து விரிப்பான். இது அவர்களுடைய வழி.

நான் இக்கதையிலே மேற்படி இரண்டு வழிகளையும் கலந்து வேலை செய்யப்போகிறேன். சின்னச் சங்கரன்—நம்முடைய கதா நாயகன்—விருத்தாந்தங்களை மாத்திரம் பூர்வத்திலிருந்து கிரமமாகவே சொல்லிவிட்டு, கதையில் வரும் மற்றவர்கள் விஷயத்திலே கொஞ்சம் ஐரோப்பிய வழியைத் தழுவிக்கொண்டு செல்லக் கருதுகிறேன். ஸர்வகலா நிதியாகிய ஸரஸ்வதி தேவி எனது நாவில் கடைக்கண் வைத்திடுக.

### இரண்டாம் அத்தியாயம்.

#### பிஞ்சிலே பழுத்தது.

சின்னச்சங்கரன் பிஞ்சிலே பழுத்து விட்டான். நம்முடைய கதா நாயகன் பெயர் அத்தனை நயமில்லையென்றும் கொஞ்சம்

12. சுய சரிதை: தம் எட்டயபுர இளமை நினைவுகளை பாரதி நகைச் சுவையுடன் விவரிக்கும் "சின்னச் சங்கரன் கதை" ('ஞான பாநு' 1913 மே இதழில் வெளிவந்தது.)

# மன்னருக்குத் தோழர்

**கா**சியிலிருந்து எட்டயபுரம் திரும்பிய பாரதி அரண்மனையில் இரண்டு வருஷம் உத்தியோகம் பார்த்தார். அவருக்குக் கடுமையான வேலை ஏதுமில்லை. ஓரளவு சுதந்திரமாக இருக்க முடிந்தது.

பாரதிக்கு உத்தியோகம் மன்னருக்குத் தோழராக இருப்பதுதான். பெரிய மனுஷர்கள் சகவாசம் சிலருக்கே இயற்கையாக அமைகிறது. துல்லியமான உணர்ச்சிகளை உடையவர்களுக்கு இது மிகவும் சிரமமான காரியம். அதுவும், கவிகளுக்கு மிக மிகச் சிரமமான சமாசாரம்.

மன்னருக்கு ஓழிந்த வேளைகளில் அன்றுடப் பத்திரிகைகளைப் படித்துக் காட்டுவதும், சம்பாஷிப்பதும். சல்லாபிப்பதும், இலக்கிய விவாதங்களில் ஈடுபடுவதும்தான் பாரதியின் உத்தியோகம். உத்தியோகப் பொறுப்பு பிரமாதமில்லை. ஆனால் பாரதி போன்ற நுண்ணறிவாளிக்கு வேலையில்லாமல் உத்தியோகம் பார்ப்பதே பெரும் பாரமாக இருந்திருக்க வேண்டும்.

எட்டயபுரம் மன்னருக்கும் தமக்கும் இருந்த உறவு நிலையைப் பாரதியாரே பிற்காலத்தில் நண்பர்களிடம் விளக்கியிருக்கிறார். புதுவையில் "சின்னச் சங்கரன் கதை" எழுதிய காலத்தில் வ. ரா. முதலிய நண்பர்களுக்குக் கதையைப் படித்துக் காட்டி, விளக்கமும் செய்வார் பாரதி. (இதை வ. ரா. தமது "மகாகவி பாரதியார்" நூலில் விவரித்திருக்கிறார்.) மன்னரின் ரசனைச் சுவை, உறுதியற்ற மனப்போக்கு, நிர்வாகத் திறமையின்மை முதலியவைகளைச் "சின்னச் சங்கரன் கதை"யில் பாரதி விவரித்திருக்கிறார். "ராக்கப் பிள்ளைக்கு நிலம் கொடுக்கவும்" என்று மொட்டையாக ஓர் உத்தரவு போடுவாராம் மன்னர். எந்த ராக்கப் பிள்ளை, எவ்வளவு நிலம், எந்த மாதிரி நிலம், நஞ்சையா புஞ்சையா, எந்த இடத்தில், எந்த நிபந்தனைகளின் பேரில்—ஒரு விவரமும் இராது. அரண்மனை நிர்வாகிகள் மன்னரிடம் விளக்கம் கேட்பதும் பெரிய தவறு! ஏதோ, அவரவர் இஷ்டப்படி, அவரவருக்குத் தெரிந்த வழியில் உத்தரவு "நிறைவேற்"றப்படும்!

இதையெல்லாம் நண்பர்களிடம் சொல்லி, "இந்தக் கண்மூடி ராஜ்யத்தில் நான் எப்படிக் காலந்தள்ள முடியும்?" என்று கேட்பாராம் பாரதி.

"கூளப்ப நாயக்கன் காதல்" என்ற சிருங்கார ரஸம் மலிந்த பாடலிலும், நாட்டியக் கூத்துக்களிலும், காதல் என்ற கண்காணுப் பொருளிலும் அவர் லயித்திருந்தது மன்னரின் ரசனைச் சுவைக்கு உதாரணங்கள். சாப்பாடு முப்பது கவளம் சாப்பிடவேண்டும் என்று பாரதிக்குப் போதிப்பார், சாப்பிடவும் சாப்பிடுவார் மன்னர். அப்படித் தின்று விட்டு, ஜீரண சக்திக்காகப் "பூரணாதி லேகிய"ங்களை உள்ளே தள்ளுவார்! இந்த வழக்கத்தை பாரதிக்கு ஏற்படுத்தியது இவரே.

மன்னருக்கு பாரதி இல்லாமல் பொழுதே போகாது, தம்முடைய அபூர்வமான சிந்தனைச் சுடர்களை யெல்லாம் கேட்க ஓர் ஆள், விஷயம் தெரிந்த ஆள் வேண்டாமா? ஆனால், பாரதியோ அத்தகைய வேஷத்துக்குப் பொருத்தமில்லாத பேர்வழி! அவரால் கூழைக் கும்பிடு போட முடியாது; மற்றவர்களைப் போல, அரமனை சம்பிரதாயங்களை அப்படியே ஏற்று நடந்து கொள்ளவும் வளைந்து கொடுக்காது அவர் உள்ளம்.

மன்னர் சற்றுக் கடின சுபாவமுள்ளவர். அவருடன் பழகுவது எளிதல்ல. அவரெதிரே வருபவர்கள் மேல் அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக் கொண்டு, மரியாதை செய்து விட்டு, பேசும்போது இடையிடையே "மகாராஜா! மகாராஜா!" என்று சொல்லிக் கொண்டிருக்கவேண்டும். மன்னர் புவியரசரானால் தாம் கவியரசர் என்ற சமத்துவ மனோபாவம் வளர்ந்துகொண்டிருந்தது பாரதியின் உள்ளத்தில். அவருக்கு இம்மாதிரியான "நரியுயிர்ச் சேவகர்" வேஷம் பிடிக்கவில்லை, அருவருப்பாகவும் இருந்தது. இவற்றை எல்லாம் அறிந்தும் ஊர்போய்ப் பரீட்சை செய்து பார்ப்போம் என்றே காசியிலிருந்து எட்டயபுரம் வந்திருந்தார்.

அப்படி யிப்படி இரண்டு வருஷங்களை எட்டயபுரத்தில் தள்ளினார். ஷெல்லியின் சுயேச்சை உணர்ச்சி மிக்க பாடல்கள் அவருக்கு ஆறுதலளித்தன; கம்பன், வள்ளுவன், இளங்கோ இவர்களும் பெருந்துணையாயிருந்தனர்.

நாளாக ஆக மனக் கசப்பு அதிகரித்தது. முடிவில் எட்டயபுரத்தை விட்டுப் போய் விடுவதென்று தீர்மானித்தார் பாரதி. வேறு வேலை தேட மதுரை போக முடிவு செய்தார். புதிதாக ஏற்பட்ட துணிவில், மன்னரை நையாண்டி செய்து ஒரு பாடலைப் பாடி விட்டு எட்டயபுரத்தை விட்டுக் கிளம்பி விட்டார்.

இப்பாடலும் நமக்குக் கிடைக்காமற்போய் விட்ட பொக்கிஷங்களில் ஒன்று.

# மதுரைத் தமிழ்ப் பண்டிதர்

மதுரை வந்த பாரதிக்கு அங்கரில் ஒன்றிரண்டு நண்பர்கள் இருந்தனர். அவர்களில் மதுரைக் காலேஜ் பிராஞ்சு தமிழ்ப் பண்டிதர் எம். கோபாலகிருஷ்ணய்யர் ஒருவர். இவரிடம் பாரதி வேலை விஷயமாகப் பேசியபோது, சேதுபதி ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் சண்முகம் பிள்ளையை (அரசன் சண்முகனார்) கண்டுவரும்படி பாரதியை அனுப்பினார். துணைக்கு, ப. ரா. அய்யாசாமி அய்யரென்ற தமிழாசிரியரையும் அனுப்பினார். சண்முகம் பிள்ளை இவர் யாரென்று கேட்டதற்கு அய்யாசாமி அய்யர், "இவர் எட்டயபுரம் கவிஞர்" என்றார். உடனே சண்முகம் பிள்ளை, "நான் உடல் நலமில்லாததால் விடுமுறையில் போகிறேன். இவர் என் ஸ்தானத்துக்கு வருவாரா?" என்றார். பாரதி சம்மதித்தார். 1904-ம் ஆண்டு ஆகஸ்ட் முதல் தேதியன்று பாரதி சேதுபதி ஹைஸ்கூலில் தற்காலிகத் தமிழ்ப் பண்டிதரானார். மாதச் சம்பளம் ரூ. 17½.

பாரதி இயற்கைக் கவி; இலக்கண பண்டிதரல்ல. யமகம் திரிபுகள் தெரியுமென்றாலும், இலக்கணத்தை விட இலக்கியத்திலேயே பற்றுதல் வைத்தவர். அவர் மூன்று மாதம் பத்துநாள் எப்படியோ தமிழ்ப் பண்டிதராக வகுப்பு நடத்தினார். அவருடைய மாணாக்கர்களில் ஒருவர் மதுரை தேசபக்தர் ஏ. வைத்தியநாதய்யர். "அப்போதே பாரதியுடைய கண்களில் ஏதோ ஒரு விசேஷ சக்தி இருப்பது தெரிந்தது. ஆனால் அவருடைய பெருமை முழுதும் தெரியவில்லை" என்று வைத்தியநாதய்யர் கூறியுள்ளார்.

மூன்று மாதம் பத்து நாள் ஆனதும் பாரதியின் தற்காலிக வேலை முடிந்தது. 1904 நவம்பர் 10-ந்தேதியோடு பாரதி தமிழ்ப் பண்டிதர் வேலையை விட்டார்.

இந்த மூன்று மாதத்துக்கு முன்பிருந்தே பாரதி வேறு வேலைக்கு முயன்று வந்தார். தம் நண்பராகிவிட்ட தம் பள்ளி சகோதர ஆசிரியர் அய்யாசாமி அய்யரிடம் வேலை பற்றி வற்புறுத்தி வந்தார். அய்யாசாமி அய்யரின் தாய்மாமன் ராஜாராமய்யர் என்பவர் 'ஹிந்து' முதலிய பத்திரிகைகளின் நிருபராயிருந்தார். அவருக்கு ஜீ. சுப்பிரமணிய அய்யரை நன்கு தெரியும். மதுரைக் காலேஜ் பிராஞ்சு தமிழ்ப் பண்டிதர் கோபால கிருஷ்ணய்யர் ராஜாராமய்யரை நெருங்கி "சுதேசமித்திரனில் உத்வியாசிரியர் வேலை காலியாக இருக்கிறது. அதற்கு நீங்கள் பாரதியைச் சிபார்சு செய்யவேண்டும்" என்றார். ராஜாராமய்யர் யாருக்கும் ஒன்றும் செய்யமாட்டார். தாட்சணியம் பொறுக்காமல் அவர் ஜீ சுப்பிரமணிய அய்யருக்குக் கடிதம் கொடுத்தார். இதன் வழியாகவே பாரதிக்குச் சென்னையில் வேலை கிடைத்தது. (இவ்விவரங்களை, இக்கடிதத்தைத் தாமே நேரில்வாங்கி பாரதியிடம் கொடுத்தஅய்யாசாமி அய்யர் தெரிவிக்கிறார்.)

பாரதியார் "சுதேசமித்திர"னில் எப்படிச் சேர்ந்தார் என்பதைப் பற்றி மாறுபட்ட விவரங்களும் தெரிவிக்கப்பட்டுள்ளன. பாரதி மதுரையில் தமிழ்ப் பண்டிதராக இருந்த சமயத்தில் "மித்திரன்" ஆசிரியர் ஜீ. சுப்பிரமணிய அய்யர் மதுரைக்கு வந்ததாகவும், அப்போது அவருக்கு பாரதி அறிமுகமானதாகவும், பாரதியின் மேதையை உடனே அறிந்து கொண்ட அவர் எப்படியாவது அவரைச் சென்னையில் தம் பத்திரிகைக்குக் கொண்டு செல்ல விரும்பியதாகவும், அதன்படி பாரதியைச் சென்னைக்கு வந்துவிடுமாறு சொன்னதாகவும் வ. ரா. கூறுகிறார்.

சேதுபதி ஹைஸ்கூல் வேலை முடியும் சமயம், பாரதி தமது உறவினரும் சென்னை போதனாமுறைக் கல்லூரி வைஸ் பிரின்ஸ்பாலுமான லக்ஷ்மண அய்யர் என்ற சென்னைவாசிக்கு எழுதியதாகவும், லக்ஷ்மண அய்யர் தமது நண்பரொருவர் மூலம் விசாரித்து, மிகுந்த சிபாரிசின் பேரில் வேலை வாங்கிக் கொடுத்ததாயும் சிலர் கருதுகிறார்கள்.

ஆனால், இவ்விவரங்களெல்லாம் இவ்விஷயத்தில் நேரிடையாக சம்பந்தப்படாதவர்களாலேயே கூறப்பட்டுள்ளன. இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்டுள்ள ஸ்ரீ. ப. ரா. அய்யாசாமி அய்யர் தெரிவிக்கும் செய்திகளிலிருந்து, அவர் கூறுவதே சரியாயிருக்கும் என்று தோன்றுகிறது.

எது எப்படியானாலும், தமிழ்த் தினசரியான "சுதேசமித்திர"னில் பாரதிக்கு வேலை கிடைத்துவிட்டது. தமிழ்ப்பண்டிதர் வேலை முடிந்த பின் என்ன செய்வதென்ற கவலை நீங்கியது.

ஜீ. சுப்பிரமணிய அய்யர் தமிழ் நாட்டுக்கு தேசபக்தி யூட்டிய முதல்வர். அவர் 1904-ல் தமது பத்திரிகைக்கு ஆங்கில ஞானமும் தமிழ் அறிவும் கொண்ட சிறந்த ஒருவரைத் தேடிக் கொண்டிருந்தார். பாரதியைப் பார்த்த மாத்திரத்தில் அவர் பாரதியிடம் மோகித்துப் போனார். தமிழாசிரியர் என்ற குறுகிய வரம்பை மீறி, தமிழ்ப் பத்திரிகை உலகம் வாயிலாகத் தமிழ் எழுத்துலகிலும் இந்திய தேசிய உலகிலும் பாரதியை இட்டுச் சென்ற பெருமை ஜீ. சுப்பிரமணிய அய்யருடையது.



13. **தெருக் காட்சி**: தமது 22-வது வயதில் இளம் பாரதி மதுரையில் மூன்று மாத காலம் வசித்துள்ளார்.

14. **வேலை பார்த்த பள்ளி**: பாரதி மூன்று மாதம் தமிழ்ப் பண்டிதராக வேலை பார்த்த மதுரை சேதுபதி ஹைஸ்கூல்.





15. **முதல் ஆசிரியர்:** பத்திரிகைத் தொழிலில் பாரதியின் முதல் ஆசிரியர் "சுதேசமித்திரன்" பத்திராதிபர் ஜீ. சுப்பிரமணிய ஐயர்



16. 1904-ல் "சுதேசமித்திரன்" இருந்த இடம். அரமனைக்காரத் தெரு தென் கோடியில். ஏற்கனவே இது சிறு கட்டட மாக இருந்தது.

சுதேசமித்திரன் ஆபீஸ்
(1904)
பிராட்வே
சட்டக் கல்லூரி
ஹைக்கோர்ட்டு
கோட்டை
அரண்மனைக்காரத் தெரு
தம்புசெட்டி தெரு
லிங்கிசெட்டி தெரு
(சாதாரண ரயில்) 'பீச்'ஸ்டேஷனுக்கு →
ஹைக்கோர்ட்டுக் கடற்கரை
வங்காளக் குடாக் கடல்

17. **பழைய சென்னை நகரம்:** 1904-ல் இருந்த சென்னை நகரம். 1906-ம் ஆண்டுதான் ப்ளாக் டவுன் ஜார்ஜ் டவுன் ஆயிற்று.

## "மித்திரன்" உதவியாசிரியர்

**1904**-ம் ஆண்டு நவம்பர் மாதம் பாரதி சென்னை வந்து "சுதேச மித்திர"னில் சேர்ந்தார். முன்பின் பழக்கமில்லாத பத்திரிகை வேலை யென்றாலும், ஏற்கனவே எட்டயபுரத்திலும் மதுரையிலும் பார்த்த வேலைகள் ஒத்துவரவில்லையென்றாலும், வந்தவுடனேயே பாரதி தமக்கும் பத்திரிகைத் தொழிலுக்கும் நிறைய பாந்தவ்யம் இருப்பதை உணர்ந்து விட்டார்.

தமிழ்த் தினசரிப் பத்திரிகைகளில் முக்கியமான வேலை ஆங்கிலத்தில் வரும் செய்திகளைத் தமிழில் வேகமாய் மொழி பெயர்ப்பதே யாகும். ஆங்கிலத்தில் வரும் பல புதுப் புதுப் பதங்களுக்குத் தகுந்த தமிழ்ப் பதங்கள் கண்டு பிடிப்பதும் உண்டாக்குவதும் ஒரு பெரிய தலைவலி. பாரதிக்கு இந்த வேலை சுலபத்தில் பழகிவிட்டது. எவ்வளவு கடினமான செய்தியானாலும், எவ்வளவு நீளமான பிரசங்கமானாலும் அசல் தமிழிலேயே முதலில் வந்தது போல அழகான எளிய நடையில் வேகமாகவும் மொழி பெயர்ப்பதில் பாரதி சமர்த்தரானார். ஆசிரியருக்கு பாரதியிடம் தனி அபிமானம் ஏற்பட்டுவிட்டது. பாரதியை நயமாய் "ஏய்த்து" வேலை வாங்கு வாராம் அவர்.

பாரதி இதைப்பற்றிக் கூறியதாக வ. ரா. சொல்கிறார்: சாயங்காலம் ஆபீஸிலிருந்து வீட்டுக்குப் போக நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார் பாரதி. ஆனால் கையில் பணம் இல்லையென்ற குறையும், வீட்டில் செலவுக்குப் பணம் வேண்டும் என்ற நினைவும் ஞாபகம் வந்துவிடும். ஜீ. சுப்பிரமணிய அய்யரைக் கேட்கலாமா என்று நினைத்திருக்கும் சமயம் சேவகன் அய்யர் அனுப்பியதாக ஒரு டம்ளர் காபியை பாரதியிடம் வைத்துச் செல்வான். அய்யரின் அன்பைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கும்போது, அய்யரேநேரில் வந்து நிற்பார். வீடு வாசல் பணமுடை எல்லாம் பாரதிக்கு மறந்து விடும்.

சீமையிலே ஸர் ஹென்றி காட்டன் இந்தியாவைப் பற்றி உருக்கமாய்ப் பிரசங்கம் செய்திருப்பதைப் பார்த்தாயோ என்று பாரதியிடம் கேட்பார் அய்யர். பாரதி பார்த்திருப்பார்; நன்றாயிருக்கிறது என்றும் சொல்வார். அதை நாளையே நம் பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டாமோ என்று கேட்பார் அய்யர். பாரதி கட்டாயம் பிரசுரிக்க வேணுமென்பார்.

அந்தப் பிரசங்கத்தின் சுவை கெடாமல் உன்னைத் தவிர யார் மொழி பெயர்க்க முடியும் என்று மனம் குளிரச் சொல்வார் ஆசிரியர். அதை ஆபீஸில்தான் மொழி பெயர்க்க வேண்டு மென்பதில்லை; வீட்டிற்கு எடுத்துச் சென்று விளையாட்டாய் மொழி பெயர்த்து விடலாம் என்றும் கூறுவார்.

பாரதி சந்தோஷமாய் அந்தப் பிரசங்கத்தை வீட்டுக்கு எடுத்துக் கொண்டுபோய், மொழி பெயர்த்து, காலையில் வரும்போது கொண்டு வருவார்.

ஜீ. சுப்பிரமணிய அய்யர் இப்படி பாரதியிடம் நிறைய வேலை வாங்கினாரென்றாலும், எல்லாம் பாரதிக்கு மிகச் சிறந்த பயிற்சியாகவே உதவின. பாரதி விளையாட்டாகவே விவேகானந்தர் பிரசங்கங்கள், அரவிந்தர் பேச்சுகள், காங்கிரஸ் மகாசபைத் தலைமையுரைகள் முதலியவற்றை அசல் தமிழில் எழுதப்பட்ட விஷயங்களேபோல் மொழிபெயர்த்துத் தள்ளியிருக்கிறார்.

"மித்திர"னில் சேர்ந்த முதல் பத்து மாதங்கள் பாரதி தம்மைப் புதிய வேலைக்குப் பயிற்சி செய்து கொள்ளுவதிலேயே ஈடுபட்டிருக்கவேண்டும். அப்போது அவர் தம்முடைய கவித்துவத் திறமையை அடக்கி வைத்திருக்கவேண்டும். ஏனெனில், "சுதேச மித்திர"னில் பாரதியின் சொந்தச் சரக்காக ஒரு பாட்டு, "வங்கமே வாழிய" என்ற தலைப்புடன், முதன் முதலாக 1905-ம் ஆண்டு ஸெப்டம்பர் மாதம் 15-ந் தேதிதான் வெளியாயிற்று. அதாவது பாரதி பத்திரிகையில் சேர்ந்து பத்து மாதங்களுக்குப் பிறகு.

"மித்திர"னில் பாரதிக்கு பிரமாதமான சம்பளமில்லை. ஆகையால் அவருக்கு பணமுடை இருந்து கொண்டேயிருந்தது. ஜீ. சுப்பிரமணிய அய்யர் வஞ்சனையற்றவர்; பாரதியின் திறமை அவருக்குத் தெரியும். ஆனால் நிறையச் சம்பளம் கொடுக்க வசதியில்லை. "பாரதி, நீ காளிதாஸன்தான். ஆனால் உனக்கு அட்சர லட்சம் கொடுக்க நான் போஜனாக இல்லையே" என்பாராம் அவர்.

குறைந்த சம்பளத்தில் சென்னையில் குடித்தனம் நடத்துவது அக்காலத்திலும் சிரமமாகவே இருந்தது. நகரின் ஒண்டிக் குடித்தன அனுபவம் பாரதிக்கு ஏற்பட்டது. இந்த அனுபவத்தையே அவர், நான்கு வருஷங்களுக்குப் பிறகு "ஞானரதம்" என்ற நூலில் மண்ணுலகம் என்ற பகுதியில் நகைச்சுவையுடன் விவரித்திருக்கிறார்.

# சீர்திருத்தவாதி பாரதி

**1904**-ம் ஆண்டு முடிவில் சென்னைக்கு வந்த பாரதிக்கு வயது 22. அப்போது அவர் தோற்றத்தில் எப்படி இருந்தார்? அக்காலத்திலும் அதன்பின் கடைசிவரையிலும் பாரதிக்கு உத்தம நண்பராக வாய்த்த எஸ். துரைசாமி அய்யர் பாரதியை வருமாறு வர்ணிக்கிறார்: "அவருடைய முகம் மிகவும் வசிகரமாக இருக்கும். எப்போதும் உற்சாகம் நிறைந்திருப்பார். பேச்சில் தெளிவு இருக்கும். எதையும் பளிச்சென்று சொல்லிவிடுவார். சூதுவாது தெரியாது. பிறர் பேச்சுத் துணையை ரஸிக்கும் ஸரஸி. நல்ல உணவு அருந்துவதில் விருப்பமுள்ளவர். அவர் உடலோ மிகப் பூஞ்சை. பலமே இல்லாத மெலிந்த தேகம். விளையாட்டாய்த் தள்ளினால் கூட விழுந்துவிடுவார்." ஆனால் அந்தப் பூஞ்சை உடலில் இருந்த சக்திதான் என்னே!

சென்னைக்கு வந்த புதிதில் பாரதிக்கு அரசியலில் ஈடுபாடே கிடையாது. தேச பக்தித் துடிப்பும் இல்லை. இந்திய சமூகம் திருந்த வேண்டும், விரைவில் திருந்த வேண்டும் என்ற கருத்துக் கொண்ட சமூக சீர்திருத்தவாதியாகவே அவர் விளங்கினார்.

காசியில் இருந்த சமயமே மாதர் முன்னேற்றத்தை வற்புறுத்திப் பேசிய பாரதி, சென்னை வந்ததும் இதர சமூக சீர்திருத்தங்களிலும் ஊக்கம் காட்டினார்.

சென்னை வந்த புதிதில் தம்புச் செட்டித் தெருவில் குடியிருந்தார். அந்தச் சமயம் "சுதேச மித்திரன்' அரமனைக்காரத் தெருவின் தெற்குக் கோடியில், மேற்குப் பார்த்த ஒரு வீட்டில் இருந்தது.

ஜார்ஜ் டவுனில் இருந்த பாரதிக்கு அந்த வட்டாரத்திலேயே பல நண்பர்கள் எளிதில் உண்டாகிவிட்டார்கள். சட்டப் படிப்பு படித்துக் கொண்டிருந்த எஸ். துரைசாமி அய்யர், பிற்காலத்தில் தொழிலாளர் தலைவரான வி. சக்கரை (செட்டியார்), பால் என்ற உபாத்தியாயர், ஜயராம் நாயுடு என்ற டாக்டர், பிற்காலத்தில் பத்திரிகையாளரான சி. எஸ். ரகுநாதராவ் முதலியோர் பாரதியின் உற்ற நண்பர்கள். நெடுநாளைய பிரசுரகர்த்தர்களும் பிரபல காப்பிக்கொட்டை வியாபாரிகளுமான கணேஷ் அண்டு கம்பெனி முதல்வர் ராமசேஷய்யர் இந்த இளைஞர்களுக்குப் போஷகர்.

மாலையில் இந்த நண்பர்கள் கணேஷ் அண்டு கம்பெனியில் ஒன்று கூடுவர். அங்கிருந்து உற்சாகமாய்ப் பேயசி வண்ணம் ஹைக்கோர்ட் கடற்கரை சென்று, மணலில் "மகாநாடு" நடத்துவார்கள். அரட்டை நடக்கும், விவாதம் நடக்கும், பெரிய பெரிய சீர்திருத்தத் திட்டங்கள் போடப்படும், பாரதியின் பாட்டு ரசிக்கப்படும். பாரதிக்கு அக்காலத்தில் நந்தன் சரித்திரக் கீர்த்தனைகள் மிகவும் பிடிக்கும்; அப்பாடல்களை ரசித்துப் பாடுவார்.

அந்தக் காலத்தில் சென்னையில் 'ஸோஷல் ரிபார்ம் அஸோஸியேஷன்' என்ற மிக மிதவாதமான சமூக சீர்திருத்த சங்கம் ஒன்று இருந்தது. "இந்த நாட்டின் முன்னேற்றத்தை முன்னிட்டு, பல ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் ஒன்றாக சமபந்தி போஜனம் செய்வதில் தீமையில்லை. இது இங்கு கூடியுள்ள இந்த சபையின் அபிப்பிராயம்" என்பதுபோல நீட்டி முழக்கித் தீர்மானம் நிறைவேற்றிவிட்டுத் தூங்குவது தவிர வேறொன்றும் செய்வதில்லை என்று பாரதி முதலிய இளைஞர்கள் இச் சங்கத்தை வெறுத்தார்கள். தாங்கள் செயலில் இறங்கி வழிகாட்டவும் அவர்கள் உறுதி கொண்டார்கள்.

அதன்பேரில், பல ஜாதிகளைச் சேர்ந்த, பல மதங்களைச் சேர்ந்த அந்த இளைஞர்கள், தங்களுள் பிராமணரல்லாத ஒருவரை சமையல் செய்யச் செய்து, அந்த உணவை விருந்தாக எல்லாரும் சேர்ந்து உண்டார்கள். டாக்டர் ஜயராம் நாயுடுதான் சமையல் செய்தார். இந்த விருந்து நடத்தியதுடன், இதில் கலந்துகொண்ட ஒவ்வொருவரும் இதைப் பற்றிப் பெருமையாக எல்லாரிடமும் சொல்வதென்று தீர்மானித்து, அவ்வாறே சொன்னார்கள். அடிக்கடி இம்மாதிரி சமபந்தி போஜனம் நடத்தினார்கள். சென்னையில் இது பெரும் பரபரப்பை உண்டாக்கியது.

இளம் நண்பர்கள் அத்துடன் நிற்கவில்லை. "ராடிகல் ஸோஷல் ரிபார்ம்" (தீவிர சமூக சீர்திருத்தம்) என்ற ஆங்கில வாரப் பத்திரிகையொன்றும் நடத்தினார்கள். இந்த 4 பக்கப் பத்திரிகைக்கு சி. எஸ். ரகுநாதராவ் ஆசிரியராக இருந்தார். சென்னையிலிருந்த இதர சீர்திருத்த வாதிகளுக்கு இப் பத்திரிகை மிகுந்த உற்சாகமூட்டியது.

இந்தப் பத்திரிகையில் பாரதி எழுதினாரா என்பது தெரியவில்லை; எழுதியிருக்கக் கூடும். இப் பத்திரிகையின் இதழ்கள் தற்சமயம் கிடைக்க வில்லை. தேடுதற்குரியன.



18. **லால்-பால்-பால்:** இந்நூற்றாண்டுத் துவக்கத்தில் மாபெரும் தேசீயத் தலைவர்களாக விளங்கிய லாலா லஜபதி ராய், பால கங்காதர திலகர், விபின சந்திர பால்.



19. **அருமை நண்பர்:** 1904 முதலே பாரதியின் நெருங்கிய நண்பரான வக்கீல் சா. துரைசாமி அய்யர். இன்றும் ஜீவிதராயிருக்கும் இப்பெரியவர் துறவியாக வாழ்ந்து வருகிறார்.



### 20. நிவேதித்தா

அருளுக்கு நிவேதனமாய், அன்பினுக்கோர்
கோயிலாய், அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிறாய் எமதுயர் நா
டாம் பயிர்க்கு மழையாய், இங்கு
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப்
பெரும் பொருளாய்ப் புன்மைத் தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கிய தாய்
நிவேதிதையைத் தொழுது நிற்பேன்.

—பாரதி.

# குரு தரிசனம்

"சுதேச மித்திர"னில் பாரதி சேர்ந்த சமயம் நாடெங்கும் தேசபக்தி வித்துவிடத் தொடங்கியது. 1905-ம் வருஷம்—பாரதி சென்னை வந்த பத்து மாதங்களில்—இந்திய மக்கள் விருப்பத்துக்கு மாறாக வங்கப் பிரிவினை ஏற்பட்டது.

வங்கப் பிரிவினை சமயத்தில்தான் பாரதி அரசியலில் தலையிட்டிருக்கிறார். வங்கப் பிரிவினைக்கு முன்னமேயே, சென்னைக் கடற்கரை பெருங் கூட்டமொன்றில் பாரதி கலந்து கொண்டு, "வங்கமே வாழிய!" என்ற பாட்டையும் பாடினார். இப்பாடல் "மித்திர"னில் 1905, ஸெப்டம்பர் 15-ந் தேதி வெளியாயிற்று.

வங்கப் பிரிவினையால் ஏற்பட்ட கொதிப்பு இந்திய தேசீய காங்கிரஸ் சபையையும் பாதித்தது. காங்கிரஸ் மகாசபையை "பணிவுடன் விண்ணப்பம் சமர்ப்பிக்கும் மிதவாதிக"ளிடமிருந்து தியாகத்துக்குத் துணிந்த தீவிரவாதிகள் கைப்பற்ற முயன்று வந்தார்கள். இந்தத் தீவிர கோஷ்டியில் மூன்று பெயர்கள் முக்கியமாய் அடிபட்டன. பஞ்சாபிலிருந்து லாலா லஜபத் ராய், மகாராஷ்டிரத்திலிருந்து பால கங்காதர திலக், வங்காளத்திலிருந்து பெபின் சந்திர பால் இம் மூவர் பெயரும் ஒன்றாக "லால்—பால்—பால்" என்று இணைக்கப்பட்டு ஒரே பெயர்போல் முழங்கியது. பாபு அரவிந்த கோஷும் தீவிரவாதிகளில் ஒருவர். கோபால கிருஷ்ண கோகலே, வி. கிருஷ்ண ஸ்வாமி அய்யர், பிரோஸிஷா மேத்தா, ராஷ் பிஹாரி கோஷ் முதலியோர் மிதவாதத் தலைவர்கள்.

1905-ம் வருஷம் காசியில் காங்கிரஸ் மகா சபை கூடிற்று, பாரதி காசி காங்கிரஸுக்குப் போனார். தெரிந்த பழைய ஊரான காசியை மீண்டும் பார்க்கலாம் என்றுதான் போனாரோ என்னவோ, தெரியாது.

காசியிலிருந்து திரும்பும்போது கல்கத்தா அருகிலுள்ள டம்டம் என்ற இடத்துக்குச் சென்று, அங்கே "விவேகானந்தரின் தர்மபுத்திரி" நிவேதித்தா தேவியை தரிசித்தார். பாரதியின் வாழ்க்கையையே அடியோடு மாற்றி விட்டது இந்தச் சந்திப்பு!

நிவேதித்தா தேவி ஆங்கில மாது. பூர்வத்தில் மார்கரட் இ. நோபிள் என்ற பெயர் கொண்ட அவர், ஸ்வாமி விவேகானந்தரின் வீர முழக்கம் கேட்டு, பழம் பெரும் புனித பூமியான பாரத நாட்டுக்குத் தொண்டு புரியவென இங்கே வந்த இளம் மாது. விவேகானந்தரின் ஆசி பெற்று சந்நியாஸ மார்க்கம் ஏற்று, ராமகிருஷ்ண மிஷனின் முதல் சந்நியாஸினியாகத் தொண்டு புரிந்தார் அவர். நிவேதித்தா தேவி பேச்சிலும் செயலிலும் அக்னி ஸ்வரூபமானவர். தேச பக்தியே தெய்வ பக்தியாய்க் கொண்ட அவர், முப்பது கோடி மக்களும் தெய்வங்களென வணங்கிய அவர், அயர்வறியாத் தொண்டர்.

இந்தப் புனிதவதியை பாரதியார் தரிசித்த போது, நிவேதித்தா தேவி, "மகனே! உன் மனத்தில் பிரிவுணர்ச்சியை நீக்கு. ஜாதி, மதம், குலம், கோத்திரம் என்ற அநாகரிகமான வித்தியாசங்களை விடு. அன்பை மட்டும் அகத்தில் கொள். பிற்காலத்தில் நீ ஒரு தீரனாக, சரித்திரப் பிரசித்தி பெற்ற தேவனாக வருவாய்" என்றுரைத்தாராம்.

பிறகு, பாரதிக்கு விவாகமாகவில்லையா என்று கேட்டார். பாரதி, தமக்கு விவாகமாகி, இரண்டு வயதுப் பெண் குழந்தை இருக்கிறதென்றார். பின் ஏன் மனைவியை உடனழைத்து வரவில்லை என்றார் நிவேதித்தா தேவி.

"இன்னும் எங்களில் மனைவியைச் சரிசமமாகப் பொது இடங்களுக்கு அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை. மேலும் காங்கிரஸுக்கு அவளை அழைத்து வந்தால் என்ன பிரயோஜனம்?" என்றார் பாரதி.

இதைக் கேட்ட நிவேதித்தா தேவி மிகக் கோபமடைந்தார்.

"சமூகத்தில் பாதி அடிமைப் பட்டிருக்கையில் மறு பாதி விடுதலை பெற முடியுமா? போனது போகட்டும், இனியும் அவளைத் தனியென்று நினைக்காமல், உன் இடது கையென மதித்து, மனதில் அவளைத் தெய்வமெனப் போற்றி நடந்து வா" என்றார்.

அப்படியே வாக்களித்துக் கொடுத்தார் பாரதி. நிவேதித்தா தேவி தாம் ஹிமாலயத்திலிருந்து கொணர்ந்த ஆலிலை அளவுள்ள ஓர் இலையை தம் ஞாபகார்த்தமாக பாரதிக்கு அளித்தார். பாரதியார் தம் கடைசி காலம் வரை அதை விடாது பொக்கிஷமாய்ப் போற்றி வந்தார். சில நண்பர்கள் அதிக விலை கொடுப்பதாய்க் கேட்டுப் பார்த்தபோது கூட அதை அவர் கொடுக்க இஷ்டப்படவில்லை. அவரது மரணத்துக்குப் பின் அவ்விலை எங்கேயோ காணாமற் போய்விட்டது.

நிவேதித்தா தேவியைத் தாம் சந்தித்ததால் ஏற்பட்ட மனப் புரட்சியை பாரதியே எழுத்திலும் குறிப்பிட்டிருக்கிறார். "ஒரு கடிகையிலே மாதாவினது மெய்த் தொண்டின் தன்மையையும் துறவுப் பெருமையையும் சொல்லாமல் உணர்த்திய குருமணி" என்று நிவேதித்தையைத் தொழுகிறார் அவர்.

# ஆசிரிய பீடத்தில்

நிவேதித்தா தேவியைத் தரிசித்த பாரதி புது உற்சாகத்துடன் சென்னை திரும்பினர். அவரது மனம் ஓயாமல்,

"பெற்ற தாயும் பிறந்த பொன்னுடும்
நற்றவ வானிலும் நனிசிறந்தனவே"

என்று ஜபித்த வண்ணமிருந்தது. பிற பிற தெய்வங்களைத் தோழ, பொலிவிழந்து நிற்கும் பாரதத் தாயையே எங்கும் எதிலும் கண்டு வழிபடத் தொடங்கினர் கவித் திலகம்.

நிவேதித்தா தேவியைச் சந்தித்தபோது நடந்த ஒரு விஷயம் பற்றித் தம் ஆப்த நண்பர் எஸ். துரைசாமி அய்யரிடம் வெகு நாள் கழித்து பாரதி சொன்னராம். அந்தச் சந்திப்பு பாரதியின் மனதை எப்படி அடியோடு மாற்றியது என்பதற்கு இதுவும் தக்க ஆதாரம் காட்டுகிறது.

பாரதத் தாய் விலங்குகளோடு கண்முன் நிற்பதாய்க் காணுமளவுக்கு உணர்ச்சி வேண்டும்; அப்படிக் கண்டால்தான் விலங்கை எப்படியாவது நீக்க வேண்டுமென்ற உணர்வு வரும் என்று நிவேதித்தா தேவி வற்புறுத்திச் சொன்னராம். இப்படிக் கூறிவந்த அந்த அம்மையார், திடீரென ஆவேசம் வந்தவர் போல், தமது மேலங்கியை மார்பெதிரே பிய்த்துத் திறந்து, "உங்களுக்கு தைரியம் வேண்டும். எங்களை இங்கே குத்திக் கொல்ல உங்களுக்கு தைரியம் வேண்டும்!" என்ருராம். தேச விடுதலைக்காகத் தம் போன்ற வெள்ளையரைத் "துஷ்ட நிக்ரஹம்" செய்யவும் அஞ்சாத தீரர் வேண்டுமென்பது நிவேதித்தையின் குறிப்பு. அடிமை மக்களுக்கு ஆண்மையின் அவசியத்தை அவர் அவ்வாறு வற்புறுத்தினர். இந்த உபதேசம் பாரதியின் நெஞ்சில் ஆழப் பதிந்தது.

காசி காங்கிரஸுக்கு அடுத்த வருஷம், 1906-ல் காங்கிரஸ் மகாசபை கல்கத்தாவில் கூடிற்று. முதுபெருந் தலைவர் தாதாபாய் நௌரோஜி அக்கிராசனப் பதவியிலிருந்து சுயராஜ்யமே நம் இலட்சியம் என்று சங்கை முழக்கினர்.

"சுதேசமித்திர"னில் உதவியாசிரியராகச் சிறந்த பணி புரிந்து வந்த பாரதி தம் மனதில் தோன்றிய புதிய கருத்துக்களைக் கொட்டி முழக்க முடியாமல் தவித்தார். "மித்திர"னில் தலையங்கம் எழுதும் வேலை அவருக்கு ஒரு போதும் வாய்க்கவில்லை. "மித்திரன்" காரியாலயமே நடத்தி வந்த "சக்கரவர்த்தினி" என்ற மாதப் பத்திரிகைக்கு பாரதி ஆசிரியராக இருந்தார். ஆனல் "சக்கரவர்த்தினி"யில் அன்ருட அரசியலுக்கு அதிக இடமில்லை. வங்கப் பிரிவினை, சுதேசி இயக்கம், சுயராஜ்ய முழக்கம், சர்க்கார் அடக்குமுறை இவை அலைமேல் அலையாய் நாட்டு மக்கள் மனதில் மோதி, அவர்கள் மனதில் சுமையாகக் கிடந்த அடிமை எண்ணங்களைத் தகர்த்து வந்தன. நாடெங்கும் சுதந்திர ஆசை தீவிரமாய் வளரலாயிற்று. இவ்வாசைக்கு ஓர் உருவம் கொடுத்து, தமிழ் மக்கள் மனதில் பதியும்படி அதை எளிய இனிய தமிழில் விளக்கிக் காட்ட நல்ல தமிழ்ப் பத்திரிகை வேண்டும், அதில் தம் இஷ்டம் போல் எழுதவேண்டும் என்ற எண்ணம் பாரதியின் மனதைக் கவ்வியது. இதற்குத் தக்க மருந்தாக வந்து சேர்ந்தது "இந்தியா" என்ற வாரப் பத்திரிகை.

"இந்தியா" பத்திரிகை ஆரம்பமான கதையை, அதை ஆரம்பித்த கோஷ்டியில் ஒருவரான மண்டயம் எஸ். ஸ்ரீநிவாஸாச்சாரியார் விவரித்திருக்கிருர்:

"பாரதியார் எட்டயபுரம் ஜமீன்தாரிடம் இருந்தபோதும், பள்ளிக்கூடத்தில் பாடம் சொல்லிக் கொடுத்தபோதும், சுதேசமித்திரனில் வேலை பார்த்த போதும்கூட தம் மட்டுக்கு சுதந்திரராய் நடந்துகொள்ள முடிந்ததேயன்றி வெளியாருக்கு அதைப் புகட்ட மேல் எஜமான்கள் இடம் கொடுக்கவில்லை... அவரோ பணமில்லாதவர். தாமாக ஒரு பத்திரிகை ஆரம்பிக்க முடியுமா? முடியாதுதான்.

"அவருக்காகவேதானே என்னமோ, 1905-ன் பிற்பகுதியிலிருந்தே ஒரு பத்திரிகைக்கு வழி கோலப்பட்டுக் கொண்டே வந்தது. திருவல்லிக்கேணியில் ஒரு செல்வக் குடும்பத்தில் பிறந்த ஸ்ரீ நா. திருமலாச்சாரியார் ஆங்கிலத்தில் வெளியாகி வந்த 'பிரம்ம வாதின்' என்னும் மாதப் பத்திரிகையை நாட்டில் நன்கு பரப்புவதென்று அதைச் சில காலம் கையிலெடுத்து நடத்தினர். அது மத சம்பந்தமான பத்திரிகையானதால் பொது ஜனங்களுக்கு வேண்டிய ராஜீய உணர்ச்சியை வளர்க்கும் வியாசங்களுக்கு அது இடம் தராது என்று அதன் சொந்தக்காரரான ஸ்ரீ எம். ஸி. அழகிய சிங்கப் பெருமாள் சொன்னர். அதோடு நாட்டில் இவ்வுணர்ச்சி நன்கு பரவவேண்டுமானல் ஆங்கிலத்தை விடத் தமிழில் பத்திரிகையை நடத்தினல் தான் தக்க பயன் விளையும் எனத் தெரிய வந்தது. உடனே திருமலாச்சாரியார் ஒரு தமிழ் வாரப் பத்திரிகைக்கு வேண்டிய அச்சு யந்திரத்தைத் தேடலானர். பத்திரிகை நடத்துவதில் பயிற்சியும் எழுதும் திறனும் கொண்ட பாரதியார் வந்து சேர்ந்தார்."

Registered No. M. 576.

வெளியூருக்கு 1. அணா. உள்ளூருக்கு ௯ பை.

# இந்தியா.

சனிக்கிழமைதோறும் வெளியாகும்.

பு 2. இ 51



**21. சென்னை இந்தியா, 1908 ஏப்ரல் 25 இதழ்:** முதல் பக்கத்தி லுள்ள கார்ட்டூன் மிதவாதத் தலைவர் மேத்தா தம் 'தர்மபத்தினி' கோகளேயுடன் ஆங்கில அதிகாரிகளைத் திருப்தி செய்வதற்காக காங்கிரஸ் என்ற ஆட்டை யாகத்தில் பலியிட முயல்வதாயும் வெள்ளைக் காரப் பத்திரிகைகள் யாகத் தீக்கு நெய் சொரிவதாயும் காட்டுகிறது.



**22. "இந்தியா" ஸ்தாபகர்** மண்டயம் நா. திருமலாச்சாரி யார். தேசபக்தி மிக்க பத்தி ரிகை நடத்த விரும்பிய இவ ருக்கு பாரதி தக்க ஆசிரியராக வந்துசேர்ந்தார். (அறுபதாண்டு களுக்கு முன் எடுத்த படம்.)



**23. மண்டயம் ஸ்ரீநிவாஸாச் சாரியார்:** "இந்தியா"வை ஆரம்பித்து நடத்திய குடும்பத் தைச் சேர்ந்த இவர் பாரதி யுடன் தாமும் புதுவையில் குடி யேறினர். (1896-ல்எடுத்தபடம்.)

Registered No. M. 892

# இந்தியா.

சனிக்கிழமைதோறும் வெளியாகும்.

24. **சென்னை "இந்தியா", பெரிய அளவு:** மூன்றாவது ஆண்டு முதலாகப் பெரிய அளவில் வந்த சென்னை "இந்தியா"வின் முதல் பக்கத் தோற்றம். இது மலர்-3, இதழ் 7, 1908 ஜூன் 13 இதழ். "இந்திய நிதானஸ்தர்களும் ஆங்கிலேய பிரஜானுகூலர்களும்" என்ற நீண்ட கட்டுரை, "தன் செயல் தனக்கே கெடுதி" என்ற கார்ட்டூன், "சித்திர விளக்கம்" முதலியவை முதல் பக்கத்தில் இருக்கின்றன.

# புத்துணர்ச்சிப் பத்திரிகை "இந்தியா"

"பாரதியாருடைய முழு உரிமையையும் திருமலாச்சாரியார் பாரதியாரின் கையிலேயே விட்டுவிட்டார். அவருடைய எழுதுகோலுக்கு இனி தங்கு தடையில்லை. ஆழ்ந்த அவரெண்ணங்களையும் தமிழ் நாட்டின் ஆதர்சத்தையும் அது கண்ணாடிபோல் எடுத்துக்காட்டத் தொடங்கிற்று. அவருள்ளத்தின் ஆழத்திலிருந்து கனிந்தெழும் உணர்ச்சியை அது சுடச் சுட வரும் சொற்களால் வெளியிட்டு வந்தது. இப்படிக் கொதித்து வரும் சொற்களிலும்கூட, அவருக்கு நல்ல சங்கீத ஞான மிருந்தபடியால், இனிமையும் கம்பீரமும் கலந்தே இருந்தன." புத்துணர்ச்சிப் பத்திரிகை "இந்தியா"வில் பாரதி பிரகாசிக்கத் தொடங்கியதை மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் இவ்வாறு வர்ணிக்கிறார்.

*1906*-ம் ஆண்டு ஏப்ரலில் "இந்தியா", ஆரம்பமாயிற்று. புதிய பத்திரிகையின் காரியாலய நிர்வாகஸ்தராக எம் பி. திருமலாச்சாரி என்ற இளைஞர் இருந்தார். (இவரே *1908*-ல் ஐரோப்பா சென்று, அங்கு பல நாடுகளிலும் அமெரிக்காவிலும் இந்திய விடுதலைக்காக உழைத்து, ரஷ்ய மாதொருத்தியை மணந்து, இந்தியா விடுதலை பெற்றபின் தம் மனையாளுடன் தாயகம் திரும்பி, பம்பாயில், மனையாள் இறக்க, சொல்லொணு வறுமையில் நோய்வாய்ப்பட்டு, யாரும் ஆதரிக்காமல் *20-3-1954* அன்று ஒரு ஆஸ்பத்திரியில் மரணமடைந்தவர். எம். பி. டி. ஆச்சாரியா என்று பெயரைச் சுருக்கிக் கொண்டவர்.)

ஆரம்பத்தில் இந்தியா 'அரை கிரவுன்' அளவில் (*15*-க்குப் *10* அங்குலம்) *16* பக்கங்கள் கொண்டதாய் சனிக்கிழமைதோறும் வெளி வந்தது. *1908*-ம் வருஷத்தில் "இந்தியா" பெரிய அளவில் (கிரவுன் ஸைஸ், *19*-க்குப் *15* அங்குலம்) *8* பக்கங்களுடன் வந்தது. தனிப் பிரதி "உள்ளூருக்கு *9* பை - வெளியூருக்கு *1* அணு." பத்திரிகையின் ரிஜிஸ்டர் எண்: எம். *578*. பாரதி ஆசிரிய வேலையை கவனித்தார்; ஆனால் சட்டரீதியான அறிவிப்பில், பத்திரிகை "அதன் சொந்தக்காரர் எம். ஸ்ரீநிவாஸன் என்பவரால் பாப்பாம்ஸ் பிராட்வே *34*-வது எண்ணில் இந்தியா பிரஸ்ஸில் வெளியிடப்படுகிறது" என்று இருந்தது.

முதல் பக்கத்தில் ஒரு பெரிய அரசியல் கார்ட்டூன் இருக்கும். தென்னாட்டில் இதழ் தோறும் கார்ட்டூன் வெளியிட்ட முதல் பத்திரிகை "இந்தியா". அக்காலத்தில் போட்டோ மூலம் படங்களை 'ப்ளாக்' செய்யத் தெரியாது; வெள்ளீயத் தகடுகளில் படமெழுதிக் கொண்டு வெட்டி ப்ளாக் ஆக்குவார்கள். கார்ட்டூன் சித்திரக்காரருக்கு எதெது எப்படியெப்படி இருக்கவேண்டுமென்று ஆசிரியர் பாரதி சொல்வார், அபிநயித்து நின்றும் காட்டுவார்!

அரசியல் கட்டுரைகள் தவிர பாரதியின் பாடல்களும் கதைகளும்கூட "இந்தியா'வை அலங்கரித்தன. "ஞானரதம்" "இந்தியா"வில் தொடர்கதை போல் வெளி வந்தது.

*50* வருஷத்துக்கு முன், அக்காலத்தில், வாரம் *4,000* பிரதிகள் விற்றது "இந்தியா"!

சென்னை "இந்தியா" *1908*, ஜூன், *13*-ந் தேதி இதழின் படம் எதிர்ப்பக்கத்தில் உள்ளது. இது, "மலர் *3* இதழ் *7*".

இந்த இதழின் முதல் பக்கத்தில், "சென்னப்பட்டணம் *1326* ஹு ஜமாதிலவல் மீ *13*வ கீலக ஹு வையாசி மீ *31*வ" என்ற தேதிகளே இருக்கின்றன. சந்தா விவரமும் விளம்பர விவரமும் உள்ளன. சந்தா உள்நாட்டுக்கு, தபால்கூலி யுட்பட, ஒரு வருஷத்துக்கு *3* ரூபாய். விளம்பர விகிதம் "முழுப் பக்கத்துக்கு மாதம் ஒன்றுக்கு" (அதாவது *4* இதழ்களுக்கு) *40* ரூபாய். சிறு விளம்பரங்களுக்கு, வரி ஒன்றுக்கு அணு *4*.

இந்த இதழின் முதல் பக்கத்தில் "இந்திய நிதானஸ்தர்களும் ஆங்கிலேய பிரஜானுகூலர்களும்" என்ற அரசியல் கட்டுரையும், "தன் செயல் தனக்கே கெடுதி" என்ற கார்ட்டூனும் "சித்திர விளக்கமும்" இருக்கின்றன. "பெரியவர்கள் ஏற்பாட்டின்படி" நடந்த இந்திய தேச பக்தர்கள் "மனு எழுதி ஸ்வராஜ்யம் பெறலாம் என்பது பகற் கனவும் ஆகாயக் கோட்டையுமாம்" என்பதை உணர்ந்து, "இறந்த கைத்தொழில்களை உயிர்ப்பித்து கப்பல் முதலிய மார்க்கங்களால் வியாபாரத்தை பலப்படுத்தி" நாட்டின் செல்வத்தை வளர்க்க முயல்கிறார்கள்; இவர்களே "தேச பக்தர்கள்", "யாசகாதி பிரார்த்தனையால் நன்மை பெறலாமென்று கண்மூடித்தனமாய் இருக்கும் பழங் கக்ஷியார்கள்தான் நிதானஸ்தர்கள்" என்று கட்டுரை மிதவாதிகளைத் தாக்குகிறது.

பொதுஜன அபிப்பிராயத்தை அரசாங்கம் அறிந்து கொள்ளச் சிறந்த கை விளக்காக இருக்கும் சுதேச பாஷைப் பத்திரிகைகளை ஒடுக்க அவர்கள் சட்டமியற்றுவதைக் குறிப்பிட்டு, இப்படிச் செய்வதால் அரசாங்கம் தான் அஞ்ஞான மென்ற இருளில் மூழ்கி இருட் பேய்க்கு பலியாகும் என்றும் சுதேசிய இயக்கத்துக்கு எந்தத் தடையும் ஏற்படாது என்றும் கார்ட்டூனின் விளக்கம் கூறுகிறது.

# கலவரத்தில் முடிந்த காங்கிரஸ்

**1906**-ம் வருஷம் ஜூலை மாதம் ஸ்வாமி அபேதானந்தர் சென்னைக்கு விஜயம் செய்தார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரது சிஷ்யரும் விவேகானந்தரது சகாவுமான அவருக்கு சென்னையில் ராஜோபசாரம் நடந்தது.

'பெரிய உபசரணை மட்டும் போதாது; அவரது உபதேசங்களைப் பின்பற்ற வேண்டும்; அவர் போதிக்கும் தீரத்தன்மையையும் ஐக்கியத் தன்மையையும் பின்பற்ற வேண்டும்' என்று வேண்டுகோள் விடுத்தார் பாரதி. அபேதானந்தர்மீது தோத்திரக் கவியும் புனைந்தார்.

மறு வருஷம், 1907-ல், விபின சந்திர பாலர் என்ற "எரிமலை யொத்த பிரசங்கி" சென்னைக்கு வர பாரதி ஏற்பாடு செய்தார். பெஜவாடா சென்று பாலரை எதிர்கொண்டழைத்தும் வந்தார்.

இச்சமயம், மற்றொரு தீவிரத் தலைவரான லாலா லஜபதி ராய் நாடுகடத்தப்பட்டு பர்மாவில் வாழ நேர்ந்தது. சென்னை மாகாணத்தில், வ உ. சிதம்பரம் பிள்ளைமீதும் சுப்பிரமணிய சிவா மீதும் "ராஜ நிந்தனைக் குற்றம்" சாட்டப்பட்டு, அவர்கள் தண்டனையும் அடைந்தார்கள்.

"சென்னை வாசிகளின் நிதானமெல்லாம் விபின சந்திர பாலரின் சந்நிதானத்திலே பறந்து போய்விட்டது" என்று பாரதி குறித்துள்ளார். "லஜபத்ராய் பிரலாபம்", "லஜபத்ராய் துதி" என்ற பாடல்கள் இக்காலத்தில் கிளம்பியவை.

இந்த நிலையில் 1907-ம் ஆண்டு டிஸம்பர் மாதம் சூரத்தில் காங்கிரஸ் கூடுவதாயிருந்தது. இந்தக் காங்கிஸில்தான் மிதவாதிகளிடமிருந்து காங்கிரஸ் சபையைக் கைப்பற்றத் தீவிரவாதிகள் திட்டமிட்டு முயன்றார்கள். சென்னையிலிருந்து தீவிரவாதிகளான பிரதிநிதிகளை ரயிலில் 'ரிஸர்வ்' பெட்டிகளில் அழைத்துச் செல்லப் போவதாகவும், முன் கூட்டியே பெயர் தெரிவிக்கும்படியும் பாரதி வேண்டுகோள் விடுத்தார். சென்னைக்கு வருமாறு தூத்துக்குடி வக்கீல் வ. உ. சிதம்பரம் பிள்ளைக்குத் தந்தி கொடுத்தார். தீவிரவாதிகள் ஸ்தாபனமான "சென்னை ஜன சங்கம்" கூடி ஆலோசனை செய்தது.

"பாரதி மாமா நூறு பிரதிநிதிகளுக்குக் குறையாமல் சென்னையிலிருந்து சூரத்துக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று சொன்னார்...நூறு பிரதிநிதிகளைக் கூட்டிக் கொண்டு வருவதாகத் திலகருக்குத் தந்தி கொடுத்தோம்" என்று வ. உ. சி. தமது பாரதி நினைவு நூலில் கூறியுள்ளார். பணமில்லாத பிரதிநிதிகளுக்கு மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியும் வ. உ. சி. யும் பணம் கொடுத்துக் கூட்டிச் செல்வதாக ஏற்பாடு.

எதிர் பார்த்ததற்கு அதிகமாக, ஒரு பெட்டிக்கு பதிலாக இரண்டு பெட்டியாய், இரு தினங்களில் ரயிலில் இடம் 'ரிஸர்வ்' செய்து கொண்டு சென்னை இளைஞர்கள் கோஷ்டி சூரத்தை அடைந்தது.

சூரத்தில் மிதவாதத் தலைவர்களும் பரிவாரங்களுடன் கூடியிருந்தனர். இரு கட்சிகளுக்கும் சமரசம் உண்டாக்க நடந்த முயற்சிகள் பலிக்கவில்லை.

மகாசபையின் முதல் நடவடிக்கையிலேயே சச்சரவு மூண்டது. மிதவாதிகள் சார்பில் மகாசபைத் தலைவராக ராஷ் பிஹாரி கோஷின் பெயர் பிரேரேபிக்கப்பட்டதுதான் தாமதம், திலகர் பாய்ந்தெழுந்து, அதைத் தாம் ஆட்சேபிப்பதாய்க் கூறினார். மிதவாதிகள், "பேசாதே! இடத்துக்குப் போ!" என்று கூச்சலிட்டனர். திலகர் அசையவில்லை.

இதற்குள் ராஷ் பிஹாரி கோஷ் மேடை மீதேறித் தம் தலைமைப் பிரசங்கத்தைப் படிக்கவாரம்பித்தார். "நீங்கள் இன்னும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை. படிக்க வேண்டாம்!" என்ற கூச்சல்கள் தீவிரவாதிகளிடையே எழுந்தன. குழப்பம் முற்றியது. வாக்குவாதம் பலத்தது. கைகள் கலந்தன. நாற்காலிகள் பறந்தன. ஒரு மகாராஷ்டிரச் சிகப்புச் செருப்பும் வானத்தில் பறந்தது! சென்னைப் பிரதிநிதிகள் திலகரைச் சுற்றி அரண்போல் நின்றனர்.

"இந்த அமர்க்களமெல்லாம் நடந்துகொண்டிருந்தபோது பாரதியார் தூரத்தில் போய் ஸ்ரீ ஜி. ஏ. நடேசனுடன் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்" என்று சூரத் போயிருந்த ராஜாஜி சொல்கிறார்.

கலவரத்தை அடக்க போலீஸ் வந்தனர். காங்கிரஸ் ஒத்திப் போடப்பட்டது. இதை தீவிரவாதிகள் ஏற்கவில்லை. அரவிந்த கோஷ் தலைமையில் "தேசியவாதிகள் மகாநாடு" நடத்தினார்கள்.

சென்னைக்குத் திரும்பிய பாரதியார் "எங்கள் காங்கிரஸ் யாத்திரை" என்ற சிறு பிரசுரத்தை வெளியிட்டார். இது இரண்டேயணா விலையில் விற்கப்பட்டதாகவும், "புதிய கட்சியின் கோட்பாடுகள்" என்ற தலைப்பில் திலகரின் பிரசங்கம் ஒன்றையும் சிறு நூலாக வெளியிட்டதாகவும் அக்காலப் பத்திரிகாசிரியர் ஸ்ரீ எஸ். ஜி. ராமாநுஜுலு நாயுடு கூறியுள்ளார்.

எங்கள்

# காங்கிரஸ் யாத்திரை



ஸ்ரீ. ஸி. சுப்பிரமணிய பாரதி
யவர்களால் செய்யப்பட்டது.

# Our Congress Tour.

## எங்கள் காங்கிரஸ் யாத்திரை.

சென்னப்பட்டணத்து ஸென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து 21-ம் தேதி சனிக்கிழமை யன்று மாலை சென்னப்பட்டணத்துப் புதியகட்சிப் பிரதிநிதிகளிலே சுமார் 30 பேர் புறப்பட்டோம். தஞ்சாவூர் ஸ்ரீ கே. ராமஸாமி அய்யர், தூத்துக்குடி ஸ்ரீ சிதம்பரம்பிள்ளை, சென்னப்பட்டணத்திலிருந்து ஸ்ரீ. சக்கரைச்செட்டி, பி. ஏ. பி. எல். ஸ்ரீ துரைஸாமி அய்யர், எம். ஏ. பி. எல். ஸ்ரீ சங்கர நாராயணய்யர், ஸ்ரீ. வெங்கடரமணராவ, ஸ்ரீ. யதிராஜ சுரேந்திரநாத், நான், முதலியவர்களும், திருவல்லிக்கேணியிலிருந்து சில பிரபுக்களும், வெளியூர் கனவான்கள் சிலரும் எங்கள் கூட்டத்திலே சேர்ந்திருந்தனர். ஸ்டேஷனுக்கு எங்களுடைய சிநேகிதர்களும், சுதேசபக்தியின் விசேஷத்தினால் எங்களைப் பிரியத்துடன் உபசரித்தனுப்ப வந்த கனவான்களும், நானா திசைகளிலிருந்தும் வந்து சேர்ந்திருந்தார்கள். ஸ்வதேச விசுவாசத்தையே ஆவேசமாகக் கொண்டவர்களும், பாரத நாட்டின் எதிர் காலத்து ஸம்ரக்ஷகர்களுமாகிய வாலிபர்கள் வந்து எங்களுக்கு மிகுந்த சந்தோஷத்தை விளைவித்தார்கள். சுமைவண்டிகளை எங்களுடைய அறைகளுக்கு இழுத்துவருவதற்கு நாங்கள் கூலிக்காரர் வைத்திருந்தபோதிலும், சில குணசாலிகளான வாலிபர்கள் அந்த வண்டிகளைத் - தாமே

25, 26. **சூரத் காங்கிரஸ் :** போய் வந்ததும் பாரதி வெளியிட்ட சிறு பிரசுரத்தின் மேலட்டையும் முதல் பக்கமும்.

27, 28. **சூரத் காங்கிரஸ் பந்தல் :** கலவரத்துக்கு முன்னும் பின்னும்.





வந்தே மாதரம்.

# ஸ்வதேச கீதங்கள்

ஸ்ரீ. சுப்பிரமணிய பாரதியால்,

இயற்றப்பட்டவை.

1907.

THE INDIA STEAM PRINTING WORKS, MADRAS.

29. **முதல் பிரசுரம்:** வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் அச்சிட்டு இலவசமாய் விநியோகித்த பாரதி கீதப் பிரசுரத்தின் முதல் பக்கத்தின் புகைப்படம்.

ஓம்.

## வந்தேமாதரம்.

தாயுமானவர் ஆனந்தக்களிப்பு மெட்டு.
ராகம் நாதநாமக்கிரியை. தாளம் ஆதி.

பல்லவி

வந்தே மாதர மென்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குது மென்போம். (வந்தே)

சரணங்கள்.

1. ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்ம மித்தேசத்தி லெய்தின ராயின்,
வேதிய ராயினு மொன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினு மொன்றே. (வந்தே)

2. ஈனப் பறையர்க ளேனும்—அவர்
எம்முடன் வாழ்ந்திங் கிருப்பவ ரன்றோ?
சீனத்த ராய்விடு வாரோ?—பிற
தேசத்தர் போற்பல தீங்கிழைப் பாரோ? (வந்தே)

3. ஆயிர முண்டிங்கு ஜாதி—எனில்
அன்னியர் வந்து புகலென்ன நீதி?—ஓர்
தாயின் வயிற்றிற் பிறந்தோர்—தம்முட்
சண்டை செய்தாலும் சகோதர ரன்றோ? (வந்தே)

4. ஒன்றுபட் டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் னமக்கெது வேண்டும்? (வந்தே)

5. எப்பதம் வாய்த்திடு மேனும்—நம்மில்
யாவர்க்கு மந்த நிலைபொது வாகும்
முப்பது கோடியும் வாழ்வோம்—வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம். (வந்தே)

6. தேவிகம் பாரத பூமி—எங்கள்
தீமைகள் யாவையுந் தீர்த்தருள் செய்வாள்
ஆவி யுடல் பொருள் மூன்றும்—அந்த
அன்னை பொற் றாளினுக் கர்ப்பித மாக்கி. (வந்தே)

30. "ஸ்வதேச கீதங்கள்" பிரசுரத்தின் இரண்டாம் பக்கம். இங்குள்ள பாடலின் 6-வது பா தற்சமயம் அச்சில் இல்லை என்பது குறிப்பிடத் தக்கது.

# முதல் பிரசுரம்

**1904**-ல் சென்னை வந்தது முதலே பாரதியின் தேசாவேசம் பெருந்தீயாகக் கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. வங்கப் பிரிவினை சமயம் "வந்தே மாதர" கீதத்தை, "இனிய நீர்ப் பெருக்கினை! இன் கனி வளத்தினை!" என்று துவங்கும் முதல் மொழி பெயர்ப்பை, 1905- டிஸம்பர் மாதம் "சக்கரவர்த்தினி' பத்திரிகையில் பாரதி வெளியிட்டார்.

இதற்கு இரண்டு மாதம் கழித்து, 1906 பெப்ருவரியில், "எமது தாய்நாடாகிய பாரதாம்பிகையின் பெருமையை வருணித்து ஆங்கிலத்திலும் தமிழிலும் பல்வேறு காலத்துப் பல்வேறு புலவர்களால் பாடப் பெற்ற செய்யுள் மணிகளை ஓர் மாலையாகப் புனைந்து" பதிப்பித்து ஒரு நூல் வெளியிடத் தாம் விரும்புவதாகவும், பழைய நூல்களிலுள்ள நாட்டு வர்ணனைகளல்லாமல் புதியனவான தேசபக்திப் பாடல்களைப் புனைந்தனுப்புமாறும் "சுதேசமித்திர"னில் ஒரு வேண்டுகோள் வெளியிட்டார்.

பாரதி எதிர்பார்த்தபடி தேசியக் கவிதைகளை எவரும் அனுப்பவில்லை. ஆதலால், குறையை நிவர்த்திக்கும் பணியில் தாமே ஈடுபட்டுவிட்டார் அவர்! அவர் இயற்றிய பல தேசாவேசப் பாக்கள் "மித்திர"னிலும் "இந்தியா" விலும் இதர பத்திரிகைகளிலும் வெளிவந்தன. ஆயினும் கவிஞருக்குத் திருப்தியில்லை. தமது பாடல்களை நூல் வடிவில் வெளியிட ஆவலாயிருந்தார்; ஆனால் பணத்துக்கோ வழியில்லை. என் செய்வது? தம் சிநேகிதரான ஸ்ரீ ஜி. ஏ. நடேசனிடம் தம் மனக்குறையைத் தெரிவித்துக் கொண்டாராம். அதற்கு அவர், "உங்களுடைய ஆசையைப் பூர்த்தி செய்யக் கூடியவர் ஸ்ரீ. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரே. வேண்டுமானால் உங்களை அவரிடம் இன்றே அழைத்துச் செல்கிறேன்" என்றார்.

பழுத்த மிதவாதியும், தமது "இந்தியா" பத்திரிகையில் வாரம் தோறும் கடுமையான தாக்குதலுக்கு இலக்காகுபவருமான ஒரு அரசியல் எதிராளியிடம் இந்த சகாயத்துக்குப் போவதா? போனால்தான் பலிக்குமா? "அவர் சதா என்னைப் பற்றிக் கோபத்துடன் பேசுகிறாராமே! எனக்கு அவரிடம் போக இஷ்டமில்லை" என்றார் பாரதி.

ஸ்ரீ. நடேசன் விடவில்லை. "உங்களுக்கு அவர் சுபாவம் தெரியாது. உங்கள் பாட்டை அனுபவித்தாரானால் தகுந்த உபகாரம் செய்யாமல் இருக்கமாட்டார்" என்று திரும்பத் திரும்ப வற்புறுத்தி, அன்று மாலை பாரதியை ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

மயிலாப்பூரிலுள்ள தமது பங்களாவுக்கு முன்னால், திறந்த வெளியில் நண்பர்களுடன் அளவளாவிக் கொண்டிருந்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர். சற்றே இருட்டிய சமயம். நடேசன் ஏதோ புது மனிதர் ஒருவருடன் வந்திருப்பதைக் கண்டு யாரென விசாரித்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர். ஐயரும் பாரதியும் முன்னர் சந்தித்ததில்லை நடேசன் புன்முறுவலுடன், "இவர் ஒரு தமிழ்க் கவிஞர்; சில பாட்டுக்களை இயற்றியிருக்கிறார். நிச்சயம் கேட்பீர்கள் என்று அழைத்து வந்திருக்கிறேன்" என்றார். ஐயரின் குறிப்பறிந்து பாரதியைப் பாடச் சொன்னார் நடேசன். கணீரென்ற குரலில் பாரதி "வந்தே மாதரம் என்போம்" என்ற பாட்டை, நாத நாமக்கிரியையில் ஆனந்தக் களிப்பு மெட்டில் பாடத் தொடங்கினார். "ஆயிரம் உண்டிங்கு ஜாதி" என்ற அடியில், நாற்காலியில் சாய்ந்திருந்த கிருஷ்ணஸ்வாமி ஐயர் உட்கார்ந்து விட்டார்.

அடுத்தபடி "எந்தையும் தாயும்" என்று துவங்கும் 'நாட்டு வணக்க'த்தை காம்போஜியிலும், முடிவாக "மன்னுமிமயமலை" என்று துவங்கும் 'எங்கள் நாடு' பாட்டை பூபாளத்திலும் பாடி முடித்தார் பாரதி, கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு உற்சாகம் தாங்கவில்லை. "இவ்வளவு அழகான பாட்டுக்களை ஏன் நீர் ஊறப் போட்டு வைத்துக் கொண்டிருக்கிறீர்! நாடெங்கும் பள்ளிகளிலும், பெண்களுக்கு சங்கீதம் சொல்லிக் கொடுக்கும் தனிகர்

களிடையிலும் இவைகளைப் பரவச் செய்ய வேண்டாமா? ஏன் சும்மா இருக்கிறீர்?', என்று கேட்டார்.

நண்பர் நடேசன் கவிஞரின் நிலைமையை நயமாக விளக்கினுர்; "நீங்கள் உதவி செய்தால்..." என்ருர்.

"அதற்கென்ன தடை? இதோ உங்களுக்கு நூறு ரூபாய். இந்த மூன்று பாட்டுக்களை அச்சிட்டு இனமாக வழங்க ஆகும் செலவை யும் நான் ஏற்றுக் கொள்கிறேன். உங்கள் பெயர் என்ன?"

தர்மசங்கடமான நிலைமை. பாரதி நடேசனைப் பார்த்தார். அவரோ, சிரிப்புடன், "இவர்தான் அடிக்கடி 'இந்தியா' பத்திரிகையில் நீங்கள் வாசிக்கும் கட்டுரைகளின் ஆசிரியர் பாரதியார்" என்று தெரிவித்தார். எதிர் பார்த்ததற்கு மாருக கிருஷ்ணஸ்வாமி ஐயரும் "தாங்கள்தான் சுப்பிரமணிய பாரதியாரா! என்ன உயர்ந்த தேசாபிமானம் தங்களிடம் தெரிகிறது! இது தெரியாமல் தங்களை வெறும் வெறி பிடித்தலையும் தீவிரவாதிகளில் ஒருவராக அல்லவோ நினைத்தேன்!" என்ருராம்.

அன்று பாரதி பாடிய மூன்று பாட்டுக்களையும் பதினையாயிரம் பிரதிகளுக்குமேல் அழகிய காகிதத்தில் அச்சிட்டு நாடெங்கும் பள்ளிக்கூடங்களுக்கும் பொது ஸ்தாபனங்களுக்கும் இலவசமாய் அனுப்பிவைத்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர்.

(இந்த விவரங்களை, வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் புதல்வர் ஸ்ரீ. கி. சந்திரசேகரன் தமது தந்தையின் சரித்திர நூலில் வெளியிட்டிருக்கிருர்.)

பாரதியின் பாடல்கள் தனிப் பிரசுரமாக வெளிவந்தது இதுதான் முதல்தடவை. 1904-ல் முதல் தடவையாக பாரதி பாடல் அச்சேறியது; 1907-ல் முதல் தடவையாக பாரதி பாடல்கள் சிறு தனிப் பிரசுரமாக வெளியாயின.

1907-ல் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் வெளியிட்ட "ஸ்வதேச கீதங்கள்" பதிப்பில், "வந்தே மாதரமென்போம்" என்ற முதல் பாடலின் கடைசிப் பா பின்னர் வந்த பதிப்புகளில் விட்டுப் போயிருக்கிறது.

> **"தேவி நம் பாரதபூமி—எங்கள்**
> **தீமைகள் யாவையுந் தீர்த்தருள் செய்வாள்**
> **ஆவியுடல் பொருள் மூன்றும்—அந்த**
> **அன்னை பொற்ருளினுக் கர்ப்பிதமாக்கி**
>
> (வந்தே)"

என்பதுதான் விட்டுப்போன பா. ஆனல், இந்த 1907-ல் பதிப்பில் இல்லாத "புல்லடிமைத் தொழில் பேணி" என்ற பா தற்போதைய பதிப்புகளில் இருக்கிறது. பாரதியாரே பாடல்களைக் கூட்டிக் குறைத்துத் திருத்தினரோ என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே" என்ற சிறந்த பாட்டை பாரதி பாடியதற்கும் வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் தூண்டுகோலாயிருந்தார் என்று தெரிகிறது.

கிருஷ்ணஸ்வாமி அய்யர், நம்முடைய நாட்டின் பழம் பெருமையை ஆண்களும் பெண்களும் பாடும் வண்ணம் எளிய நடைப் பாட்டாக அமைக்கவேண்டும் என்று அடிக்கடி உரைத்து வந்தார். அய்யருடன் பாரதி பழக்கமான பிறகு ஒருநாள் சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் கிருஷ்ணஸ்வாமி அய்யர் செய்ததோர் பிரசங்கத்தில் "தமிழில் எத்தனை நூல்கள் இருக்கின்றன! திருவள்ளுவர் திருக்குறள் செய்த பாஷை இது; கம்பன் இராமாயணம் இயற்றியது இந்தப் பாஷையிலே; நாயன்மார் தேவாரம் பாடிய பாஷை; மாணிக்கவாசகர் திருவாசகம் அருளிய பாஷை; ஆழ்வார்கள் திவ்வியப் பிரபந்தம் பெற்றதும் இப் பாஷையேதான்" என்றெல்லாம் கூறினுர். அந்தப் பிரசங்கத்தைக் கேட்டவர்களில் பாரதியாரும் ஒருவர். அந்தப் பேச்சின் கருத்துக்களை வித்தாகக் கொண்டு, "செந்தமிழ் நாடெனும் போதினிலே" என்ற பாட்டைப் புனைந்து, கிருஷ்ணஸ்வாமி அய்யரிடம் பாடியும் மகிழ்வித்தார் பாரதி.

(இவ்விவரத்தை தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாத அய்யரவர்கள் தமது "நினைவு மஞ்சரி" நூலில் வெளியிட்டிருக்கிருர்.)

## நாட்டு வணக்கம்.

### ஸ்வதேச வந்தனம்.

காம்போதிராகம்—ஆதிதாளம்.

(1) எந்தையுந் தாயு மகிழ்ந்து குலாவி
யிருந்தது மிந்நாடே—அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே—அவர்
சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே—இதை
வந்தனை கூறி மனதி லிருத்தி யென்
வாயுற வாழ்த்தேனோ?—இதை
(பல்லவி) வந்தேமாதரம் - வந்தேமாதரம்
என்று வணங்கேனோ?

(2) இன்னுயிர் தந்தெமை யீன்றுவளர்த் தரு
ளீந்தது மிந்நாடே—எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
யறிந்தது மிந்நாடே—அவர்
கன்னிய ராகி நிலவினி லாடிக்
களித்தது மிந்நாடே—தங்கள்
பொன்னுட லின்புற நீர்விளை யாடியில்
போந்தது மிந்நாடே—இதை
(பல்லவி) வந்தே மாதரம், வந்தே மாதரம்
என்று வணங்கேனோ?

(3) மங்கைய ராயவர் இல்லற நன்கு
வளர்த்தது மிந்நாடே—அவர்
தங்க மதலைக ளீன்றமு தூட்டித்
தழுவிய திந்நாடே—மக்கள்
துங்க முயர்ந்து வளர்கெனக் கோயில்கள்
சூழ்ந்தது மிந்நாடே—பின்னர்
அங்கவர் மாய அவருடற் பூந்துகள்
ஆர்ந்தது மிந்நாடே—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தேமாதரம்,
என்று வணங்கேனோ?

31. "ஸ்வதேச கீதங்கள்" பிரசுரத்தின் மூன்றாவது பக்கம். இங்குள்ள பாடலுக்கு "நாட்டு வணக்கம்" "ஸ்வதேச வந்தனம்" என்ற இரு தலைப்புகள் இருப்பது கவனிக்கத் தக்கது.

## எங்கள் நாடு.

(பூபாள ராகம்)

மன்னும் இமய மலையெங்கள் மலையே
மாநில மீதது போற்பிறி திலையே
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே.
பன்னரு முபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே.
போற்றுவ மிஃதை யெமக்கிலை யீடே. (1)

மாரத வீரர் மலிந்த நன்னாடு,
மாமுனி வோர்பலர் வாழ்ந்தபொன் னாடு,
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையு நாடுறு நாடு
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர்பிரா னருள்பொங்கிய நாடு.
பாரதநாடு பழம்பெரு நாடே
பாடுவ மிஃதை யெமக்கிலை யீடே. (2)

இன்னல்வந் துற்றிடும் போததற் கஞ்சோம்
ஏழைய ராகி யினிமண்ணிற் றுஞ்சோம்
தன்னலம் பேணி யிழிதொழில் புரியோம்
தாய்த்திருநாடெனி லினிக்கையை விரியோம்
கன்னலுந் தேனும் கனியுமின் பாலும்
கதலியும் செந்நெலு நல்குமெக் காலும்
உன்னத ஆரிய நாடெங்கள் நாடே
ஓதுவமிஃதை யெமக்கிலையீடே. (3)



32. "ஸ்வதேச கீதங்கள்" பிரசுரத்தின் கடைசிப் பக்கம். இந்த நான்கு பக்கப் பிரசுரமே பாரதி கீதங்களின் முதல் பிரசுர மாகும்.



33. **வி. கிருஷ்ணசாமி ஐயர்:** தம் அரசியல் எதிரி பாரதியின் தேசபக்திப் பாடல்களில் சொக்கிப்போய் அவைகளை முதலில் அச்சிட்டு இலவசமாய்ப் பரப்பிய வள்ளல்.



34. **கப்பலோட்டிய தமிழர்:** சிறந்த தேசபக்தரும் பாரதியின் நண்பரும் தீவிரவாதிகள் தலைவரும் பாரதி உதவி கொண்டு சுதேசிக் கப்பல் கம்பெனி நிறுவியவருமான வ. உ. சிதம்பரம் பிள்ளை.

35. **"இந்தியா" அலுவலகம்:** சென்னை பிராட்வேயில் 34-ம் எண் இல்லம். இங்குள்ள படியில் பாரதி இறங்கி வரும்போதுதான் 'வாரண்டு'டன் வந்த போலீஸ்காரனைச் சந்தித்தார்.

# முதல் நூல்

**1907**-ல் மூன்று பாட்டுகளும் ('வந்தே மாதரமென்போம்', 'எந்தையும் தாயும்' 'மன்னுமிமயமலை') நான்கே பக்கங்களுமாக வெளிவந்த "ஸ்வதேச கீதங்கள்" பிரசுரம், அடுத்த வருஷத்தில், பெரிய அளவில் தனி நூலாக வெளியாயிற்று.

1908-ல் வெளியான "ஸ்வதேச கீதங்க"ளே முதன் முதலில் வெளியான பாரதி பாடல் நூல். இந்தப் புத்தகத்தில் இருந்த 14 பாடல்களின் முதலடிகளாவன:

1. வந்தே மாதரமென்போம்
2. வந்தே மாதரம்—(ஜய ஜயபாரத)
3. எந்தையும் தாயும்
4. மன்னுமிமய மலை
5. வாழிய செந்தமிழ்
6. விண்ணகத்தே இரவிதனை (லஜபதிராய் துதி)
7. பாபேந்திரியஞ் செறுத்த (பூபேந்திரர் விஜயம்)
8. நெஞ்சிலுரமுமின்றி
9. நாடிழந்து மக்களையும் (லஜபதிராய் பிரலாபம்)
10. தொண்டு செய்யும் அடிமை
11. வீர சுதந்திரம் வேண்டி நின்றார்
12. முன்னுளில் இராமபிரான் (தாதாபாய் நௌரோஜி)
13. ஓய் திலகரே! நம்ம ஜாதிக்கடுக்குமோ
14. பேரருட் கடவுள் திருவடியாணை (மாஜினி சபதம்)

முதல் ஐந்து பாடல்கள் தவிர பாக்கி ஒன்பதும் அரசியல் நிகழ்ச்சிகளை யொட்டிய பாடல்களே. இதை யாவும் லஜபதி, திலகர், முதலிய தீவிரக் கட்சியினரின் போக்குக்கு ஆதரவாகவும், நிதானக் கட்சியினரின் போக்கை மதிப்பற்றதாக்குபவையாகவும் இருக்கின்றன. தமக்குப் பிடித்த நந்தன் சரித்திரக் கீர்த்தனை மெட்டுகளில் 10, 11, 13, எண்ணிட்ட பாடல்கள் பாடியிருக்கிறார்.

"ஸ்வதேச கீதங்கள்" நூலுக்கு ஸமர்ப்பணம், முகவுரை இரண்டும் இருந்தன. ஆழ்ந்த குருபக்தியுடன் பாரதி தமது நூலை நிவேதித்தா தேவிக்கு வருமாறு சமர்ப்பணம் செய்தார்: "ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டி ஆத்தும நிலை விளக்கியதொப்ப, எனக்கு பாரத தேவியின் ஸம்பூர்ண ரூபத்தைக் காட்டி, ஸ்வதேச பக்தியுபதேசம் புரிந்தருளிய குருவின் சரண மலர்களில் இச் சிறு நூலை சமர்ப்பிக்கிறேன்.—ஆசிரியன்."

தமது முகவுரையில் பாரதி கூறினர்: "ஒருமையும் யௌவனத் தன்மையும் பெற்று விளங்கும் பாரததேவியின் சரணங்களிலே யான் பின் வரும் மலர்கள் கொண்டு சூட்டத் துணிந்தது எனக்குப் பிழையென்று தோன்றவில்லை. யான் சூட்டியிருக்கும் மலர்கள் மணமற்றன என்பதனை நன்கறிவேன். தேவலோகத்துப் பாரிஜாத மலர்கள் சூடத் தகுதிகொண்ட திருவடிகளுக்கு எனது மணமற்ற முருக்கம் பூக்கள் அணிக் குறைவை விளைக்கும் என்பதனையும் யான் தெரிந்துள்ளேன். ஆயினும் உள்ளன்பு மிகுதியால் இச் செய்கையிலே துணிவு கொண்டு விட்டேன். சாக்கியன் எறிந்த கற்களையும் சிவபிரான் மலர்களாகக் கருதி அங்கீகரிக்க வில்லையா? அதனையொப்ப, எனது குணமற்ற பூக்களையும் பாரத மாதா கருணையுடன் ஏற்றருளுக!

மயிலாப்பூர் — ஸி. சுப்பிரமணிய பாரதி"
1908-ம் ஞு ஜனவரி 10 உ

"குணமற்ற பூக்கள்" என்று கவிஞன் தன் னடக்கத்துடன் கூறிய இப்பாடல்களைத் தமிழறிஞர்கள் வரவேற்றுப் போற்றினர்கள். இந்த நூலுக்குக் கிடைத்த ஆதரவு, இன்னெரு நூலை வெளியிட பாரதியைத் தூண்டிற்று. இந்நூல் வெளியான மறு வருஷம், 1909-ல், பாரதியார் புதுவை போனபின், "ஜன்ம பூமி" என்ற பெயரில் அவர் "ஸ்வதேச கீதங்கள்" நூலுக்கு இரண்டாம் பாகம் வெளியிட்டார். அதையும் அவர் நிவேதித்தா தேவிக்கே சமர்ப்பணம் செய்தார்:

"எனக்கு ஒரு கடிகையிலே மாதாவினது மெய்த் தொண்டின் தன்மையையும் துறவுப் பெருமையையும் சொல்லாமலுணர்த்திய குருமணியும் பகவான் விவேகானந்தருடைய தர்ம புத்திரியும் ஆகிய நிவேதித்தா தேவிக்கு இந் நூலை சமர்ப்பிக்கிறேன்.—ஸி. சுப்பிரமணிய பாரதி."

தேச பக்தி என்ற நவீன மார்க்கத்தில் வயப்பட்டு, புதிய சுடரினிடத்து அன்பு பூண்டு, "அவ்வன்பு காரணமாகச் சென்ற வருஷம் சில கவிதை மலர் புனைந்து மாதாவின் திருவடிக்குப் புனைந்தேன். நான் எதிர் பார்த்திராத வண்ணமாக மெய்த் தொண்டர்கள் பலர் 'இம் மலர்கள் மிக நல்லன' என்று பாராட்டி மகிழ்ச்சி யறிவித்தார்கள். மாதாவும் அதனை அங்கீகாரம் செய்து கொண்டாள். இதனுல் துணிவு மிகுதியுறப் பெற்றேனுகி, மறுபடியும் தாயின் பத மலர்க்குச் சில புதிய மலர்கள் கொணர்ந்திருக்கிறேன். இவை மாதாவின் திருவுள்ளத்திற்கு மகிழ்ச்சி யளிக்குமென்றே நினைக்கிறேன்" என்று முகவுரையில் கவிஞர் கூறியிருக்கிறார்.

# புதிய கட்சித் தலைவர்

சூரத் காங்கிரஸின்போது தீவிரக் கட்சிப் பத்திரிகாசிரியர்கள் ஒன்றுகூடித் தங்கள் நோக்கங்கள் நாட்டில் பரவ ஒரு ஒழுங்கான திட்டப்படி வேலை செய்யத் தீர்மானித்தார்கள். சர்க்கார் செய்யும் யதேச்சாதிகாரச் செயல்களைக் கண்டிக்கும்போது எல்லாப் பத்திரிகைகளும் ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றியே எழுதி நாடெங்கும் பெருங் கிளர்ச்சி யுண்டாக்க வேண்டும் என்றும் தீர்மானமாயிற்று. சென்னையின் பொறுப்பை பாரதி ஏற்றுக் கொண்டார். அதற்கொப்ப, சூரத்திலிருந்து சென்னை திரும்பியதுமுதலே பாரதி திலகரின் தீவிர வழியை ஆதரித்துப் பல காரியங்கள் செய்தார். உடல் வலிமை அவருக்கு அதிகமில்லை. ஆனால் மனவலிமை அதிகம். கடற்கரையில் அவர் பேசாத கூட்டமிராது. அவரது வீர மொழிகளையும் பாடல்களையும் கேட்க ஜனங்கள் பல்லாயிரக் கணக்கில் காத்திருப்பர்.

அவரது எழுது கோலுக்கும் இரவு பகலாய் வேலை இருந்தது.

இப்பொது திருவல்லிக்கேணி கடற்கரை ரேடியோ வைத்திருக்கும் இடத்தில்தான் விபின சந்திர பாலர் அமோகமான சொற்பொழிவு நடத்தினர். பாரதியின் கூட்டங்களும் அங்கேயே நடந்தன. பாலர் பேசிய சமயம் கூட்டம் ஜன சமுத்திரமாக விருந்தது; மித வாதிகள்கூட ஆங்காங்கு மறைவிலிருந்து தீவிரவாதி பாலரின் பேச்சைக் கேட்டுப் போனார்கள். இப்பேச்சுகளுக்காக பாலர் மீது ராஜத் துரோக வழக்கு நடத்த சென்னை அரசாங்கம்விரும்பியதாகவும், அட்வகேட்ஜெனரலாகவிருந்த வி. பாஷ்யமய்யங்கார் வேண்டாமென யோசனை கூறியதாகவும் ஒரு வதந்தி.

ஆனால் பஞ்சாபில், வேறு இரண்டு "புதிய கட்சி"த் தலைவர்கள், லஜபத்ராயும் அஜித் ஸிங்கும், நாடு கடத்தப்பட்டார்கள். 1907, மே மாதம் 9-ந் தேதி அவர்கள் விடுவிக்கப் பெற்று நாடு திரும்பினர். தீவிரவாதிகளுக்கு உற்சாகம் அதிகமாயிற்று.

இதே சமயம், தெற்கே, சுதேசித் தொழிலை விருத்தி செய்வதற்காகத் தூத்துக்குடி வக்கீல் வ. உ. சிதம்பரம் பிள்ளை ஒரு சுதேசிக் கப்பல் கம்பெனி ஆரம்பித்தார். இந்தியா-இலங்கைக் கடல் மார்க்கத்தில் ஒரு சில பாய்க் கப்பல்கள் ஏற்றிச் செல்லும் சரக்குகள் தவிர மற்றெல்லாச் சரக்குகளும் ஒரு பிரிட்டிஷ் கம்பெனியின் கப்பல்களிலேயே போய் வருவது வழக்கமாயிருந்தது. இந்தியக் கப்பல் கம்பெனி ஒன்று ஆரம்பித்தால் நல்ல லாபம் கிடைக்குமென்று, "சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி" யென்ற கூட்டுத்தொழில் கம்பெனியை ரிஜிஸ்டர் செய்து இரு புகைக் கப்பல்களை விலைக்கு வாங்கினர் சிதம்பரம் பிள்ளை. இந்தக் கம்பெனிக்குப் பணம் சேர்க்க பாரதியார் ஒத்துழைத்தார். 'புதுச்சேரியார்' என்ற மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் குடும்பம் கப்பல் கம்பெனிக்கு 70 ஆயிரம் ரூபாய் பொருள் உதவியது. சிதம்பரம் பிள்ளையைப் புதுச்சேரியாரிடம் அறிமுகம் செய்து வைத்தது பாரதியே.

சூரத் காங்கிரஸின்போது தீவிரக் கட்சித் தலைவர்கள் தீர்மானித்தபடி இளைஞர்களை ஒன்று கூட்டி, சென்னை ஜனசங்கம் என்று ஒரு ஸ்தாபனம் அமைத்தார் பாரதி. சுதேசிப் பொருள்களை மாத்திரம் விற்க வேண்டுமென 'பாரத பண்டார்' என்ற கடையை பாரதியும் நண்பர்களும் ஆரம்பித்தார்கள்.

1908-ம் வருஷம் ஒரு குறிப்பிட்ட தினத்தை நாடெங்கும் 'சுயராஜ்ய தின'மாகக் கொண்டாட வேண்டும் என்று தீவிரக் கட்சியினர் தீர்மானித்தனர். சென்னையில் அத் தினத்தை வெகு ஆடம்பரமாகக் கொண்டாட ஏற்பாடாயிற்று. நகரின் பல பாகங்களிலிருந்தும் ஊர்வலங்கள் புறப்பட்டு, திருவல்லிக்கேணி பெல்ஸ் ரோடில் கூடி, பைகிராப்ட்ஸ் ரோடு வழியாகக் கடற்கரை சென்று பொதுக்கூட்டம் நடத்துவதென சென்னை ஜனசங்கம் முடிவு செய்தது. பாரதியும் எதிராஜ் சுரேந்திரநாத் ஆரியாவும் மற்றும் பல தொண்டர்களும் இரண்டு மூன்று தினங்கள் முன்னிருந்தே, ஆங்காங்கு காலையிலும் மாலையிலும் சிறு சிறு கூட்டங்கள் கூட்டி மாணவர்களையும் மற்றவர்களையும் ஊர்வலமாக வரும்படி தூண்டி வந்தார்கள்.

குறிப்பிட்ட தினத்தில் எல்லா ஊர்வலங்களும் பெல்ஸ் ரோடு-பைகிராப்ட்ஸ் ரோடு மூலையில் கூடும்போது மேளதாளங்களோடு கடற்கரையை நோக்கிச் செல்லத் திட்டமிட்டிருந்தனர். பொது ரஸ்தாவில் மேளதாளங்களோடு போக போலீஸ் கமிஷனருக்கு எழுதிப் போட்டும் லைசென்ஸ் வரவில்லை. பாண்டு மேள கோஷ்டியினர் தயங்கினர்கள். "நான் இருக்கிறேனடா, தம்பிகளா!" என்று தைரியமளித்து, கழுத்தில் மாலையுடன், மேளதாளங்கள் முழங்க, பெரும் படை ஒன்றை முன்னின்று நடத்திச் செல்லும் போர்த் தலைவன்போல ஊர்வலத்தைக் கடற்கரைக்கு அழைத்துச் சென்றார் பாரதி. கடல் மணலில் மிகப் பெரிய கூட்டம் நடந்தது; போலீஸார் யாதொன்றும் செய்யத் துணியவில்லை.



புனா நகரத்தில் தேசபக்த சிரோமணியாக
விளங்கும், ஸ்ரீ லோகமான்ய
பாலகங்காதர திலகர்.

**Maharshi B. G. Tilak.**

# THE TENETS OF THE NEW PARTY.

## புதிய கட்சியின் கொள்கைகள்.

1907ல்

(ஸ்ரீமத் பாலகங்காதர திலகர் செய்த
அருமையான உபந்நியாசத்தின்
தமிழ் மொழி பெயர்ப்பு.)

நம்முடைய ராஜாங்க விவகாரங்களின் சம்பந்தமாக இப்பொழுது இரண்டு புதிய வார்த்தைகள் ஏற்பட்டிருக்கின்றன. அதாவது, 'நிதானஸ்தர்கள்,' 'தீவிரஸ்தர்கள்' என்ற வார்த்தைகளேயாம். இந்த இரண்டு வார்த்தைகளும் கால சம்பந்தமான குறிப்பையுடையன. ஆதலால், இவற்றின் அர்த்தங்களும் காலம் மாற மாற

36, 37. **பாரதி வெளியிட்ட சிறு நூல்:** சூரத் காங்கிரஸ் சென்று திரும்பியபின் திலகர் கட்சியின்கொள்கைகளைப் பரப்ப பாரதி 1908-ல் வெளியிட்ட மற்றொரு பிரசுரத்தின் முகப்புப் பக்கமும் முதல் பக்கமும்.

38. **கடற்கரைக் கூட்டம்**: சென்னை திலகர் கட்டத்தில் ஒரு கூட்டம் இப்படம் பிற்காலத்தில் எடுக்கப்பெற்றதாயினும், பாரதி காலக் கூட்டங்களும் அநேகமாய் இப்படியேதான் இருந்தன.



39. **சுரேந்திரநாத் ஆரியா**: பாரதியின் ஆதி காலத் தோழர், வன்மை மிக்க பிரசங்கி, தீவிர வாதத் தலைவர். இவரது முழுப் பெயர்: எஸ். பி. யதிராஜ் சுரேந்திரநாத் வோகலி ஆரியா. (சுமார் 1929-ல் எடுத்த படம்.)

40. **புகழ் பெற்ற குடும்பம்**: பாரதியை ஆதரித்த மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரும் (வலக் கோடி) குடும்பத்தினரும். இடமிருந்து வலம்: பார்த்தஸாரதி (இளைய சகோதரர்), கிருஷ்ணமாச்சாரியார் (தந்தை, தேசபக்தி மிகுந்தவர், 1890—91-ல் புதுவையில் "இந்தியன் ரிபப்ளிக்" என்ற பத்திரிகை ஆரம்பித்தவர்), எஸ். திருமலாச்சாரியார் (மூத்த சகோதரர், "விஜயா" ஸ்தாபகர்), ஸ்ரீநிவாஸாச்சாரியார். (1897-ல் எடுத்த படம்.)



# கடல் மணலில் ஒரு கூட்டம்

**1908**-ல் பாரதத்தில் இருந்த அரசியல் குமுறலை நேரில் பார்த்து விவரிக்க நம் நாட்டுக்கு ஹென்றி டபிள்யூ. நெவின்ஸன் என்ற பிரபல பிரிட்டிஷ் பத்திரிகையாளர் வந்தார். வடக்கே திலகர், லஜபதிராய், கோகலே முதலியோரைச் சந்தித்தது போலவே தெற்கே பாரதியையும் அவர் சந்தித்தார். பிரிட்டன் திரும்பியதும் தாம் எழுதிய "இந்தியாவில் புதிய உணர்ச்சி" (The New Spirit in India) என்ற பிரசித்தமான நூலில் "கடல் மணலில்" (On the Beach) என்ற ஒரு அத்தியாயம் முழுவதும் சென்னையில், திருவல்லிக்கேணி திலகர் கட்டத்தில், பாரதி முதலானோர் நடத்தியதோர் கூட்டத்தைப் பற்றி நேரிடை வர்ணனையாக இருக்கிறது. கூட்டத்தில் "சென்னையின் தமிழ்க் கவி" பாரதி பாடிய மூன்று பாடல்களின் பொருளையும் கூட நெவின்ஸன் தந்திருக்கிறார். அவரது வர்ணனையின் சாரமாவது:

மாலை நேரம். மாரிக்கால சூரியன் வானில் வர்ண ஜாலம் பரப்பி அஸ்தமிக்கிறான். மரீனாவில் கோச்சு வண்டிகள் ஒன்றிரண்டே போகின்றன; ஆங்கிலோ இந்திய யுவர்களும் யுவதிகளும் சுகமாய்ப்போலோ முதலிய விளையாட்டுகளில் அலுத்து வீடு திரும்புகிறார்கள். போக்குவரத்து ஓய்கிறது. ஆனால், மணல் வெளியில், விளக்கு வைத்த ஒரு மேடையைச் சுற்றி நாலைந்தாயிரம் பேர் கூடியிருக்கிறார்கள். பெரும்பாலும் இளைஞர்கள். பொதுக் கூட்டம். எங்கோ கண் காணாத பஞ்சாப் மாகாணத்தில் சமீபத்தில்தான் பிரபலமான ஸர்தார் அஜித் ஸிங், லாலா லஜபதிராய் என்ற இருவர் விடுதலையானதைக் கொண்டாடும் கூட்டம்.

கூட்டம் ஆரம்பமாயிற்று. ஒரு சிறுவன் உச்சஸ்தாயியில் "வந்தே மாதர" கீதத்திற்கு பாரதி செய்துள்ள தமிழ் மொழி பெயர்ப்பைப் பாடுகிறான். பாட்டு முடிந்ததும் ஆயிரமாயிரமான குரல்களும் "வந்தே மாதரம்" "தாயை வணங்குகிறோம்!" என்று அதிர முழங்குகின்றன. பாட்டு கனிவுமிக்க நயமான கீதம்; பிரஞ்சு கீதம் 'லா மார்ஸலேஸ்' போன்ற கொதிப்பூட்டும் புரட்சிக் கீதமல்ல. ஆனால் மக்களின் வந்தே மாதர கோஷத்தில் புரட்சியின் அதிர்ச்சி முழுதும் ஒலித்தது

இனி பாரதி எழுந்து பாட ஆரம்பிக்கிறார். நெவின்ஸன் வாக்கில் இதைக் கவனிப்போம்:

"இந்த தேசிய கீதம் பாடி முடிந்தபின், சென்னையின் தமிழ்க் கவிஞர் தாம் லஜபதிராய் நாடு கடத்தப்பட்டபோது இயற்றியதோர் ஏக்கப் பாடலைப் பாடினார். அது, நாடு கடத்தப்பட்ட எல்லா தேச பக்தர்களுக்குமே பொதுவான புலம்பலாக இருந்தது. தன் இல்லத்தைப் பற்றிய இன்ப நினைவுகள், தன் இளமையைக் கழித்த தாய்த் திருநாட்டிடம் ஆழ்ந்த பற்று, அந்நியர்களிடையே, விளங்காத மொழி பேசுவோரிடையே வாழ்வதிலுள்ள ஏக்கம் நிறைந்த தனிமை—இவை யாவும் அப்பாடலில் அமைதியுடனும் எளிமையுடனும் சொல்லப்பட்டன. பின்னர் கவிஞர் திடீரெனத் தம் போக்கை மாற்றிக்கொண்டு, ஏளனச் சுவையில் புகுந்தார். இந்தியா மந்திரி ஜான் மார்லிக்கும் இந்தியாவுக்கும் 'ஹோம் ரூல்' என்ற சுயராஜ்யம் பற்றி நடப்பதாக ஒரு சம்பாஷணையைப் பாட்டில் விவரித்தார் அவர்."

முதல் பாட்டு "லஜபதிராய் பிரலாபம்" ('நாடிழந்து மக்களையும் நல்லாளையும் பிரிந்து...'). அடுத்தபடி பாடியவை, "தொண்டு செய்யும் அடிமை" ('ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவது') என்று துவங்கும் பாட்டும், ஆங்கிலேயனுக்குப் பாரதவாஸி பதிலளிப்பதான "சுதந்திரப் பெருமை" ('வீர சுதந்திரம்') என்ற பாட்டுமாகும்.

பாரதி பாடிய பின் வேறு சிலர் பேசினார்கள். சிலர், ஆங்கிலத்தில், வெள்ளையரும் வியக்கும் வாதங்களுடன் 'தீவிரவாதிகள்' கட்சியையும் சுதந்திரத்தின் அவசியத்தையும் எடுத்துரைத்தார்களாம். முடிவில், காவி தரித்த சந்நியாஸி ஒருவர்—'உயரமானவர், கையில் தடிகொண்டவர், பூர்வத்தில் பிராமணர், இப்போது எல்லாரும் ஒன்றெனக் கொண்டவர், பெரிய தாடியுள்ளவர்'—தாம் லஜபதிராயைச் சமீபத்தில் சந்தித்ததாகவும், லஜபதி தியாக சீலர், மக்களுக்காக எதையும் அளிக்க அஞ்சாதவர் என்றும் பேசினார். கூட்டம், வானதிரும் 'வந்தே மாதர' கோஷத்திடையே கலைந்தது. இவ்வளவு சுதந்திர உணர்ச்சி வேகம் இருந்தும் கூட்டத்தில் களேபரமில்லை, கூச்சலில்லை, ஆர்ப்பாட்டமில்லை; அவ்வளவு அமைதியாக நடந்தது; லண்டன் ட்ரபால்கர் சதுக்கத்தில்கூட இவ்வளவு ஒழுங்காகக் கூட்டங்கள் நடப்பதில்லை; அன்று கூட்டம்போடப்படுமென்று பகிரங்கமாய் அறிவித்திருந்தும், அங்கே ஒரு போலீஸ்காரன்கூட இல்லை; ஒரு சிப்பாயும் இல்லை; தேவைப்படவில்லை; "எதிர்பார்க்கத் தக்கபடி, அங்கு இருந்த ஒரே ஐரோப்பியன் நான்தான்" என்று நெவின்ஸன் வியக்கிறார்.

# கிளி பறந்துவிட்டது!

**1908**-ம் ஆண்டில் அரசாங்க அடக்கு முறை மீண்டும் தலை காட்டியது. லோகமான்ய பாலகங்காதர திலகர் கைது செய்யப்பட்டு ஆறு வருஷம் கடுங்காவல் விதிக்கப்பட்டார். அவரை பர்மாவிலுள்ள மாண்டலே சிறைக்குக் கொண்டு சென்றார்கள். (1935-ம் ஆண்டு வரை பர்மா இந்தியாவில் ஒரு மாகாணமாக இருந்தது என்பது நினைவில் வைக்கத் தக்கது.)

தென்னாட்டில், சுதேசிக் கப்பல் கம்பெனி ஆரம்பித்திருந்த தூத்துக்குடி வக்கீல் வ. உ. சிதம்பரம் பிள்ளை திருநெல்வேலி கலெக்டர் வின்ச் என்பவனைப் பார்க்கப் போன சமயம் கைது செய்யப்பட்டார். அவருக்கு 40 வருஷம் தீவாந்தர தண்டனை விதித்தார்கள்!

சிதம்பரம்பிள்ளை போலவே தீவிரக் கட்சியில் உழைத்த சுப்பிரமணிய சிவா என்ற இளம் தலைவருக்கும் பத்தாண்டு சிறைவாசம் கிடைத்தது.

சென்னையில் ஜீ. சுப்பிரமணிய ஐயரைக் கூடக் கைது செய்துவிட்டார்கள். பாரதியாரைக் கைது செய்வதற்கு அதிக நாளாகாது என்பது எதிர்பார்த்த விஷயமாயிற்று.

பாரதியைக் கைது செய்வதற்கு முதல்படியாகவோ அல்லது பாரதியையே கைதுசெய்ய நினைத்துத்தானோ என்னவோ, "'இந்தியா' ஆசிரியரைக்" கைது செய்ய வாரண்டு பிறந்தது.

போலீஸ்காரன் ஒருவன் இந்த வாரண்டுடன் பிராட்வேயில் "இந்தியா" பத்திரிகைக் காரியாலயத்துக்கு வந்தான். (அப்போது "இந்தியா" பிராட்வேயில் 34-ம் எண் வீட்டில் வெளியாயிற்று. இக் கட்டடம் டேனிஷ் மிஷன் சர்ச்சுக்கு வடபுறத்தில் இரண்டாவது வீடு. இன்னும் இருக்கிறது. தற்சமயம் தோல் கிடங்காக உபயோகப்பட்டு வருகிறது.)

காரியாலயம் மாடியில். பாரதி அப்போது தான் படியில் இறங்கி வந்து கொண்டிருந்தார். போலீஸ்காரன் அவரிடம் வாரண்டை நீட்டினான். பாரதி படித்துப் பார்த்தார். வாரண்டு 'இந்தியா' ஆசிரியருக்கென இருந்ததைக் கவனித்தார். "ஆசிரியர் தானே? நான் இல்லை" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

பாரதி பொய் சொல்லவில்லை. "இந்தியா" ஆசிரியர் வேலையை அவர் செய்துவந்த போதிலும், சட்டப்பூர்வமான ஆசிரியரென அவர் பெயர் இல்லை; முரப்பாக்கம் ஸ்ரீனிவாசன் என்பவர் பெயர் இருந்தது. ஸ்ரீநிவாஸன் 'இந்தியா'வின் சொந்தக்காரர் எஸ். என். திருமலாச்சாரியாரின் உற்ற நண்பர், பள்ளித் தோழர். ஸ்ரீனிவாசனைப் போலீஸார் கைது செய்து சென்றார்கள்.

ஸ்ரீனிவாசனுக்கு நேர்ந்த கதி பாரதிக்கும் "இந்தியா" பிரசுரகர்த்தர்களுக்கும் நேர்ந்தால் இனி ஆச்சரியமில்லை என்றாகிவிட்டது. பாரதிக்கும் வாரண்டு வரும் என்று போலீஸ் இலாகாவிலிருந்த நண்பர்கள் பாரதியை ரகசியமாய் எச்சரித்தார்கள். பாரதியும் நண்பர்களும் கூடி ஆலோசனை செய்தனர். வி. கிருஷ்ணசாமி அய்யரும் பாரதி சென்னையிலிருப்பதைவிட வேறிடம் செல்வது மேல் என்று சொன்னார், பாரதி பிரெஞ்சு ஆதிக்கத்திலுள்ள புதுச்சேரிக்குப் போய்விடவேண்டும் என்று தீர்மானமாயிற்று. சிட்டி குப்புசாமி ஐயங்கார் என்ற புதுவை நண்பருக்கு ஓர் அறிமுகக் கடிதம் தந்தார் ஸ்ரீநிவாஸாச்சாரியார்.

பாரதியார் சென்னையிலிருப்பதற்கு அஞ்சவில்லை. ஆனால் நண்பர்கள்தான், சிறை செல்வதைவிட, புதுவை சென்று அங்கிருந்து 'இந்தியா'வை தொடர்ந்து நடத்த முயல்வதே சரி என்று வற்புறுத்தினார்கள். மேலும், அக்காலம் காந்தியுகத்துக்கு முந்தியது. திலகர் முதலிய தலைவர்கள், சிறை சென்று ஆத்மிக வழியில் பிரிட்டிஷ்காரனை எதிர்க்க முடியும் என்று கருதவில்லை. போராட்டத்தை விடாமல் நடத்தவேண்டும் என்பதே கருத்தாயிருந்தார்கள்.

புதுவை பாரதிக்குப் பழக்கமான ஊர் அல்ல. அங்கே யாரையும் அவருக்குத் தெரியாது. இருந்தாலும் அங்கே போக அவரும் சம்மதித்தார்.

மறுநாள் இரவு பாரதி சைதாப்பேட்டை ஸ்டேஷனில் டிக்கட் வாங்கி, ரயில் ஏறிப் புதுவை போய்ச் சேர்ந்தார். போலீஸாருக்கு இது தெரியவேயில்லை.

அதுவரை கடன்காரர்களின் புகலிடமாக விளங்கிய புதுச்சேரியை அரசியல் புகலிடமாக மாற்றிய பெருமை சென்னை வாசிகளையே சாரும். இதை முதலில் நடத்திக்காட்டியவர் பாரதி. அவர் அங்கே போன பிறகுதான் அரவிந்தகோஷ் முதலான பிற அரசியல் தலைவர்கள் புதுச்சேரியில் புகலிடம் தேடினார்கள்.

**41. கடற் பாலம்:** புதுவைக் கடற் கரை இரும்புப் பாலம். (தற்சமயம் நடுவில் உடைந்து, சேதமடைந்து, மூடப்பட்டுள்ளது)

**42. கடற்கரைக் கலங்கரை விளக்கு.**





**43. குவளைக் கண்ணன்** : முன்பின் பழக்கமில்லாத புதுவையில் நெருக்கடியான சமயத்தில் முதன் முதலாக பாரதியின் உதவிக்கு வந்தவரும், பிற்காலத்தில் திருவல்லிக்கேணியில் யானை காலடியில் கிடந்த பாரதியைக் காப்பாற்றியவருமான குவளையூர் கிருஷ்ணமாச்சாரியார். பாரதியார் பாடல்களில் மிகவும் போற்றப்பட்டவர். (1938-ல் எடுத்த படம்.)



**44. அறிவாளி** : புதுவை அறிவாளிகளில் ஒருவரும் பாரதியின் நண்பருமான ஸ்வாமிநாத தீக்ஷிதரும் புதல்வர்களும். படத்தில் வலமிருக்கும் மூத்த புதல்வர் காலஞ் சென்ற வி. எஸ். குஞ்சிதபாதம் தம் பாரதி நினைவுகளை "சுதேச மித்திர"னில் விரிவாக எழுதியுள்ளார்.

# புதுவையில் முதல் நாள்

முன்பின் தெரியாத ஊர்; தம்மை பகிரங்கமாக அறிவித்துக் கொள்ளவும் விரும்பாத நிலைமை; யாரிடமும் உதவி கேட்டுப் பழக்கமில்லாத சுபாவம். புதுவையில் முதல் நாள் பாரதி பட்டபாடு சொல்லத் தரமன்று.

ரயிலில் இரவெல்லாம் கண் விழித்து, விடியுமுன் புதுவையடைந்து, விடியும் வரையில் ஸ்டேஷனில் இருந்து, காலையில் பெருமாள் கோயில் தெருவில் சிட்டி குப்புசாமி அய்யங்கார் என்பவர் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். சிட்டி குப்புசாமி அய்யங்காருக்கு ஒரு கடிதம் பெற்றுச் சென்றிருந்தார் பாரதி.

அய்யங்கார் பாரதியை வரவேற்று உபசரித்து காலைச் சிற்றுண்டியளித்தார். அதன் பின், பகல் போஜனத்துக்காகக் காத்திராமல், பாரதி வீட்டுத் திண்ணையிலேயே அயர்ந்து தூங்கிவிட்டார்!

அய்யங்கார் வீட்டில் இரண்டு நாள் கழிந்தது. இதற்குள் சென்னையில் பாரதி இல்லை என்ற விவரத்தை அறிந்த சென்னைப் போலீஸார், அவர் எங்கேதான் போயிருப்பாரென்று தேடலானார்கள். இரண்டு நாட்களில் பாரதி புதுவையில் இருக்கும் சமாசாரம் தெரிந்து கொண்டார்கள். அவ்வளவுதான். பாரதியின் ஆயுட்காலம் முடிய அவரைத் தொடர்வதாயிருந்த போலீஸ் கண்காணிப்புத் தொல்லை அவரைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டது.

சிட்டி குப்புசாமி அய்யங்கார் செல்வாக்கு மிகுந்தவரல்ல. சாமானியமானவரே. சிறு வியாபாரி. அவர் பாரதியை விரட்டி விடும் படிச் செய்ய நயத்தாலும் பயத்தாலும் முயற்சி செய்தார்கள் பிரிட்டிஷ் போலீஸ் ஏவலாட்கள். புதுச்சேரி பிரெஞ்சுப் பிரதேசமானதால் நேரடியாக ஏதும் செய்ய முடியவில்லை. ஆனால், முதல் மகா யுத்தத்துக்கு முந்திய ஆண்டுகளில், புதுச்சேரி பல விதங்களில் பிரிட்டிஷ் தயவை நாடி வாழ வேண்டியிருந்தது. பிரிட்டிஷ் ஏவலாட்களுக்கு இது மிக சௌகரியமாயிருந்தது. பாரதி ஒரு பெரிய அரசியல் போக்கிரியென்றும், அவரை வீட்டில் வைத்துக் கொள்வது பேராபத்து என்றும் ஐயங்காரின் உற்றார் உறவினர் மூலம் அவருக்கு உபதேசித்தார்கள்.

குப்புசாமி அய்யங்கார் மானி. வீட்டில் வந்துள்ள விருந்தினரைப் போ என்று சொல்லவும் முடியவில்லை; பாரதியை வீட்டில் இருக்கச் செய்வது வம்பை விலைக்கு வாங்குவதாகுமே என்றும் தவித்தார்.

நிலைமையை உணர்ந்த பாரதி அதற்கு மேல் தவித்தார். தன்னால் இந்த அப்பாவி மனிதருக்குச் சங்கடம் ஏன் என்று துடித்தார்.

இந்த நெருக்கடியில், தெய்வமே அனுப்பிய சமய சஞ்சீவியாய் "எங்கிருந்தோ வந்து சேர்ந்தான்" குவளைக் கண்ணன்.

குவளைக் கண்ணன் என்பது குவளையூர் கிருஷ்ணமாச்சாரி என்ற இளைஞரின் சுருக்கமான பெயர். புதுவை வாசி. குப்புசாமி அய்யங்காரின் உறவினர். கல்வே கல்லூரியில் பத்துவருஷம் படித்தவர்.

புதுவையில், தாம் முதன் முதலாக பாரதியைச் சந்தித்த கதையைக் குவளைக் கண்ணன் வர்ணித்துள்ளார்.

கல்வே கல்லூரித் தலைமையாசிரியர் வி. எஸ். ஸ்வாமிநாத தீக்ஷிதர் வீட்டுக்குக் குவளைக் கண்ணன் அடிக்கடி போய் வருவார். ஆங்கில மோகம் இருந்த அக்காலத்திலும் தீக்ஷிதர் "இந்தியா" பத்திரிகையைத் தவறாமல் படித்து வருவதையும், தமிழ்ப் பத்திரிகைகளில் சிறந்தது அதுவே என்று சொல்வதையும் கேட்டு, குவளை தாமும் அப்பத்திரிகையை இரவல் வாங்கிப் படிக்கலானார்.

பத்திரிகையை தாம் சந்தா கட்டித் தருவிக்கவில்லை, சுந்தரேசய்யர் என்பவர் தருவிக்கிறார் என்று ஸ்வாமிநாத தீக்ஷிதர் கொஞ்ச நாள் கழித்துத் தெரிவித்தார். குவளை சுந்தரேசய்யரையும் சிநேகம் பிடிக்க வேண்டியதாயிற்று. இனி குவளையின் மொழிகளிலேயே பாரதி யாரை அவர் யாரென்று தெரியாமல் சந்தித்த விவகாரத்தைக் கேட்போம்:

"புதுச்சேரி பெருமாள் வீதியில்தான் என் மாமனார் வீடு. அதற்கு மேலண்டைப் பக்கத்து வீடு என் மைத்துனி வீடு. அதன் குறட்டு ஓரமாக ஒரு நாள் மாலையில் போகையில், மேற்படி வீட்டுத் திண்ணையில் யாரோ ஒருவர் உட்கார்ந்திருக்கக் கண்டு யார் என்று கேட்டேன். தாம்தான் பாரதி என்று தெரிவிக்காமலே, அவர், தமக்குச் சென்னை என்றும் புதுவைக்குப் புதிதாய் வந்திருப்பதாயும் சொன்னார்; எனக்கும் அவருக்கும் ஒரு மணி நேரத்துக்குக் குறையாமல் பேச்சு நடந்தது.

"சம்பாஷணையின் இடையில் 'இந்த ஊரில் "இந்தியா" பத்திரிகை வரவழைப்பவர்கள் யாராவது தெரியுமா?' என்று கேட்டார். எனக்குத் தெரிந்த ஒருவர் வரவழைப்பதாகச் சொன்னேன். அவரைத் தமக்குக் காட்ட முடியுமா?" என்று கேட்டார்.

"கூட வந்தால் காட்ட முடியும்" என்றேன். அவர் உடனே ஆவலுடன் என்னுடன் வந்தார். சுந்தரேசய்யர் வீட்டுக்குப் போனோம்."

# இரு துணைவர்கள்

சுந்தரேசய்யர் வீட்டில் இல்லை. மணிலாக் கொட்டை வியாபாரி எஸ். குப்புசாமி அய்யரின் கிடங்கில் கணக்கர் அவர். பாரதியும் குவளைக் கண்ணனும் அங்கே போனார்கள். கிடங்குக்கு அருகே பாரதியை வெளியே நிறுத்தி வைத்துவிட்டு, சுந்தரேசய்யரிடம் போய், அவரைக் காண சென்னையிலிருந்து யாரோ வந்திருப்பதாய்ச் சொன்னார் குவளை. சுந்தரேசய்யர் வெளியே வந்தார். பிறகு:

"இருவரும் தனியாக தூரத்தில் போய் ஏதோ ரகசியமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். அன்று இரவு நான் அவர்களிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு வீட்டுக்குப் போனேன். இரண்டு மூன்று தினங்கள் கழித்து சுந்தரேசய்யரை நான் பார்த்தபோது, 'எங்கே ஐயா நான் தங்களிடம் அழைத்து வந்த கனவான்?' என்று கேட்டதற்கு, தன் ஆதரவில் ஒரு வீட்டில் அவர் இருப்பதாக சுந்தரேசய்யர் சொன்னார். எனக்கும் அவருக்கும் சிநேகம் ஆரம்பித்து ஒரு வருஷத்துக்குப் பிறகுதான் அவர் ஸ்ரீ. சுப்பிரமணிய பாரதி என்றறிந்தேன்."

புதுவை வாழ்வில், முக்கியமாக ஆரம்ப காலத்தில், குவளைக் கண்ணனும் சுந்தரேசய்யரும் பாரதிக்குப் பெருந்துணையாக இருந்தார்கள். 1939-ம் ஆண்டு ஸெப்டம்பர் முதல் வாரத்தில் குவளை சென்னையில் காலமானார்.

குவளைக் கண்ணன் படிப்பாளியல்ல; ஆனால் பாரதியிடம் ஊன்றிப்போன பக்தி கொண்டிருந்தார் அவருக்கு வியக்கத்தக்க ஞாபகசக்தி 1939-லும் இருந்தது. தாம் பாடிய பாடல்களைப் பிரதியெடுக்கச் செய்து, மனப் பாடம் செய்யும்படியும் குவளைக்கு பாரதி கட்டளையிட்டார். ('கண்ணன் என் சீடன்' என்ற பாட்டில் இந்த உண்மைச் சம்பவத்தை பாரதி பாடியிருக்கிறார்.) அக் காலத்தில் தாம் மனனம் செய்த பாடல்களை, 1939-லும்—முப்பதாண்டுகளுக்குப் பிறகும்—சொற் பிழையின்றிப் பாடுவார் குவளை!

குவளை மகா தீரர். இவரது பெருமையை "பாரதி அறுபத்தாறு" என்ற தொகுதியில் "குவளைக் கண்ணன் புகழ்" என்ற பாடல்களில் பாரதி பாடிப் போற்றியிருக்கிறார். "கனத்த புகழ்க் குவளையூர்க் கண்ணனென்பான்", "பார்ப்பாரக் குலத்தினிலே பிறந்தான் கண்ணன்; பறையரையும் மறவரையும் நிகராக் கொண்டான், தீர்ப்பான சுருதி வழிச் சேர்ந்தான் கண்ணன்", "மிகத்தானும் உயர்ந்த துணிவுடைய நெஞ்சின் வீரர்பிரான் குவளையூர்க் கண்ணனென்பான்" என்றெல்லாம் பாரதியால் சிலாகிக்கப் பெற்ற இப் பெரியாரே, பின்னர், 1921-ல் பாரதி திருவல்லிக்கேணி கோயில் யானையின் காலடியில் கிடந்த சமயம் தாவி எடுத்துக் காத்தார்.

சுந்தரேசய்யரும் எளிய வருமானமுள்ளவரே. இருபது வருஷமாய்ச் செய்து வந்த கணக்கு வேலையையும் பாரதிக்கு உதவி செய்கிறார் என்ற காரணத்தால் பின்னர் இழந்தார். போலீஸ் ஏவலாட்கள் அவரது எஜமானரைப் பயமடையச்செய்து, அவரை வேலையை விட்டு நீக்கி விடும்படி செய்தார்கள். அப்படியும், தம் ஏழ்மையிலும் பாரதிக்கு விடாமல் உதவி செய்த பெருமை இவருடையது.

குவளையைவிட சுந்தரேசய்யர் படிப்பு வாசனை அதிகமுள்ளவர். பாரதியின் அரசியலையும் தமிழார்வத்தையும் குவளையைவிட நன்றாக ரசிக்கத்தக்கவர் இவர். இவ்விருவரது சகவாசத்தால் பாரதிக்குப் புதுவை வாழ்வு புது வாழ்வாகப் பரிமளித்தது.

புதுவையில் பாரதி "தமிழ் வளர்ப்புச் சங்கம்" என்று ஒரு சங்கம் பிற்காலத்தில் ஆரம்பித்தார். அதற்கு உதவியாக நின்றவர்களில் சுந்தரேசய்யர் ஒருவர். சங்கத்தில் சேருவோர் தடவை ஒன்றுக்கு ஒரு ரூபாயாக மூன்று ரூபாய் சந்தாவை இரண்டு மாதத்தில் செலுத்தவேண்டும். போதிய மூலதனம் சேர்ந்ததும், விஞ்ஞான நூல்கள், பிறமொழிக் காவியங்கள், வசன நூல்கள், தேசாபிமானமும் நல்லொழுக்கமும் ஊட்டும் நூல்கள் முதலியவற்றை எளிய தமிழில் வெளியிடுவதென்றும், மூன்று ரூபாய் கட்டியிருப்பவர்களுக்கு ஐந்து ரூபாய் மதிப்புள்ள நூல்களை அனுப்புவதென்றும் திட்டம்.

இதற்காக விளம்பரத் தாள்கள் அச்சிட விரும்பினர். மகா யுத்த காலம். ஆகையால் எதானாலும் அரசாங்கத்திடம் காட்டி அனுமதி பெற்றே அச்சிடலாம் என்றிருந்தது. சுந்தரேசய்யர் சங்கத்தின் சார்பில் விண்ணப்பம் அனுப்பினார். அரசாங்கம், இந்த "பயங்கரமான ஏற்பாட்டுக்கு" அனுமதி மறுத்து விட்டது.

சுந்தரேசய்யரும் பாரதியும் ஒரு சமயம் ஏதோ மனத்தாங்கல் கொண்டு நான்கு மாதம் சந்திக்காமலிருந்தனர். பாரதி சீக்கிரமே அங்கலாய்க்கலானார். பிறகு இருவரும் சந்தித்தபோது, "எங்ஙனம் சென்றிருந்தீர்" என்ற பாட்டைப் பாடியதாகவும், இது தவறாக ஸரஸ்வதி தோத்திரமென்ற தலைப்புடன் வெளிவந்திருக்கிறது என்றும் குவளைக் கண்ணன் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

சுந்தரேசய்யர் 1955-ல் காலமானார்.

**45. ஏழ்மையிலும் உதவியவர்:** குவளைக் கண்ணன் மூலம் பாரதியை அறிந்து, புதுவையில் ஆரம்ப நாட்கள் முதலே கவிஞருக்குப் பேருதவி செய்த சுந்தரேசய்யர். தொழிலில் மணிலாக் கொட்டை வர்த்தகக் கடையில் குமாஸ்தா. தமக்கு அதிக வருவாய் இல்லாதபோதும், தம் மனைவியின் நகைகளை அடகுவைத்துக்கூடப் பணம் உதவியவர்.

இந்தியா.

சனிக்கிழமைதோறும் வெளியாகும்.



**46. புதுவை "இந்தியா":** புதுவை போன "இந்தியா" முதல் வருஷம் சிறிய அளவில் வெளி வந்தது. இந்தியாவின் லட்சியம் ஸ்வராஜ்யம் என்று உபதேசித்த தாதாபாய் நவுரோஜிக்கு 84 வயது பூர்த்தியாவதை முன்னிட்டு 1909 செப்டம்பர் 4-ந் தேதி, புதுவை "இந்தியா"வின் 47-வது இதழில் தாதாபாய் படம் வெளியாயிற்று.

இந்தியா
சௌமிய ௵
ஆவணி ௴ 20 ௳

## பாரத மக்கள்.

நமது பாரத தேச சரித்திரங்களின்படி முப்பத்து முக்கோடி தெய்வங்கள் உண்டு. இவற்றுள் நல்ல தெய்வங்களுமிருக்கின்றன கெட்ட தெய்வங்களும் இருக்கின்றன. நல்லதெய்வங்களைத் தேவர்கள் என்கிறார்கள். கெட்ட தெய்வங்களை அசுரர்கள் என்கிறார்கள். இதில் நற்குண நற்செய்கைகள் இயற்கையில் வாய்க்கப் பெற்றவர்கள் அமரர்கள் எனவும் தேவர்கள் இயற்கையில் தீக்குண தீச்செயல்கள் வாய்க்கப்பெற்றவர்கள் அசுரர்கள் எனவும் ராக்ஷசர்கள். ஆகையால் தான் அமரர்களுக்கும் அசுரர்களுக்கும் ஸதா சண்டை. இச்சண்டைக்குக் காரணம் அசுரர்கள் துராசார துர்மார்க்கங்கள் அமரர்களுக்குச் சகிப்பதில்லை. அமரர்களின் ஸதாசார அநுஷ்டானவழிகள் அசுரர்களுக்குச் சகிப்பதில்லை. இந்த அமரர்கள் முதலில் அசுரர்களால் ஸாதாரணமாய் ஜெயிக்கப்பட்ட போதிலும் முடிவில் அமரர்களே வெற்றி பெற்று தேஜஸ்விகளாய்க் கடவுளருளால் விளங்குகின்றனர்.

இதேமாதிரி நமது தேசத்தில் முப்பத்து முக்கோடி ஜனங்களிருக்கிறார்கள். இவர்கள் பல ஜாதியார். பல மதத்தினர்; பல பாஷை பேசுபவர்கள். இவர்களில் தேவர்களைப் போன்ற தேசபக்தர்களுமிருக்கிறார்கள்; அசுரர்களைப் போன்ற தேசத்துரோகிகளுமிருக்கின்றார்கள். நமது நாட்டின் நன்மைகளுக்கு சேர்விரோதமாயும் அன்னியனுக்கு உடந்தையாயும் இருப்பவர்களே அசுரர்களான தேசத்துரோகிகள். இந்த தேசபக்தர்கள் ஸாத்விகமாய் நாடெங்கும் வாழும்படியான நல்வழிகளைச் செய்யுமல்லவை தேசத்துரோகிகள் பலவிதமாயும் தடைசெய்து அழித்துவிட முயல்கின்றனர். தேவர்களோ தாங்கள் அந்த அசுரர்களின் கெட்ட முயற்சிகளை ஒழித்து உலகத்தினரைக் காக்கும் நல்வழியைக் கைக்கொண்டு ஓர் தலைவன் சொற்படி நடக்கிறார்கள்.

இம்மாதிரியான தலைவர்களை யுடைய தேவர்கள் பலபாடு பட்டுத் தவஞ்செய்து அவனுடைய அநுக்கிரகம் பெறுகிறார்கள். தேசநன்மைக்காகத் தொண்டு பூண்டு, மனஞ்சலியாமல், தைரியம் தளராமல், யுக்தம் கைவிடாமல், ஈசுவரனிடம் மனத்தை வைத்து தேசக்ஷேமார்த்தமான வழிகளைப் பற்றி பல கஷ்டங்களின் மத்தியில் தாங்கள் கொண்ட விரதத்தை நிஷ்காமியமாய் அனுஷ்டித்துத் தங்கள் உடல் பொருள் ஆவி மூன்றையும் தேசமாதாவின் சேவைக்காக அர்ப்பிதம் செய்து பலாபேக்ஷையின்றி தன்னை வெறுத்து உழைத்து வரும் பாரத தேசபக்தர்கள்தான் தேவர்கள்: இவர்களுக்கு ஸ்வராஜ்ய பதவியடையும் வழியைக் காட்டக் கடவுளால் தந்தருளப்பட்ட மஹான்கள் தலைவர்களான தேவர்களுக்கும் தெய்வங்கள். இத்தலைவர்கள் ஸாத்விகருமாவர்கள்; ஸத்வமும் தாமஸமும் [illegible] ஒரேவிதமான குணம் போல தென்பட்டபோதிலும் ஸத்வத்தில் உலகத்தைப் புரட்டும்படியான திவ்ய சக்தி குவிக்கப்பட்டு ஓரிடத்தில் நிலைநிறுத்தப் பட்டிருக்கிறது; தாமஸத்திலோ அவ்வித சக்தி நிலை இல்லாததால் இஷ்டமான வழிகளில் மனம் போனபடியெல்லாம் முடிவடைகையில் நாசத்தை விளைவிக்கிறது. ஆனபடியால் ஸாத்விகர்கள் இறைவனுக்குக் கட்டுப்பட்ட போதிலும் [illegible]. அசுரர்கள் தாமஸர்களாகவே இருந்த போதிலும் [illegible] தேவர்களின் தெய்வங்களுக்கு [illegible]. நம்நாட்டினில் அசுரர்களை ஒத்த தேசத் துரோகிகள் தேசபக்தர்களாய் விடலாம். ஆனால் அது வெகு தெய்வானுக்கிரகமான காலத்தின் கோலத்தால் மாத்திரம் ஆகவேண்டிய காரியம். ஏனென்றால் தேசத்துரோகி தான் செய்வது தேசத்துரோகம் என்று தெரிந்தே தனது அற்பமான இச்சைக்காக அதைச் செய்கிறான். [illegible] கொண்டு பேசுவதும் [illegible] அவன் [illegible] தேசபக்தர்களுக்குச் சிந்தை வேண்டியதில்லை. என்ன கஷ்டம் வந்தபோதிலும் தேசபக்தர்கள் தங்கள் மேற்கொண்ட ஸ்வராஜ்ய விரதத்தைப் பூர்த்திசெய்ய வேண்டியது அவர்கள் கடமை என்ற இந்த உண்மையை ரூபகப்படுத்தும் [illegible] ஓர் [illegible] வேண்டும்.

"உடற்கு வருமிடர் நெஞ்சோடு
பரத்தறந்தோ
அடிக்கு மொருக்கொடியாக—வக்க
முளர்
பண்ணிற் புகலும் பனிமொழியா
யங்கயே
பண்ணிற்புலியைப் பதிமானே."

(இ-ள்) பூமியிலிருந்தும் [illegible] சந்திர விமானத்திலிருந்தும் [illegible] பயப்படாது: கோடிக் கணக்கான ஆபத்து வரினும், கோர கடற்கிடையில் தமது மனத்தை வைத்த மஹான்கள் நடுங்கிவிடாமல் தைரியமாய் கொண்ட விரதத்தைப் பூர்த்தி செய்வார்கள்.

அர்ஜுனனுடைய சோகத்தைக் கண்டு "எங்கிருந்தடா உனக்கு இந்த கெட்ட அருக்கான சோகம்? இது ஆரிய தர்மமல்லவேடா! கீர்த்தி கெட்டது? ஸ்வர்க்கத்துக்கு விரோதமானது அபகீர்த்திக்கு இடமானது இந்த ஈனமான மனதுர்ப்பலத்தை விட்டு லகுமியாய் எழுந்திருந்து உன் கடமையைச் செய்" என்று திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீ கிருஷ்ண பிரானுடைய திவ்ய சக்தியை முன்னிலையாக உடைய பாரதத் தேவர்களான தேசபக்தர்கள் தங்கள் முயற்சியின் பயனை பரிபூர்ணமாய்க் கடவுளிருவையால் அடையும் வரையில் உடலை கஷ்டிப்பதே தேசத்தை முன்னுக்குக் கொண்டுவரும் காரியங்களில் பல கஷ்டங்கள் வந்த போதிலும் பின்வாங்காமல், பொறுமையுடன் தேசமாதாவின் சேவை எனும் கைங்கரியத்தைச் செய்து வருவார்கள். ஹே! பாரதபுத்திரர்களே! இவ்விருவருள் நீங்கள் யாரை அனுசரிக்கிறீர்கள்? நமது பாரதமாதாவின் தேசபக்த சிரோன்மணிகளேயாவார்.

### ஸ்ரீமான் மதனலால் திங்க்ரா.

சென்றவாரத்தில் நமது நிருபர் ஒருவர் ஸ்ரீமான் மதனலால் திங்க்ரா விஷயமாய் எழுதியிருந்தார். அதை நாம் முற்றிலும் அங்கீகரிக்கவில்லை. அதில் ஸ்ரீமான் திங்க்ராவின் உயிர் ஏதோ இரண்டொரு [illegible] பவுன் என்று [illegible] கூறியிருக்கிறார். மேலும் [illegible] தனைப் பற்றி [illegible] எழுதுகிறார்.

லண்டனில் [illegible] அந்த ஸந்தடமைக்குக் கிட்டால் திங்க்ரா உயிர்கொடுத்து விட்டார்; நம் பாரத காலநிலைக்கு அதனுள் என்ன அனுகூல முண்டாய்விட்டது? நாமேன் அதைப்பாராட்டுவதாயுரைக்க வேண்டும்?

அற்பத்திக்கொலைகாரர் [illegible] பழிவாங்கும் இழிவான குணம் ஆரியர்களுடையதல்ல. நமது நாட்டில் ஒருவரும் கேட்டிருக்காத வெடிகுண்டு முதலிய பயங்கரமான செயல்கள் அனாரியர்களுடையவை. இவைகளெல்லாம் மிலேச்ச [illegible] கட்ட திட்டங்களின் பயன் தானோ? [illegible] அவர் தெரிவித்தது கொண்டாடுகிறவர்கள் [illegible] நிலையைப் பற்றி [illegible] எல்லாம் ஆகவில்லையாகவே அவசியத்தான் [illegible].

### சந்தாதாரர்களுக் கறிவிப்பு.

ஒவ்வொரு சந்தாதாரரும் கடிதம் எழுதும் போது தங்கள் சந்தா நெம்பரும் சேர்த்து எழுதாவிட்டால் சரியான பதில் கிடைக்கமாட்டாது.

பத்திராதிபர்.



47. "இந்தியா" தலையங்கங்கள்: 1908 செப்டம்பர் 4-ந் தேதி இதழின் 2-வது தலையங்கப் பக்கம். "பாரத மக்கள்" என்ற அருமையான தலையங்கமும், வெடிகுண்டு வீச்சு பற்றி பாரதியின் கருத்தைத் தெரிவிக்கும் உப தலையங்கமும் வெளியாகியிருக்கின்றன.

# புதுவை "இந்தியா"

புதுவையில் பாரதி கால்வைத்த சின்னுட்களில் சம்பவங்கள் விரைவாக நடக்கத் தொடங்கின. சென்னையிலிருந்து மண்டயம் ஸ்ரீனிவாஸாச்சாரியார், எஸ். என். திருமலாச்சாரியார் முதலியோரும் புதுவை வந்து சேர்ந் தார்கள்.

பாரதி புதுவை சேர்ந்த ஒரு மாதத்துக்குள்ளாகவே "இந்தியா" பத்திரிகையின் அச்சகம் கூட மிக ரகசியமாய்ப் புதுவைக்குக் கொண்டு சேர்க்கப்பட்டது! இது அக்காலத்தில் மகத்தான சாதனையாகும். "இந்தியா" சென்னையில் 1908 செப்டம்பர் மாதம் கடைசி வாரம் வரை வெளிவந்தது. புதுச்சேரியிலிருந்து அக்டோபர் 20-ந் தேதி முதல் மீண்டும் முழங்கத் தொடங்கியது.

புதுவையில் பத்திரிகை நடத்த ஒரு பிரெஞ்சுப் பிரஜை பொறுப்பாளியா யிருக்கவேண்டும் என்று சட்டமிருந்தது. அதன்படி, எஸ். லக்ஷ்மீ நாராயணய்யர் என்பவரைப் பிடித்து, பத்திரிகையைத் தாம் வெளியிடுவதாய் அனுமதி பெறச் செய்தார்கள். புதுவை எத்ரான்ழேர் தெருவில் 58-ம் எண்ணில் ஸரஸ்வதி அச்சகம் தோன்றியது; இரண்டே வாரங்களில் "இந்தியா" மீண்டும் "நெருப்பு மழை" பொழியத் தொடங்கியது.

புதுவை வந்ததும் "இந்தியா", முதல் ஆண்டு பழையபடி சிறிய அளவில் வெளிவந்தது. இரண்டாம் ஆண்டு (1908 அக்டோபர்) முதல் பத்திரிகை நின்றுபோன தேதி (1910 மார்ச் 19-ந் தேதி) வரை மீண்டும் பெரிய அளவில் வந்தது.

சென்னையில் இருந்ததுபோல முதல் பக்கத்திலும் உள்ளேயும் அரசியல் கார்ட்டூன்கள் பிரசுரமாயின. தவிர, பலதேச பக்தர்களது படங்களும் "இந்தியா"வில் வெளியாயின.

புதுவை "இந்தியா"வில் பாரதியின் "ஞான ரதம்" தொடர்ந்து வெளியாயிற்று. சில பாடல்களும் வெளியாயின. புதுவை "இந்தியா"வுக்கு முதலாண்டு முடிந்து இரண்டாவதாண்டு ஆரம்பமானபோது, 16-10-1909 இதழில் "புது வருஷம்" என்ற தலைப்பில் "வாழிய செந்தமிழ்" பாடல் வெளிவந்திருக்கிறது.

"இந்தியா"வில் தேசபக்தர்களது நடவடிக்கைகள் நிறைய வெளிவந்தன. பாரதிக்கு "வெடிக்காய் வியாபாரத்தில்" நம்பிக்கை யில்லையெனினும், அக்காலத்திய வெடிகுண்டு வீச்சுகளும் அதிகாரவர்க்கக் கொலைகளும் "இந்தியாவில் குழப்பம்" என்ற தலைப்பில் வாராவாரம் செய்தியாக வந்தன. வெளிநாட்டு விவகாரங்களும் ராய்ட்டர் செய்திகள் மூலம் இடம் பெற்றன. துருக்கி சுதந்திரம் பெற்றது, பாரஸீகம் விடுதலை பெற்றது முதலிய தகவல்கள் தேசபக்தி ததும்ப விவரிக்கப்பட்டுள்ளன. லண்டனில் ஸாவர்க்கர்-டாக்டர் ராஜன்-வ. வே. சு. ஐயர் கோஷ்டியைச் சேர்ந்த மதன்லால் திங்கரா என்ற வாலிபன் ஒரு வெள்ளை அதிகாரியைச் சுட்டது, தென் ஆப்பிரிக்காவில் மோ. க. காந்தியின் போராட்டங்கள் முதலியவைபற்றி செய்திகள் வந்துள்ளன.

சுயராஜ்ய தினம் கொண்டாடியதற்காக ராஜத் துவேஷக் குற்றம் சாட்டப்பெற்ற சுப்பிரமணிய சிவா, சிதம்பரம் பிள்ளை வழக்கு, ஸ்வதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியைத் தொடர்ந்து நடத்த முயற்சிகள், தன் கணவரின் தண்டனைக்கு மேல் பிரிவி கௌன்ஸில் அப்பீல் செய்யப் பண உதவி செய்யும்படி வ. உ. சி. யின் மனைவி விடுத்த வேண்டுகோள், கோவைச் சிறையில் பிள்ளையை அவரது தந்தையும் மற்ருெரு "ஆப்த நண்பரும்" (பரலி சு. நெல்லையப்பர்) போய்ப் பார்த்து வந்த விவரம், எதிராஜ் சுரேந்திரநாத் ஆரியா சிறையில் கொடுமை தாங்காமல் தற்கொலை செய்துகொள்ள முயன்றது, அரவிந்தகோஷின் அற்புதப் பிரசங்கங்களின் மொழிபெயர்ப்புகள், சுவாமி விவேகானந்தரின் உபதேசங்கள்—இவை "இந்தியா"வில் வெளியான சில விஷயங்களாகும்.

தலையங்கங்கள் ஒவ்வொன்றும் அழகிய கட்டுரை போல தேசபக்தியுபதேசம் செய்வதாயிருந்தது. "சுதந்திரம்", "ஸமத்வம்", "ஸகோதரத்வம்" என்ற தலைப்பில் பல தலையங்கங்களும், "பாரத மக்கள்", "சிற்பமும் கவிதையும்" என்ற தலையங்கங்களும் வெளியாயின.

பத்திரிகை கடைசி நாலைந்து பக்கங்கள் முழுதும் விளம்பரங்களாயிருந்தன. காசிப் பட்டுப் பீதாம்பரம், பலவித புத்தகங்கள், நவீன சாமான்கள், தாதுபுஷ்டி மருந்துகள் இவைகளின் தயாரிப்பாளர்களுக்குக் கூட "இந்தியா"வின் மதிப்பு நன்கு தெரிந்திருந்தது! "இந்தியா" புதுவையில்கூட விளம்பரத்துக்கு சிரமப்படவில்லை. இது இன்றும் வியப்பளிக்கும் விஷயமாகும்.

தமிழ்ப் பத்திரிகை உலகில் இன்றும் சாதிக்கப் பெருத மற்ருெரு புதுமையையும் "இந்தியா" செய்து காட்டிற்று. வர்த்தமானச் செய்திகளை, சிற்றூர்ச் செய்திகளை எளிய தமிழில் சுருக்கமாய் எழுதி அனுப்புவோருக்குச் சன்மானம் தந்தது "இந்தியா."

# காந்திக்கு அஞ்சலி — 1908-ல்!

இந்தியத் தலைவர்களில் மகாத்மா காந்தியின் பெருமையை முதன் முதலில் உணர்ந்த வெகு சிலருள் பாரதியாரும் ஒருவர். பாரிஸ்டர் மோகனதாஸ் கரம் சந்திர காந்தி *1908*-ல் தென் ஆப்பிரிக்காவில் இந்தியர் நலனுக்காகப் போராட்டம் நடத்தியபோதே காந்தியின் மேன்மையை உணர்ந்து அவரை "இந்தியா"வில் வெகுவாகப் பாராட்டியிருக்கிறார் நம் கவிஞர். தென் ஆப்பிரிக்க இந்தியர் போராட்டத்துக்காக நிதி வசூல் செய்து, தாமே ஐந்து ரூபாய் கொடுத்து, பணத்தைத் தென் ஆப்பிரிக்காவுக்கு அனுப்பினார் பாரதி.

காந்தியின் ஸத்தியாக்கிரக இயக்கம் தர்மத்தை அடிப்படையாகக் கொண்டது, ஆகையால் இந்தியப் பண்பாடு நிறைந்தது, அவரே வருங்காலத் தலைவர் என்றுகூட பாரதி தீர்க்க தரிசனமாய்க் கண்டிருக்கிறார்.

*1908*-ல் பாரிஸ்டர் காந்தி தென்னாப்பிரிக்க இந்தியர் சார்பில் லண்டனுக்கு தூது சென்று திரும்பிய சமயம் தென் ஆப்பிரிக்க அரசாங்கம் அவரைக் கைது செய்தது. இதைப்பற்றி பாரதி ஒரு கார்ட்டூன் மூலமாகவும், சித்திர விளக்கம் மூலமாகவும் தம் கருத்தைத் தெரிவித்துள்ளார்.

எதிர்ப் பக்கத்திலுள்ள படம், "இந்தியா" *18-12-1908* இதழில் வெளி வந்தது. படத்தின் கீழ் குறிப்பு கூறியதாவது : "ஸ்ரீ காந்தி யென்ற பசுவானது தனது கன்றுக்குட்டியாகிய இதர இந்தியர்களின் நன்மையின் பொருட்டு இங்கிலாந்துக்குப் போய்ப் பேசிவிட்டு, சிறையிலடைபடுவதற்காக மறுபடியும் திரான்ஸ்வாலுக்கு வந்திருக்கிறது. தென் ஆப்பிரிக்கா உத்தியோகஸ்தர்களாகிய புலிகள் அவருடைய மேன்மையை யறியாமல் சிறையிலடைத்தார்கள்."

உள்ளே சித்திர விளக்கம் வருமாறு கூறியது:

"முற்காலத்தில் நடந்ததாக ஹிந்துக்களின் புராணங்களில் சொல்லியிருக்கும் விஷயம் அநேகருக்குத் தெரிந்திருக்கலாம். ஒரு காட்டில் புலியின் வாயிலகப்பட்ட பசுவானது தன்னுடைய கன்றுக்குட்டிக்குப் பால் கொடுக்காமல் வந்துவிட்டபடியால் புலியைப் பார்த்து, 'ஹே பிரபு! இன்று என்னுடைய கடமையைச் செலுத்தாமல் வந்துவிட்டேன். என்னுடைய கன்றுக்குப் பால் கொடுக்கவில்லை. ஆதலால் நான் இப்பொழுதே போய்ப் பால்கொடுத்துவிட்டு வந்து உமக்கு இரையாய் விடுகிறேன். உத்தரவளிக்க வேணும்' என்றது.

"புலி நெடுநேரம் யோசித்து அதனுடைய ஸத்தியத்தைப் பரீட்சிக்கும் பொருட்டு, போய்க் காரியமான உடனே வந்துவிடு என்று சொல்லி அனுப்பியது.

"பின்பு பசுவானது கன்றுக்குப் பால் கொடுத்துவிட்டு, அதைத் தன்னுடைய சிநேகிதையான மற்றொரு பசுவினிடத்தில் ஒப்புவித்துவிட்டு, புலியினிடத்தில் வந்து, 'என்னுடைய தர்மத்தைச் செய்துவிட்டு வரும்படி உத்தரவளித்ததற்கு உமக்கு வந்தனமளிக்கிறேன். என்னைப் புசியும்' என்றது.

"இதைக் கண்ட புலி ஆச்சரியப்பட்டு, 'அம்மா ஸத்திய தேவதையே, உன்னைப் புசித்துவிட்டு நான் எந்த நீச கதிக்குப் போவேன்! நான் இதுவரைக்கும் செய்தது போதும்' என்று சொல்லிப் பட்டினியிருந்து பிராணனை விட்டது.

"இப் பசுவைப்போல் நடந்து கொண்ட நமது ஸ்ரீ காந்தி பிரபுவை தென் ஆப்பிரிக்கா புலிகள் என்ன செய்கின்றன பார்த்தீர்களா? ஒன்றும் தெரியாத புலிகூட இந்துஸ்தானத்தில் தயையினுடைய பிரவாகத்தைத் தடுக்க முடியவில்லை. ஆனால் தென் ஆப்பிரிக்காவில் மனுஷ்ய ரூபம் தரித்துப் புலியைப் பார்க்கிலும் கொடுமையாக, (தங்களுக்கு உதவி புரிந்த) இந்தியர்களை நடத்தும் நாகரிக ஆங்கிலேயர்களை இக் கலிகாலத்தில்தான் காணலாம்."

மகாத்மா காந்தியை "வாழ்க நீ எம்மான்! ...புவிக்குள்ளே முதன்மை பெற்றாய்!" என்று பிற்காலத்தில் வாயாரப் பாடிப் புகழ்ந்தார் பாரதி. ஆனால், இந்தியத் தலைவர்களில் பலர் காந்தியை அறியாதிருந்த *1908*-ம் ஆண்டிலேயே பாரதி மேலே குறித்த படத்தையும் குறிப்பையும் வெளியிட்டதுதான் விசேஷம். அதுவே கவியின் தீர்க்கதரிசனம்.

"விவேகானந்தர்கூட சாகுந்தறுவாயில் பாரதம் என்னவாகுமோ என்று கவலைப்பட்டார். ஆனால் அவருக்குக்கூடத் தெரிவிக்காமற்போன எதிர்கால ரகசியத்தை, இயற்கை சக்திகள் பாரதிக்குத் தெளிவாய் உணர்த்தியிருந்ததும், காந்தியத்தால் உலகமே உய்யும் என்று கூறும் அளவுக்கு பாரதி துணிவான தீர்க்கதரிசனம் பெற்றிருந்ததும் வியப்பிலும் வியப்பு" என்கிறார் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார்.



48. **காந்திப் பசு:** தென் ஆப்பிரிக்க இந்தியத் தலைவர் மோ. க. காந்தியை சத்தியமிக்க பசுவாகச் சித்திரிக்கும் "இந்தியா" கார்ட்டூன், 1908-ல் வெளியானது. (விவரம் எதிர்ப்பக்கத்தில் காண்க.)

இந்தியா

# விஜயா.

பிரதி தினம் வெளியாகும்

49. **"விஜயா"** என்ற சென்னை தீவிர தேசியத் தமிழ்த் தினசரி 7-9-1909 முதல் புதுவையிலிருந்து வெளியாகுமென்று கூறும் விளம்பரம், "இந்தியா" 4—9—1909 இதழில்.

விஜயா

சௌமிய வருஷம்

புரட்டாசி மீ 20உ

## எதிர்க்கிறாயா? துணைசெய்கிறாயா?

50. **"விஜயா" தலையங்கம்:** வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் நீதிபதிப் பதவியை ஏற்றதற்காக அவரை கண்டிக்கும் "விஜயா" தலையங்கம். பாரதி "விஜயா"வுக்கும் ஆசிரியப் பொறுப்பு வகித்து வந்தார்.

# புதுவைத் தினசரி ''விஜயா''

**பா**ரதி புதுவை வந்த ஓராண்டுக்குள் அவருடைய சக்தி மேன்மேலும் அதிகரித்து, அவர் மேலும் பல முயற்சிகளைச் செய்யத் தூண்டுதலாயிற்று.

சென்னையில் நடத்தமுடியாமல் புதுவையிலிருந்து வெளிவரும் ''இந்தியா''வுக்கு முன்னை விட அதிக செல்வாக்கு ஏற்பட்டது. பிரெஞ் சிந்தியப் புகலிடமான புதுவையிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தாக்கி எழுதுவது எளிதாயிருந்தது. ''இந்தியா'' புதுவை வந்த ஒரு வருஷத்துக்குள், பாரதி சம்பந்தப்பட்ட மற்றொரு பத்திரிகையையும் சென்னையிலிருந்து புதுவைக்குக் கொண்டுவர பாரதியும் நண்பர்களும் திட்டமிட்டு விட்டார்கள்.

''விஜயா'' என்ற இந்த தமிழ் தினசரிப் பத்திரிகை சென்னையில் திருவல்லிக்கேணி ஹைரோடிலிருந்து வெளி வந்தது. காங்கிரஸின் ''புதிய கோட்பாடுக''ளை—அதாவது தீவிரவாதிகளை ஆதரித்துக் காரசாரமாக எழுதிவந்தது இப்பத்திரிகை. இது சென்னையில் வெளிவரும்போதும் இதைப்பற்றிய விளம்பரம் புதுவை ''இந்தியா''வில் பிரசுரமாயிற்று. முடிவில், ''விஜயா'' *7-9-1909* கிருஷ்ண ஜயந்தி முதல் புதுவையிலிருந்து வெளியாகுமென ''இந்தியா''வில் ஒரு மாதத்துக்கு முன்பே விளம்பரம் செய்யலானார்கள்.

''விஜயா'' பத்திரிகை, பாரதியின் ''இந்தியா'' சென்னையில் நின்றதும், அக்குறையைப் போக்குவதற்காக மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் சொந்தத் தமயனான எஸ். திருமலாச்சாரியாரால் சென்னையில் ஆரம்பிக்கப்பட்டது. சென்னையில் அப் பத்திரிகையும் சர்க்கார் தலையீடின்றி நடக்க முடியாமற் போகவே அதுவும் புதுவை வந்தது.

தேச சேவை என்று வந்துவிட்டால், உற்றார் உறவினராயினும் தாட்சணியமின்றித் தாக்கும் இயல்புடையவர் பாரதி. தமது தேசீய கீதங்கள் முதன் முதலாக அச்சேற உதவிய கொடையாளி வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் காங்கிரஸில் தமக்கு எதிர்க் கட்சியானபோது, பாரதி தயங்காமல் அவரைக் கண்டித்தெழுதினார்.

*1909*-ம் ஆண்டு இறுதியில் வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் நீதிபதிப் பதவியை ஏற்ற போது, தேசபக்தத் தலைவரொருவர் அரசாங்க வேலையை ஏற்பதா என்று அவருடைய நண்பர்களே கேட்டார்கள். பாரதியார், நீதிபதிப் பதவி ஏற்பது தேசத் துரோகம் என்று கருதினார். அச்சமயத்தில் அவர் ''விஜயா'' பத்திரிகையில் எழுதிய தலையங்கம் அவரது வாதத் திறமைக்கும் எழுத்து வன்மைக்கும் சான்றாக இருக்கிறது.

திலகர் கோஷ்டியைவிட நாங்கள் எந்த விதத்திலும் தேசபக்தி குறைந்தவர்கள் அல்லவென்று சொல்லுகிறீரே, ''ஓய் கிருஷ்ண ஸ்வாமி ஐயரே,'' நாளை உங்களுடைய சகாக்களான தீவிரவாதிகளில் எவரேனும் போலீஸாரால் உமது கோர்ட்டில் நிறுத்தப்பட்டால் நீங்கள் ''தயையும் கருணையும் கலந்து'' பல வருஷம் கடுங்காவல் விதிப்பீர்களே; அதுவும் தேசபக்தியான செயல்தானோ!—என்று இடித்துக் காட்டுகிறார் பாரதி இத் தலையங்கத்தில்.

*1909*-ம் ஆண்டு இறுதியில், பாரதியாரும் நண்பர்களும் இன்னும் பல பத்திரிகைகளை வெளியிடத் தொடங்கினார்கள். அரவிந்த கோஷ் புதிதாய் ஆரம்பித்த ''கர்ம யோகின்'' என்ற ஆங்கில மாதப் பத்திரிகையை யொட்டித் தமிழில் ''கர்ம யோகி'' என்ற மாதப் பத்திரிகையும் ''விஜயா''வைப் போலவே அந்த ஆண்டு கிருஷ்ண ஜயந்தி முதல் வெளிவரலாயிற்று. இதில் ''ஆயிரம் பிரதிகளே'' அச்சிடப் போவதாய் முன்னெச்சரிக்கை செய்திருப்பதிலிருந்து பத்திரிகைகள் பல்லாயிரக் கணக்கில் விற்பனையாகும் சந்தர்ப்பம் இருந்ததென ஊகிக்கலாம்.

*1909* டிஸம்பர் *4*-ந் தேதி இதழில் ''சித்ராவளி'' என்ற மற்றொரு மாதப் பத்திரிகை ''இந்தியா'' காரியாலயத்திலிருந்து விரைவில் வெளியாகப் போவதாக விளம்பரம் இருக்கிறது. இது முழுதும் சித்திரங்களாகவே இருக்குமென்றும், சித்திரக் குறிப்புகள் ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் இருக்குமென்றும் கூறப்பட்டது. ஆனால் இப்பத்திரிகை வெளிவந்ததா இல்லையா என்பது தெரியவில்லை. இது வெளிவந்திருக்கும் பட்சத்தில் இந்தியாவின் முதல் முழுக்கார்ட்டூன் பத்திரிகையாக அது இருந்திருக்கவேண்டும். இதிலும் பாரதி இந்தியப் பத்திரிகை உலகம் முழுமைக்குமே வழிகாட்டியாக இருந்திருக்கிறார்!

இவை தவிர ''பால பாரதா'' என்ற சென்னை ஆங்கில வாரப் பத்திரிகையும் புதுவையிலிருந்து பிரசுரமாகத் தலைப்பட்டது.

## "நேற்றிருந்தோம் அந்த வீட்டில்"

திடீரென சென்னையை விட்டுப் புதுவைக் குப் போய்ச் சேர்ந்தபோது பாரதியார் தனி யாகவே அங்கே போய்ச் சேர்ந்தார். குழந்தை தங்கம்மாளும், கர்ப்பிணியாக விருந்த மனைவி செல்லம்மாளும் கடயத்தில் செல்லம்மாளின் பிறந்தகத்திற்கு அனுப்பப் பெற்றிருந்தார்கள்.

புதுவை போவதற்கு முன் பாரதியும் "இந்தியா" சொந்தக்காரர் எஸ். என். திருமலாச்சாரியாரும் அவரது உறவினரும் பாரதிக்கு உறுதுணையாகவிருந்த மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரும் ஒரு பெரிய திட்டம் போட்டிருந்தார்கள். "இந்தியா"வின் நிர்வாகத்தை, எஸ். என். திருமலாச்சாரியாரின் சிறுதாயார் புதல்வரும் பத்திரிகையை திறம்பட நிர்வகித்து வந்தவருமான எம். பி. திருமலாச்சாரியார் வசம் ஒப்புவித்துவிட்டு, பாரதி, எஸ். என். திருமலாச்சாரியார், மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் மூவரும் ஐரோப்பா போய்ச் சுற்றிப் பார்த்து வருவதாகத் திட்டம். ஆனால் இத்திட்டம் பல காரணங்களால் தடைப்பட்டு வந்தது.

பாரதி புதுவைக்கு வரும்படி நேர்ந்தது அக்காரணங்களில் ஒன்று. அவருக்கு பந்துவும் அவ்வப்போது பண உதவி செய்துவந்தவருமான லக்ஷ்மய்யர் என்பவர், இது விஷயமாக பாரதியைப் பார்க்கப் புதுவைக்கு வந்தார். பாரதி புதுவையிலிருந்தது மட்டுமன்றி, மனைவி பிரசவிக்கும்வரை காத்திருக்க வேண்டிய அவசியமும் ஐரோப்பா யாத்திரையைத் தாமதித்தது.

இந்நிலையில் மற்றவர்கள் எதிர்பாராதபடி, எம். பி. திருமலாச்சாரியார் தாம் இங்கிலாந்து செல்ல ஏற்பாடு செய்துகொண்டுவிட்டார். திடீரென ஒரு நாள் புதுவை வந்து சேர்ந்தார் அவர். கொழும்பு வழியே கப்பலில் செல்வதாகவும், நண்பர்களைக் காண வந்ததாகவும் சொன்னார். பாரதிக்கு இது பெரிய ஏமாற்றமே. "இந்தியா"வைக் கவனித்துக்கொள்ளச் சரியான ஆள் இல்லாததால் இதர நண்பர்களும் ஐரோப்பிய யாத்திரையை மறக்க வேண்டியதாயிற்று. அவர்கள் பத்திரிகையை வலுப்படுத்துவதில் முழு கவனம் செலுத்தலானார்கள்.

ஐரோப்பா செல்ல வேண்டும் என்ற ஆசை பாரதிக்குப் பிற்காலத்திலும் இருந்து கொண்டேயிருந்தது. முதல் மகாயுத்த காலத்தில் புதுவைக் கடலோரம் தென்படும் கப்பல்களையெல்லாம் அவர் ஆர்வத்துடன் பார்ப்பாராம். தன் புகழைத் தமிழ் நாடு அறியாமலிருக்க, பிரெஞ்சுக்காரரும் மேனாட்டுப் புலவோரும் கௌரவிக்கிறார்கள் என்பதும், தன்னையொத்த ரவீந்திரர் மேனாட்டினரால் மதிக்கப்பட்டு நோபல் பரிசு பெற்றதும் பாரதிக்கு ஐரோப்பா யாத்திரை ஆசையை மேலும் தூண்டிவிட்டன. ஆனால் அவரைக் காண ஐரோப்பா கொடுத்து வைக்கவில்லை!

* * *

கொஞ்ச காலத்தில் செல்லம்மாள் பிரசவித்தார். குழந்தை பிறந்த செய்தி கிடைத்த சமயம் காளிதாஸனது சாகுந்தலத்தைப் படித்துக் கொண்டிருந்தார் பாரதி. குழந்தைக்கு சகுந்தலா என்று பெயர் வைக்கும்படி எழுதினார்.

இந்தியா புதுவையில் நன்றாய் வேரூன்றி நடக்கவாரம்பித்த பின் பாரதி தம் குடும்பத்தைப் புதுவைக்கு அழைத்துக்கொண்டார். ஈசுவரன் தர்மராஜா கோவில் தெருவில் தெற்குப் பார்த்த ஒரு வீட்டில் குடியேறினார். இவ்வீடு இன்னும் அப்படியே இருக்கிறது. இதில் இப்போது பாரதி சங்கமொன்று நடப்பதாய்த் தெரிகிறது. ஆனால், நன்றாய்ப் பழுது பார்க்கப்படாமல் கட்டடம் க்ஷீணித்து வருகிறது.

சில ஆண்டுகள் இவ்வீட்டில் இருந்தபின் இதற்கு எதிரே உள்ள பெரிய மாடி வீடு ஒன்றில் பாரதி குடிமாறினார். குடிமாறிய தினம் புதுவையில் முன் பின் கண்டிராதபடி புயலடித்தது. ஓயாத மழை, சூரைக்காற்று. ஏராளமான மரங்கள் சாய்ந்து "காடெல்லாம் விறகான கதை"யாயிற்று. பல வீடுகள் சேதமாயின. பாரதி நேற்றுவரை இருந்த பழைய வீட்டின் பின் பகுதி இடிந்து விழுந்தது. பாரதியும் குடும்பமும் அங்கேயே இருந்திருப்பார்களானால்—?

இந்தக் கேள்வியை அவரும் செல்லம்மாளும் கேட்டுக்கொண்டார்கள். அதன் பயனாக உதித்தது ஒரு பாடல்.

"புயற்காற்று—நள வருஷம் கார்த்திகை மாதம் 8-ந்தேதி புதன்கிழமை இரவு—ஒரு கணவனும் மனைவியும்" என்ற தலைப்பில், "காற்றடிக்குது, கடல் குமுறுது, கண்ணை விழிப்பாய் நாயகனே" என்று மனைவி கூறும் பாவுடன் ஆரம்பமாகும் கவிதையே அது.

> **"நேற்றிருந்தோ மந்த வீட்டினிலே இந்த**
> **நேரமிருந்தால் என் படுவோம்?**
> **காற்றென வந்தது கூற்றமிங்கே, நம்மைக்**
> **காத்தது தெய்வ வலிமையன்றோ?"**

என்று கவிதையை முடிக்கிறார் பாரதி.

51, 52. **பாரதி இருந்த இல்லம்:** 'புயற் காற்று' பாடலில் குறிக்கப்படுவது. 1938-ல் எடுத்த மேல் படத்தில் உள்ளதுபோலவே 1953-ல் எடுத்த கீழ்ப்படத்திலும் வீட்டுச் சுவர்கள் நலிந்து உப்புப் பூத்துக் கொட்டுகின்றன!



53. **"இந்தியா" அச்சகம்:** புதுவை "இந்தியா" அலுவலகமும் அச்சகமும் இச்சிறு கட்டடத்தில் இருந்தன. ஸரஸ்வதி அச்சகம் என்று அக்காலத்தில் பெயர். (இப் படம் 1939-ல் எடுத்தது.)






54. **பாரதி இருந்த பெரிய வீடு:** முன் பக்கத்திலுள்ள வீட்டைக் காலி செய்தபின் பாரதி இருந்த பெரிய வீடு. "சும்மா" என்ற கட்டுரையில் பாரதி விவரிக்கும் வீடு இதுதான். இவ் வீடு "விளக்கெண்ணெய்ச் செட்டியார்" என்று பாரதி அழைத்த ஒரு செட்டியாருடையது. (1953-ல் எடுத்த படம்.)

# பெரிதினும் பெரிது கேள்!

எதிலும் தாராள மனது படைத்தவர் பாரதி; "புதிய ஆத்திசூடி"யில் "பெரிதினும் பெரிது கேள்" என்று உபதேசித்தவரல்லவா?

குடியிருப்பு வீடு எடுப்பதிலும் அவர் இதே விதம்தான் நடந்து கொண்டார். ஈசுவரன் தர்மராஜா கோவில் வீதியில் முதலில் இருந்த வீடு பிடிக்காமல் புது வீடு பார்த்தார். அதே தெருவில் முந்திய வீட்டுக்கு எதிர் வீடு இது. பெரிய வீடு. மாடி வீடு. மாடி ஹாலுக்கு மேல் மொட்டை மாடி கொண்டது. "சும்மா" என்ற கட்டுரையில் ('வசனங்கள்' தொகுதியில் உள்ளது.) பாரதி இதைப் பற்றிச் சொல்லுகிறார் :

"நேற்று ஸாயங்காலம் நான் தனியாக மூன்ருவது மெத்தையில் ஏறி உட்கார்ந்திருந்தேன். நான் இருக்கும் வீட்டில் இரண்டாவது மெத்தையிலிருந்து மூன்ருவது மெத்தைக்கு ஏணி கிடையாது... ஆதலால் மூன்றும் மெத்தைக்கு ஏறிப்போவது மிகவும் சிரமம். சிறிய கைச்சுவர்மேல் ஏறிக்கொண்டு அங்கிருந்து ஒரு ஆள் உயரம் உந்த வேண்டும். மூன்ருங் கட்டின் சுவரோரத்தைக் கையால் பிடித்துக் கொண்டு கைச்சுவர் மேலிருந்து உந்தும் போது கொஞ்சம் கை வழுக்கிவிட்டால் ஒன்றரை ஆள் உயரம் கீழே விழுந்து மேலே காயம்படும். நான் தனிமையை விரும்புவோன் ஆதலால், சிரமப்பட்டேறி அடிக்கடி மூன்ருங் கட்டிலே போய் உட்கார்ந்திருப்பது வழக்கம்."

நமக்கு தம்படிக்கும் பயனில்லாத வீணர்களின் கண்ணில் படாமல் வாழ "ஏகாந்த கூடம்" (Hall of Solitude) ஒன்று தேவை என்று குவளைக் கண்ணனிடம் பாரதியார் சொல்வாராம். இதைக் கேட்ட அரவிந்தர் அதைக் கட்டுப்பாடாகச் செய்தும் காட்டிவிட்டார் என்பார் குவளை.

இப்படி ஏகாந்தமாய் மேல்மொட்டை மாடியில் உலவியவரை அங்கே தேடி வந்த குள்ளச்சாமியின் அருமை பெருமைகளை விவரிக்கிறது "சும்மா" என்ற கட்டுரை. "கண்மூடித் திறக்குமுன்னுகவே கைச்சுவர்மேல் ஒரு பாய்ச்சல் பாய்ந்து அங்கிருந்து மேல் மெத்தைக்கு இரண்டாம் பாய்ச்சலில் வந்துவிட்டார் சாமியார்" என்கிருர் பாரதி. சாமியாரைத் தொடர்ந்து தானும் பாய்ந்தேற முயன்று கீழே விழுந்த வஸ்தாது வேணு முதலி என்ற நண்பனுக்கு பலத்த ஊமைக் காயங்கள்!

இந்தச் சம்பவம் நடந்த தினம் சாமியார்களை வேணு முதலி ஏதோ குறைகூற, "ஹிந்துஸ்தானத்து மஹா யோகிகளின் மகிமையைப் பார்!" என்று குள்ளச்சாமி ஒரு அதிசயம் செய்து காட்டினுர். திடீரென குள்ளச்சாமி நெடியசாமி ஆகிவிட்டார்! பாரதி கூறுகிருர்: "நாலேமுக்கால் அடிபோல் தோன்றிய குள்ளச்சாமி ஏழேமுக்கால் அடி உயரம் வளர்ந்து விட்டார். ஒரு கண்ணைப் பார்த்தால் சூரியனைப்போல் இருந்தது; மற்ருெரு கண்ணைப் பார்த்தால் சந்திரனைப்போல் இருந்தது. முகத்தின் வலப்புறம் பார்த்தால் பார்வதியைப் போல் இருந்தது. இடப்புறம் பார்த்தால் சிவன்போல் இருந்தது. குனிந்தால் பிள்ளையார் போலிருந்தது. நிமிர்ந்து பார்க்கும்போது விஷ்ணுவின் முகத்தைப் போலே தோன்றிற்று."

நானே பரமபுருஷன் என்று சாமியார் சொன்னுர்; மத பேதங்களை நீக்கி ஒருமையைக் காணென்ருர். வேணு முதலி மூர்ச்சையாகி விட்டான்; பாரதியும் மூர்ச்சையாகி விட்டார். மூர்ச்சை தெளிந்தபோது சாமியார் போய் விட்டார்!

* * *

வீடு பெரியதாயினும் பாரதி பகலில் பெரும் பொழுது வெளியே தோப்புத் துறவுகளில் சஞ்சரிக்கச் சென்றுவிடுவார். அப்படியானுல் பெரிய வீடு எதற்கு என்று ஒரு சமயம் வ. வே. சு. ஐயர் கேட்டதற்கு, "சின்ன வீடு எனக்குப் பிடிப்பதில்லை. வீட்டுக்காரர் 'விளக்கெண்ணெய்ச் செட்டி'க்கோ வாயிதா எட்டு மாதம் வரை சொல்லலாம்!" என்ருர் பாரதி.

செட்டியார் அவ்வளவு பொறுமைசாலி. வாடகை கேட்க பயபக்தியுடன் நுழைவார். வாய் திறந்து கேட்கமாட்டார்; பணமிருந்து பாரதி கொடுத்தால் பெறுவார். இல்லையென்ருல் பாரதி தம் கவிதைகளைப் பாடிக் கொண்டிருப்பதைச் சிறிது நேரம் இருந்து கேட்டுவிட்டுச் சந்தடியின்றிப் போய்விடுவார்! கண்டிப்பு தெரியாதவர் என்ற காரணத்துக்கே பாரதி இவரை அன்புடன் 'விளக்கெண்ணெய்ச் செட்டியார்' என்றழைத்தார்.

இந்த வீடு இப்போது கைமாறி, வீட்டுக்காரர்கள் வாழ்ந்து வருகின்றனர்; குடியிருப்பு வீடாகையால், எதிர் வீட்டைப்போல் நலிந்து செல்லாமல், நன்ருகப் பாலிக்கப்பட்டு வருகிறது.

# சென்னையில் செய்த விமானம்

பாரதி புதுவை வந்தவுடன் அங்கே அனுப்பப்பட்ட பிரிட்டிஷ் இந்திய உளவாளிகள் புதுவையில் நிரந்தரக் கூடாரமடித்துக் கொண்டார்கள். பாரதியும் மற்றவர்களும் என்னவோ ரகசியத் திட்டம் போடுவதாக நினைத்துக்கொண்டு, அவர்களை வேவுகாரர்கள் சதா நிழல்போல் தொடர்ந்தார்கள். கான் பகதூர் ஜி. எஸ். அப்துல் கறீம் என்ற பிரிட்டிஷ் இந்தியப் போலீஸ் அதிகாரி இந்த விசேஷ வேலைக்கு அதிகாரியானார். பாப்பாராவ் நாயுடு என்பவர் மற்றொரு பிரிட்டிஷ் இந்தியப் போலீஸ் அதிகாரி. இவர் சென்னையிலிருந்த போதே பாரதிக்கு இவரைத் தெரியும்.

பிரெஞ்சிந்தியாவின் தபால் இலாகா பிரிட்டிஷ் நிர்வாகத்திலேயே நடந்தது. அது இந்த உளவாளிகளுக்கு மிக வசதியாயிற்று. பாரதிக்கும் "இந்தியா"வுக்கும் வரும் தபால்களை வழிமறித்துத் தணிக்கை செய்தார்கள். வரும் மணியார்டர்களைக்கூடத் தடுத்தார்கள். பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து பணம் அனுப்புபவர்கள் பெயரைக் கவனித்து, அங்கே அவர்களை மிரட்டச் செய்தார்கள். இவ்வளவு நெருக்கடியிலும் "இந்தியா" சிறப்பாக நடந்து வந்தது. பத்திரிகை அளவில் பெரிதாகி, பல சமயங்களில் விசேஷ அனுபந்தங்களுடன் வெளி வந்தது.

இப்படி 1909-ல் வெளிவந்த அனுபந்தம் ஒன்றில் "சென்னையில் செய்த விமானம்" என்றொரு செய்தியும் விமானத்தின் படமும் வெளியாகியிருக்கின்றன. இவ் விமானம் சென்னையில் டாஞ்சலிஸ் ஹோட்டலின் பிரெஞ்சு முதலாளி டாஞ்சலிஸின் திட்டப்படி ஸிம்ப்ஸன் கம்பெனி பட்டறையில் "தமிழ் வேலைக்காரர்களால்" கட்டப் பெற்றது, கட்டியது தமிழ் வேலைக்காரர்கள் என்று நினைவூட்டுகிறார் பாரதி. எதையெடுத்தாலும், அதிலும் நாட்டுப் பெருமையை, நாட்டு மக்கள் பெருமையைக் கண்டு அதை உரக்க வெளியிட்டு மக்களுக்குத் தம் பலம் தெரியும் வகையில் பேனா ஓட்டியவர்களில் மகா சமர்த்தர் பாரதி.

இந்த விமானம் யந்திரத்துடன் மேலே ஏறிப் பறந்ததாகவும் செய்தி கூறுகிறது. உலகில் முதன் முதலாக ரைட் சகோதரர்கள் விமானம் கட்டிப் பறந்ததற்கு மூன்றரை வருஷங்களுக்குள் சென்னையில் இப்படி ஒரு விமானம் கட்டி, அதில் வெற்றிகரமாய் பறந்தார்களென்பது அதிசயமல்லவா!

* * *

இதற்கிடையில் பாரதி பிரிட்டிஷ் இந்தியாவுக்குத் திரும்பும்படி செய்யப் பல முயற்சிகள் நடந்தன. திருநெல்வேலி கலெக்டர் ஆஷ் துரையின் தூண்டுதலின் பேரில் எட்டயபுரம் ஜமீன்தார் பாரதியின் தாய் வழிப் பாட்டனாரைப் புதுச்சேரிக்கு அனுப்பி, பாரதியை எட்டயபுரத்துக்குத் திருப்பியழைத்து வரும்படியும், பாரதிக்குத் தாம் வேலை தருவதாயும் சொல்லியனுப்பினார்.

பாரதிக்குத் தம் பாட்டனார் ராமஸ்வாமி அய்யரிடம் மிகவும் பிரியம். பாட்டனார், பாட்டியார், மாமா சாம்பசிவம் மூவரும் புதுவை வந்தது அவருக்கு எல்லையற்ற சந்தோஷம். சாத்தூரைக்கூடத் தாண்டியிராத தாத்தா தனக்காகப் புதுச்சேரியே வந்துவிட்டதில் அவர் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார். ஆனால் அவர்கள் வந்த சமாச்சாரத்தைக் கேட்டதும், அவரது முகம் இருண்டது. மீசையில் கைவைத்துக் கொண்டே, "பாஞ்சாலங் குறிச்சியை முன்னர் காட்டிக் கொடுத்துப் பரிசு வாங்கின மாதிரி என்னையும் காட்டிக் கொடுத்துப் பரிசு வாங்கலாம் என்ற நினைப்பு போலிருக்கு ஜமீன்தாருக்கு! ஞாபகமாய் இருக்கச் சொல்லுங்கள்!" என்று பதிலளித்தார்.

பிறகு, "வெள்ளைக்காரனுக்கு என்னிடம் என்னடா இவ்வளவு கருணை! என் தாத்தாவையும் பாட்டியையும் பார்க்கும்படி செய்துவிட்டானே! இதற்கு நான் என்னடா அவனுக்கு சன்மானம் பண்ணப் போகிறேன்!" என்று ஆர்ப்பரித்தார்.

தாத்தாவும் பாட்டியும் மாமாவும் சுமார் ஒன்றரை மாத காலம் புதுவையில் தங்கும்படி செய்தார் பாரதி. தாத்தாவின் வற்புறுத்தலின்பேரில், மகாராஜாவுக்கு ஒரு கடிதம் பட்டும் படாமலும் எழுதியனுப்பினார். ஆனால் அதற்குமேல் அதைப்பற்றிச் சிந்தனை செய்ததாய்த் தெரியவில்லை.

" கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால் கை கொட்டிச் சிரியாரோ " என்றும், "பதம் திரு இரண்டும் மாறிப் பழி மிகுந் திழிவுற்றாலும், சுதந்திர தேவி நின் பாதம் தொழுதிடல் மறக்கிலேனே " என்றும் பாடிய கவி வேறு என்ன செய்திருக்க முடியும் ?

# புதுவை “இந்தியா”





இந்தியா.

“INDIA”

55. **புதுவை “இந்தியா” பெரிய அளவு:** புதுவை வந்த இரண்டாவது வருஷம் முதல் பெரிய அளவில் வந்த “இந்தியா”வின் ஒரு முழு இதழ். 8 பக்கங்களும் 2 பக்க அநுபந்தமும் உள்ளது. அநுபந்தத்தில், சென்னையில் “தமிழ் வேலைக்காரர்களால் கட்டப்பெற்ற” ஒரு விமானத்தைப் பற்றிய விவரமும், தலையங்கப் பக்கத்தில் விமானப் படமும் இருக்கின்றன.

## "இந்தியா," "விஜயா" நின்றன

பலவித புதுமைகள் நிறைந்த "இந்தியா" நன்றாக வளர்ச்சியுற்றுவந்தது. சந்தாவை அதிகரியுங்கள், பத்திரிகையை வாரம் இருமுறையாக்குங்கள் என்று வாசகர்கள் கடிதம் எழுதினார்கள். குறைந்தது 1,500 பேர் இதற்கு சம்மதம் தெரிவித்தால் வாரம் இருமுறையாக்குவதாக ஆசிரியர் முடிவில் அறிவித்தார். "அடுத்த யுகாதியிலிருந்து" (அதாவது 1910 ஏப்ரலில்) "இந்தியா" வாரம் இருமுறையாகுமென்று 1910 ஜனவரி 24-ந் தேதி இதழில் அறிவிப்பு வெளியாயிற்று.

இது பிரிட்டிஷ் இந்திய அதிகார வர்க்கத்துக்கு ஆத்திர மூட்டியிருக்கவேண்டும். பாரதியின் வீர மொழிகளை அடக்கிவிட அவர்கள் முயற்சி செய்யச் செய்ய, அவருக்கு மக்கள் ஆதரவு அதிகரிப்பதையே கண்டார்கள். எப்படியாவது "இந்தியா"வை ஒடுக்கிவிட வேண்டும் என்று துடித்தார்கள்.

அந்தச் சமயத்தில் புதிதாக பத்திரிகை அடக்குமுறைச் சட்டம் ஒன்றை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். இந்தச் சட்டத்தைப் பிரயோகித்து, "இந்தியா" பிரிட்டிஷ் இந்திய எல்லையில் நுழையக் கூடாது என்று தடை விதித்தார்கள்.

இந்தத் தடைக்கு அரசாங்கம் காட்டிய காரணம் வேடிக்கையாக இருந்தது. ஐந்து மாதத்துக்கு முன்னால் "இந்தியா" பத்திரிகையில் ஒரு கட்டுரையும் படமும் வந்திருந்தன. அதுவே தடைக்குக் காரணம் என்று அரசாங்கம் நொண்டிச் சாக்கு சொல்லிற்று. குறிப்பிட்ட கட்டுரை பாரதி எழுதியது. இந்தியாவில் மக்கள் பட்டினி கிடக்கையில் வெளி தேசங்களுக்கு இங்கிருந்து கோதுமை ஏற்றுமதி செய்கிறார்களென்று பிரிட்டிஷ் அரசாங்கத்தை பாரதி தாக்கி யிருந்தார்; எலும்பும் தோலுமான இந்தியர்கள் பட்டினி கிடக்க, ஒரு கப்பல் இந்திய கோதுமையை ஏற்றிச் செல்வதாகக் கார்ட்டூன் இருந்தது.

"இந்தியா"வுக்குத் தடை விதித்த சமயமே தினசரி "விஜயா"வுக்கும் தடை விதிக்கப்பட்டது. இதனால் இரு பத்திரிகைகளும் நின்றுபோயின. இரு பத்திரிகைகளுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவில்தான் வாசகர்கள் அதிகம். பிரிட்டிஷ் இந்தியாவில்தான் சந்தாதாரர்களும் விளம்பரதாரர்களும் இருந்தனர். பத்திரிகைகளும் வேறு வழியின்றி நிறுத்தப்பட்டன.

"இந்தியா"வும் "விஜயா"வும் நிற்பதற்கு சில காலம் முன்பே இம்மாதிரி நெருக்கடி ஏற்படலாமென எதிர் பார்த்திருந்தார்கள். ஆதலால், பாரதி "இந்தியா"விலும் "விஜயா"விலும் எழுதவில்லை என்று அதிகாரிகள் நினைக்கும்படி செய்வதற்காக, அவர் "சூரியோதம்" என்ற ஒரு புதுப் பத்திரிகைக்கு ஆசிரியரானார். "சூரியோதயம்" ஸைகோன் சின்னையா ரத்னசாமி நாயுடு என்ற அச்சாபீஸ் முதலாளியால் நடத்தப்பட்டது.

"இந்தியா" பத்திரிகையில் பாரதிக்கு உதவியாக எஸ். ஹரிஹர சர்மா, நாகஸ்வாமி ஆகிய இரு இளைஞர்கள் தொண்டு புரிந்தனர். சர்மா உப தலையங்கங்களை எழுதி வந்தார்; நாகஸ்வாமி கணக்கு வழக்குகளைக் கவனித்தார். பாரதி "சூரியோதயம்" பத்திரிகையில் முனைந்த சமயம் வேங்கட ஆரியா என்ற அனுபவம் நிறைந்த பத்திரிகையாளர் "இந்தியா"வின் மாற்று ஆசிரியராக நியமிக்கப்பட்டார்.

அணையும் சுடர் பிரகாசித்தெரிவது போல, "இந்தியா" நின்று போவதற்குமுன் அது எல்லா அம்சங்களிலும் உயர்ந்து விளங்கியது. கார்ட்டூன்கள் போடுவதற்கு ஒரு சித்திரக்காரர் சென்னையிலிருந்து தருவிக்கப்பட்டார்; தாமே சித்திரக்காரரானதால் அவர் ஈயத்தில் வெட்டிய ப்ளாக்குகள் ஆசிரியரின் கருத்துக்களைச் சிறப்பாகப் பிரதிபலித்தன.

இந்தச் சமயம், "இந்தியா" 1910 பிப்ரவரி 26-ந் தேதி இதழில், ஒரு வேவுகாரன் தம்மைப் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாரிடம் பிடித்துக் கொடுக்கச் செய்த சூழ்ச்சி வியர்த்தமானதைப் பாரதியாரே தலையங்கத்தில் குறித்திருக்கிறார்.

1910 மார்ச் 5-ந் தேதி இதழின் தலையங்கம் "சிற்பமும் கவிதையும்" என்ற பொருள் பற்றி இருக்கிறது. "இதைக் குறித்து எழுதினால் பத்திரிகைச் சட்டம் நம்மை அண்டாது. ஆகையால் இதையாவது நம் ஜனங்களுக்குச் சொல்வோம்" என்று கிண்டல் செய்கிறார் பாரதி.

1908 அக்டோபர் மாதம் தோன்றிய புதுவை "இந்தியா", ஒன்றரை வருஷங்களுக்குப் பின், 1910 மார்ச் 12-ந் தேதி இதழுடன் முடிவுற்றது. இந்த ஒன்றரை ஆண்டுகளில் வேறு பல காரியங்களையும் பாரதி சாதித்து வந்தார். 1909 ஆண்டு மார்ச் மாத சமயம் "ஸ்வதேச கீதங்க"ளின் இரண்டாம் பாகமாக "ஜன்ம பூமி" என்ற பாடல் தொகுதி பிரசுரமாயிற்று.

"இந்தியா"வுக்கு நேர்ந்த கதி, சீக்கிரமே மற்ற பத்திரிகைகளுக்கும் நேர்ந்தது. 1910-ம் வருஷம் முடிவதற்குள், தமக்கென ஒரு பத்திரிகை இல்லாத சங்கடமான நிலைமையை அடைந்துவிட்டார் பாரதி.

# அரவிந்தர், அய்யர் வருகை

பாரதியின் "இந்தியா" நின்றுபோன ஒரு மாதத்திற்குள், 1910 ஏப்ரலில், பாபு அரவிந்த கோஷ் பாரதியின் யுக்தியைப் பின்பற்றிப் புதுச்சேரிக்கு ரகசியமாய் வந்து சேர்ந்தார். அரவிந்தர் புதுவை வருவதற்கும், வந்ததும் யாருமறியாது வாழ்வதற்கும் ஏற்பாடு செய்தவர்கள் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியும் பாரதியுமாவர். கலவை சங்கர செட்டியார் இவர்களுடன் ஒத்துழைத்தார்.

1910-ல் அரவிந்தர் நாட்டின் முக்கியமான அரசியல் தலைவராயிருந்தார். வங்காள வெடி குண்டு இயக்கத்தில் சம்பந்த முள்ளவரென சந்தேகித்து அரசாங்கம் அவரைச் சிறையிலிட்டது. சிறையில், எங்கும் கிருஷ்ணன் இருப்பதைக் கண்டு ஞான தரிசனம் பெற்றார் அரவிந்தர். அவர் மனம் யோகசாதனையில் நாட்டம் கொண்டது. விடுதலையடைந்ததும் "கர்மயோகின்" என்ற பத்திரிகையை நடத்தலானார். இதையே பாரதி தமிழ்ப் படுத்தி "கர்மயோகி" என்ற பெயரில் புதுவையில் நடத்தி வந்தார். அரவிந்தரது யோகசாதனையெல்லாம் வெறும் வேஷமென நினைத்த அரசாங்கத்தார் அவருக்கு மேன்மேலும் தொந்தரவு கொடுத்து வந்தார்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில், வ. உ. சி. துவங்கிய சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனிக்குப் பங்குகள் சேர்ப்பதற்காக ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் இளைய சகோதரர் பார்த்தஸாரதி வட இந்தியா சென்றிருந்தார். கல்கத்தாவில் அவர் அரவிந்தரைச் சந்தித்தார். கப்பல் கம்பெனி விஷயங்களைத் தவிர தென் இந்திய அரசியல் நிலைமை பற்றியும், சென்னையிலிருக்க முடியாத பாரதியும் "இந்தியா" பத்திரிகையும் புதுச்சேரியிலிருந்து தங்கு தடையின்றி முழங்கி வருவது பற்றியும் பார்த்தஸாரதி அரவிந்தரிடம் சொன்னார். தமிழர் கண்டு பிடித்த யுக்தி அரவிந்தருடைய மனதில் பதிந்துவிட்டது.

1910 மார்ச்சில் அரவிந்தரிடமிருந்து ஒரு கடிதம் எடுத்துக் கொண்டு ஒரு வங்க இளைஞர் புதுவை வந்தார். தாம் புதுவை வரத் தீர்மானித்துவிட்டதாயும், குறித்ததோர் தேதியில் ஒரு பிரெஞ்சுக் கப்பலில் வருவதாயும், தம்மைச் சந்தித்து அழைத்துச் செல்லுமாறும், புதுவையில் தாம் ரகசியமாய்த் தங்கியிருக்க இடம் ஏற்பாடு செய்யும்படியும் பார்த்தஸாரதிக்கு அரவிந்தர் எழுதியிருந்தார். இக் கடிதத்தை ஸ்ரீநிவாஸாச்சாரியார் பாரதியிடம் காட்டினார். பிறகு இருவரும் கலவை சங்கர செட்டியாரிடம்போனார்கள். அரவிந்தர் செட்டியார் வீட்டுமாடியில் வாழ ஏற்பாடாயிற்று.

குறித்த நாள் மாலை கப்பலில் அரவிந்தர் வந்து சேர்ந்தார். பாரதியும் ஸ்ரீநிவாஸாச்சாரியும் படகில் ஏறிக் கப்பலுக்குச் சென்று அரவிந்தரைச் செட்டியார் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்கள்.

அரவிந்தர் புதுவை வந்துவிட்ட விஷயம் இரண்டு மாதங்களுக்குப் பிறகே பிரிட்டிஷ் போலீஸுக்குத் தெரிந்தது.

பாபு அரவிந்த கோஷ் வந்த ஆறு மாதத்தில் புதுவைக்கு தாடி வைத்த ஒரு முகமதியர் வந்து சேர்ந்தார். புதுவை வந்து சேர்ந்தபின் அவர் தாமே வ. வே. சு. அய்யரென பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு பகிரங்கமாக அறிவித்தார்.

வ. வே. சு. அய்யர், திருச்சி வரகனேரியைச் சேர்ந்தவர். பாரிஸ்டர் படிப்புக்காக லண்டன் சென்று, அங்கே டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், விநாயக தாமோதர சாவர்க்கர் முதலியோர் சகவாசம் ஏற்படவே, பயங்கர இயக்கத்தில் ஈடுபட்டார். இவர்கள் கோஷ்டியைச் சேர்ந்த மதன்லால் திங்கரா என்ற பஞ்சாபி இளைஞன் கர்ஸான் வைலி என்ற ஆங்கிலேய அதிகாரியை லண்டனில் சுட்டுக் கொன்றான். சாவர்க்கர் இது சம்பந்தமாய்க் கைதானார். அய்யர் தலைமறைவாகி, வீர விக்கிரமஸிங் என்ற தாடியுள்ள ஸீக்கியர் போலவும், கைரோவில் ஆறுவேளை நமாஸ் செய்யும் அராபிய முஸ்லிம் போலவும் நடித்து, தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸில் நாடு போவதாகக் கடிதங்களில் பாய்ச்சுக் காட்டி, துருக்கி வழியாகக் கொழும்பு வந்து, புதுவை போய்ச் சேர்ந்தார். அவரும் தர்மராஜா கோவில் வீதியில் குடியிருந்தார். பாரதி, ஸ்ரீநிவாஸாச்சாரி, அரவிந்தர், அய்யர் நால்வருக்கும் அடைக்கலம் தந்ததனால், இந்தத் தெருவை பாரதி, "பாரதி அறுபத்தா"றில், "கீர்த்தி அடைக்கலம் சேர் ஈசுவரன் தர்மராஜா கோயில் வீதி" என்று பாடியிருக்கிறார்.

பாரதி, ஸ்ரீநிவாஸாச்சாரியார், அய்யர், அரவிந்தர் இந்நால்வரும் மாலை நேரத்தை இலக்கியம், ஞான மார்க்கம் முதலிய விஷயங்களை விவாதிப்பதில் கழித்தார்கள்.

அரவிந்தர் பழக்கத்தினால் பாரதி வேத ரிஷிகளின் கீதங்களில் ஈடுபடலானார். அவைகளைத் தமிழிலும் மொழி பெயர்த்தார். "வேதரிஷிகள் கவிதை", "பதஞ்சலி யோக சூத்திரம்" (இது, விவேகானந்தரது ஆங்கில மொழி பெயர்ப்பை விட நன்றாயிருப்பதாக அரவிந்தர் சொல்வாராம்), "காட்சி" முதலிய வசன கவிதைகள் இக் காலத்தில் பிறந்தவை.



57. **பாபு அரவிந்த கோஷ்:** அரவிந்தர், 1906-ல், அரசியல் தலைவராக இருந்தபோது. பாரதியின் யுக்தியைப் பின்பற்றிப் புதுவை வந்தவர் அரவிந்தர்.

58. **வீர விளக்கு வ. வே. ஸு. அய்யர்:** ஸீக்கியர், மகம்மதியர் என்ற மாறு வேடங்களில் லண்டனிலிருந்து புதுவை வந்து சேர்ந்த தேசபக்த வீரர்.



59. **அரவிந்தர் புகலிடம்:** புதுவைக்கு ரகசியமாய் வந்த அரவிந்தர் முதன் முதலில் கலவை சங்கர செட்டியார் வீட்டு மாடியில் தங்கியிருந்தார்.





60. **பாரதி சீடர்:** வ. ரா. (பிற்காலப் படம்)



61. **பாரதி சீடர்:** "பாரதி தாசன்" (சமீப காலப் படம்)





62. **உதவியாளர்:** ஏழை நெச வாளி 'வெல்லச்சு' கிருஷ்ண ஸ்வாமி செட்டியார். பாரதிக்குப் பல சமயம் பண உதவி அளித் தவர். இவரது குட்டையான தோற் றத்தினுல் பாரதி இவரை 'வெல் லச்சு' என்றழைத்தார்.

63. **தொண்டர்:** பாரதியையும் அரவிந்தரையும் இளமையிலேயே நன்கறிந்திருந்தவரும், தற்சமயம் அரவிந்தரின் சீடராக அரவிந்தாசிரமத்தில் இருப்ப வருமான அமுதன்.

# இளம் தொண்டர்கள்

**கா**ந்தக்கல் இரும்புத் தூள்களை இழுப்பது போல பாரதியின் மேதை புதுவையில் சில இளைஞர்களை வசீகரித்தது. அவர்களுடன் சல்லாபிப்பதில் அவருக்கு ஆனந்தம்.

திருப்பயணம் வ. ராமசாமி அய்யங்கார் என்ற இளைஞர் ஒருவர். அரவிந்தர் புதுவைக்கு வந்துவிட்டாரா என்று அறிந்து வரும்படி திருச்சி அரசியல் தலைவர் கொடியாலம் ரங்கஸ்வாமி அய்யங்கார் இவரைப் புதுச்சேரிக்கு அனுப்பினர். புதுச்சேரியில் பாரதியைப் பார்த்து, அவர் மூலம் அரவிந்தரையும் கண்டார். இவருக்கு பாரதியிடம் அதிக பக்தியா, அரவிந்தரிடம் அதிக பக்தியா என்பது அக்காலத்தில் தீர்மானிக்க முடியாத விஷயமாயிருந்தது.

புதுவையில் பாரதியைப் பார்க்கச் சென்று அவருடன் சில காலம் வாழ்ந்த பரலி. சு.நெல்லையப்பர், அக்காலத்தில் வ. ரா. தாடிச் சாமியாராக விளங்கினரென்றும் வ.ரா.வைத் தாம் ஒரே ஒரு தடவைதான், அரவிந்தாசிரமத்தில், பார்த்ததாகவும் கூறுகிறர்.

புதுவை தேசபக்தர்களுக்குப் பணம் தருவிக்கும் வேலையில் வ. ரா. கைதேர்ந்திருந்தார். இதற்காக நெய் வியாபாரமும் புத்தக வியாபாரமும் செய்தாராம். அதாவது, ஆறுமுகம் செட்டியார் என்ற புதுவைப் பிரமுகர் பெயரில் சென்னையிலிருந்து நெய் டின்கள் வரும். நெய்யில் கை விட்டுத் துளாவினல் ரூபாய்க் காசுகள்! சாதாரண புக்-போஸ்டில் புஸ்தகம் வரும். புத்தக அட்டையை வெட்டிப் பார்த்தால் ரூபாய் நோட்டிருக்கும்!

புதுவையை அடுத்த முத்தியாலுப்பேட்டையைச் சேர்ந்த கிருஷ்ணசாமி செட்டி என்ற நெசவுத் தொழில் இளைஞர் ஒருவர். 20 வயது. குள்ளம். கெட்டியான இரட்டை நாடி சரீரம். சோர்வே அறியாத சுபாவம். "வெல்லச்சு" என்று பாரதி இவருக்கு செல்லப்பெயர் வைத்தார். தம் பாடல்களை இவரிடம் பாடிக் காட்டுவதில் பாரதிக்குத் தனி இன்பம். மாலை வேளைகளில் பாரதி வீட்டில் நண்பர்கள் கூடியிருப்பார்கள். அவர்களை உபசரிக்கப் பணமிராது. செட்டியாரும் இருந்தால், பாரதி, காட்டில் திருடனுக்கு பயந்து கட்டைபோல் கிடந்த செட்டியின் கதையைச் சொல்வார். தன் மீது இடறிய ஒரு திருடன் தன்னைக் கட்டையென்றதும், செட்டியாருக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிடுகிறது; "உங்கள் வீட்டுக் கட்டை மடியில் பத்து ரூபாயுடன் கிடக்குமோ?" என்று தன்னை மறந்து கேட்கிறன். கதையில் இந்தக் கட்டம் வந்ததும், வெல்லச்சு கிருஷ்ணசாமி செட்டியார் மடியிலிருந்து பத்து ரூபாயை எடுத்து பாரதியிடம் கொடுத்துவிடுவார்! 'கதையில் வந்தவன் திருடன்; நான் பகல் கொள்ளைக்காரன்' என்று பாரதி களிப்பார்.

அரவிந்தரின் ஆரம்ப சீடர்களில் ஒருவரும், அரவிந்தாசிரமத்தில் தற்சமயம் பொறுப்பான ஸ்தானத்திலிருப்பவருமான அமிர்தா என்ற ஆராவமுதய்யங்கார் பாரதியிடம் மனதைப் பறிகொடுத்த இளைஞர்களில் ஒருவர்.

"பாரதியின் பரிணமத்தைக் கவனிக்கும் போது அவர் பிறவியில் கவியென்பதும், பிறகு தான் பாரததேவியின் புத்திரன் என்ற நினைவு அவருக்கு மூண்டதும், கடைசியாக, தான் சக்தியின் புதல்வன் என்று கண்டு கொண்டதும் பிரதான அம்சங்களாகும்" என்று பாரதி வாழ்க்கைத் தத்துவத்தை அழகுற விவரிக்கிறர் அமிர்தா.

"பாரதி தாசன்" என்ற கனக. சுப்புரத்தினம் பாரதி பக்தர்களில் ஒருவர். தாம் பாரதியை முதன்முதல் சந்தித்த விவரத்தை அவரே எழுதியிருக்கிறர்.

"இந்தியா" நின்றுபோய்விட்டது; சின்னையா ரத்னசாமி நாயுடு என்பவருடன் சேர்ந்து பாரதி ஆரம்பித்த "சூரியோதயம்" என்ற பத்திரிகையும் நின்றுவிட்டது. அப்போது சுப்புரத்தினம் சர்க்கார் பாடசாலையில் தமிழாசிரியர். "இந்தியா" இதழ்கள் படித்திருக்கிறர். "சுதேச கீதங்கள்" பாடல்களைக் குவளைக் கண்ணன் தன் கவர்ச்சியற்ற குரலில் உரத்துப் பாடக் கேட்டிருக்கிறர். முடிவில் ஒரு புத்தகம் சம்பாதித்து அப் பாடல்களைத் தாமும் பாடத் தொடங்கினர்.

"வல்லூறு நாயக்கர்" என்று பாரதி தம் கட்டுரைகளில் குறிப்பிடும் வேணு நாயக்கரது கல்யாணத்தில் சுப்புரத்தினம் "வீர சுதந்திரம் வேண்டி நின்றர்" பாட்டைப் பாடினர். பாடும் தன்னைப் பாராமல் எல்லாரும் "ரவி வர்மாப் படப் பரமசிவம் போலிருந்த" ஒருவரையே பார்ப்பதை அவர் கவனித்தார். பாட்டு முடிந்ததும் அந்த 'ரவி வர்மாப் படப் பரமசிவம்', "உணர்ந்து பாடுகிறீர்கள்" என்று சுப்புரத்தினத்தை ஆசீர்வதித்தார். தாம் பாடிய பாட்டை இயற்றிய கவி சுப்பிரமணிய பாரதி அவரே என்று தெரிந்ததும் சுப்புரத்தினம் நாணிக் கோணினர்!

பாரதி ஊக்குவிக்க, தாமே கவிதை யெழுத முடியும் என்று உணர்ந்து, "பாரதிதாசன்" ஆனர் சுப்புரத்தினம். பிற்காலத்தில் "பாரதி கவிதா மண்டலம்" என்ற பெயரில், முற்றிலும் கவிதையான ஒரு அற்புதப் பத்திரிகை நடத்தினர் "பாரதிதாசன்."

# செல்வக் குடும்பத்தின் சேவை

**1911**-ல் மணியாச்சியில் ஆஷ் என்ற ஸப்-கலெக்டரை வாஞ்சி அய்யர் என்ற இளைஞர் சுட்டுக் கொன்று, தம்மையும் மாய்த்துக் கொண்டார். இதனுல் சுதேசித் தலைவர்கள் மட்டுமல்ல, அவர்களுடன் பழகியவர்களுக்கும் போலீஸ் கண்காணிப்பு ஏற்பட்டது. புதுவையில், துணிச்சலற்றவர்கள் பாரதியை நெருங்குவதும் இயலாததாகவிருந்தது.

இத்தகைய நெருக்கடியான சமயங்களில் பாரதிக்கு உற்ற துணையாக விளங்கியவர்கள் மூவர்—சுந்தரேசய்யர், பொன்னு முருகேசம் பிள்ளை, கலவை சங்கர செட்டியார்—என்று வ. ரா. கூறுகிருர்.

பொன்னு முருகேசம் பிள்ளை பாரதியின் வீட்டுக்கு இரண்டு மூன்று வீட்டுக்கப்பால் இருந்த தனிகர். பிரெஞ்சு பாஷை நன்கறிந்தவர்; தெய்வம் கிடையாதென்று வாதிப்பவர்; பாரதியின் தெய்வ நம்பிக்கையைப்பற்றி அவரைக் கிண்டிவிட்டு அவருடன் கட்சி வாதம் செய்து ஆனந்தப்படுபவர். இவர் பாரதிக்குப் பண உதவி செய்ததில்லை. ஆனுல், தமது நிலத்திலிருந்து வரும் தானியங்களை ஐயர், பாரதி முதலியோருக்கு வெளியில் விற்பதைவிட சரசமான விலையில் தருவார்.

பண உதவி செய்யவில்லை யென்றாலும் பிள்ளையவர்கள் தம் வீட்டையே, குடும்பத்தையே பாரதி சேவைக்குக் கொடுத்துவிட்டார் எனலாம். பாரதி அநேகமாய் எப்பொழுதும் பிள்ளையவர்கள் வீட்டிலேயே தங்கிவிடுவார். பெரிய வீடு, மாடியில் தனி அறை ஒன்று. அது பாரதி அறை. சில சமயம் இரவு கூட அங்கேயே தங்கிவிடுவார்.

முருகேசம் பிள்ளையின் மனைவி அண்ணியம்மாள் என்ற சௌந்திரம்மாள் உத்தம குணம் பொருந்திய ஹிந்து கிருஹலக்ஷ்மி. சமயமறிந்து பாரதிக்கு அன்னமளித்து சிற்றுண்டி யளித்து உபசரிப்பார். தாயைப் போலவே குமாரர்கள் ராஜா பகதூர், கனக ராஜா இருவரும்கூட பாரதி சேவையில் ஈடுபடலானுர்கள். இவர்கள் பாரதியின் "மெய்காவலர்" என்ருல் தவருகாது.

பாரதி கட்டுக்கடங்காத செல்லக் குழந்தை; நினைத்த சமயம் கவிதை வரும், உரக்கப் பாடுவார். உட்கார்ந்த இடத்திலிருந்து எச்சிலைத் துப்புவார். இந்தக் குறைபாடுகளைப் பற்றிப் பிள்ளையவர்கள் வீட்டில் மூச்சுப் பேச்சு இராது.

முதல் மகாயுத்தம் ஆரம்பிப்பதற்கு முன், பிள்ளையவர்களின் மூத்த புதல்வர் ராஜா பகதூர் எஞ்சினீயர் படிப்புக்காகப் பாரிஸ் சென்றிருந்தார். படிப்பு முடிந்து திரும்பி வரும் சமயம் யுத்தம் மூண்டுவிட்டது. செல்வப் புதல்வனை வரவேற்கப் பிள்ளையவர்கள் கோலாகலமாக ஏற்பாடு செய்திருந்தார். ராஜா பகதூருக்குப் பதில் ஒரு தந்தி வந்து நின்றது. ராஜா பகதூர் வந்த கப்பல் ஜெர்மன் குண்டுகளால் தாக்குண்டு சுக்குநூருயிற்று என்று தந்தி கூறியது. தந்தியைப் படித்த முருகேசம் பிள்ளை மூர்ச்சையானுர்; மூர்ச்சை தெளிந்து கதறினுர், புலம்பினுர், அரற்றினுர். யார் என்ன சொல்லியும் தேறவில்லை. அண்ணியம்மாளும் அழுதார்.

பாரதியார் அந்தத் தம்பதிகளைத் தேற்ற வெகு பாடுபட்டார். இந்திரஜித்தன் இறந்ததும் மண்டோதரி புலம்பிய கம்ப ராமாயணச் செய்யுள்களையும், குலசேகராழ்வார் பாடிய "வன் தாளின் இணை வணங்கி" என்ற தசரதன் புலம்பலையும், "ஆலைநீள் கரும்பன்னவன் தாலேலோ" என்ற தேவகி புலம்பலையும் மனம் உருகப் பாடித் தேற்றினுர்.

என்ன தேற்றியும் முருகேசம் பிள்ளை உடம்பு தேறவில்லை. ராஜா பகதூர் சுகமாயிருப்பதாய்ப் பொய்த் தந்தியை அரவிந்தரே கொண்டு கொடுக்கச் செய்தும், ராஜா பகதூர் போன்ற ஒருவனுக்கு அவன் போலவே உடையணிவித்து இதோ ராஜா பகதூர் வந்துவிட்டான் என்று காட்டியும்கூட அவர் படுத்த படுக்கையாகவே இருந்தார். பொய் ராஜா பகதூரைப் பார்த்ததும் அவநம்பிக்கையும் அதிருப்தியும் முகத்தில் தோன்ற மறுபுறம் புரண்டு படுத்தார்; சற்று நேரத்தில் உயிர்நீத்துவிட்டார்!

தந்தை இறந்த 27-ம் நாள் ராஜா பகதூர் சௌக்கியமாக வந்து சேர்ந்தான். 'தனயனுக்காகத் தந்தை உயிர் கொடுத்தார்' என்ருர் பாரதி.

ராஜா பகதூர் பிறகு புதுவை சட்ட சபையின் காரியதரிசியாகி 1950-ம் ஆண்டு வரை இருந்தார். தம் புதல்வனுக்கு முருகேச பாரதி என்று பெயரும் இட்டார்.

சென்னை திரும்பிய பின், 1920-ல் குள்ளச்சாமி என்ற புதுவை யோகியை சென்னைக்கு வரச் செய்தார் பாரதி. புதுவையிலிருந்து அவரை அனுப்பிவைத்தவர் கனக ராஜா. (அவருக்கு பாரதி எழுதிய கடிதம் இந்நூலில் பிறிதோரிடத்தில் இருக்கிறது).

கனகராஜா இளமையிலேயே அகால மரணமடைந்தார்.



64 **ஆதரவளித்த சீமான்:** பல வகைகளில் பாரதிக்கு ஆதரவளித்து வந்த சீமான் பொன்னு முருகேசம் பிள்ளையும் அவரது மனைவியார் அண்ணியம்மாளும்.



65. **தொண்டர்:** பொன்னு முருகேசம் பிள்ளையின் மூத்த புதல்வர் ராஜா பகதூர். (1939-ல் எடுத்த படம்.)



66. **தொண்டர்:** பொன்னு முருகேசம் பிள்ளையின் இளைய புதல்வர் கனகராஜா. (1930-ல் எடுத்த படம்.)



67. **பாரதி பூஜித்த விக்கிரகமும் வாளும்:** ஏழைப் பணிப் பெண் அம்மாக்கண்ணு வீட்டில் பாரதி பூஜித்ததாகச் சொல்லப்படும் தத்தாத்ரேய விக்கிரகமும் வாட்களும். அருகே நிற்பது அம் மாக்கண்ணுவின் மூத்த புதல்வர் வேணு என்ற வேணுகோபால் நாயகர். (1938-ல் எடுத்த படம்.)

68. **அம்மாக் கண்ணு:** பாரதியிடமும் அவரது குடும்பத்தாரிடமும் மிகுந்த விசுவாசம் கொண் டிருந்த பணிப்பெண். (1938-ல் எடுத்த படம்.) வ.ரா. இவ்வம்மையாரை மிகவும் போற்றியுள்ளார்.



69. **கோவிந்தன்:** அம்மாக் கண்ணுவின் இளைய புதல்வர் கோவிந்தசாமி. பாரதியும் குடும்பத் தாரும் இட்ட வேலைகளைச் செய்து முடிப்பதில் சூரர். (1930-ல் எடுத்த படம்.)



# ஏழைக் குடும்பம் சளைத்ததா?

**பொ**ன்னு முருகேசம் பிள்ளை வீட்டில் ஒரு வேலைக்காரக் கிழவி. பார்க்க, ஒளவைப் பாட்டிதான். அம்மாக் கண்ணு என்று பெயர். வீட்டு எஜமானருக்கும் எஜமானியம் மாளுக்கும்தான் பாரதியிடம் பரிவு என்றால், இந்த எழுத்து வாசனையறியாத செவிட்டுக் கிழவிக்கும் அவரிடம் அளவற்ற வாஞ்சை. கிழவியின் மூன்று புதல்வர்களுக்கும் அப்படியே.

பொன்னு முருகேசம் பிள்ளை வீட்டில் பாரதி செய்யும் லூட்டிகளை—கண்ட இடத்தில் துப்புதல் முதலியவைகளை—அம்மாக் கண்ணு பொருட்படுத்தாமல் அவருக்கு சிசுரூஷை செய்தாள்.

ஒரு சமயம், *1917*-ல் இருக்கலாம், பாரதிக்குப் புதுவையின் குறுகிய வாழ்வு அலுத்துப் போய்விட்டது. என்ன ஆனாலும் சரி, பிரிட்டிஷ் இந்தியாவுக்குப் போய்விடுவது என்று தீர்மானித்துவிட்டார். மனைவியிடம் என்ன கோபமோ, யாரிடமும் சொல்லாமல் தனியே கிளம்பிவிட்டார்.

பாரதி கிளம்பிப் போய்விட்ட சேதி தெரிந்தது; எல்லாரும் தேடினார்கள். கடைசியில் ரயில்வே ஸ்டேஷனில் அகஸ்மாத்தாய்ச் சந்தித்த பாரதிதாசன் அவரைச் சமாதானம் செய்து திரும்ப அழைத்து வந்தார். புதுவையில் பின்னுலிருந்து தள்ளும் ரிக்ஷா வண்டியைப் 'புஷ் வண்டி' என்பர். அதில் பாரதியும் பாரதிதாசனும் வருகிறார்கள். இதை யறிந்த அம்மாக் கண்ணு வழியில் அவர்களைச் சந்தித்தாள்—கையில் சுண்டல் முதலிய எளிய தின்பண்டங்களுடன். பாரதிக்கு மட்டற்ற மகிழ்ச்சி.

அம்மாக்கண்ணு *1939*-க்குப் பின் காலமானாள். அவளுடைய மூன்று புதல்வர்களில் தெய்வசிகாமணி, கோவிந்தசாமி இருவரும் இளவயதிலேயே காலமானார்கள். வேணு என்ற வே. வேணுகோபால் நாயக்கர் மட்டும் சமீப காலம் வரை வாழ்ந்திருந்தார். "தாய் நாடு" என்ற பத்திரிகை ஒன்றும் புதுவையில் சிலகாலம் நடத்தினார்.

நம் நாட்டில் உயர் வகுப்பார் கீழ் வகுப்பாருடன் சிநேகமாயிருந்தால்கூட அவர்களது வீடுகளுக்குச் சென்று உணவருந்துவதும் தெய்வம் தொழுவதும் மிக அதிசயம். பாரதி இதற்கு விதிவிலக்கு. பார்ப்பார் முதல் பள்ளர் வரை எல்லாருடைய வீடுகளுக்கும் அவர் சகஜமாய்ப் போய் வந்தார். அந்தக் காலத்திலே இது பெரும் புரட்சி யென்று சொல்லத் தேவையில்லை.

இந்த நூலாசிரியர் *1938-39*-ல் புதுச்சேரியில் அம்மாக் கண்ணுவின் வீட்டுக்குப்போய் அந்தக் கிழவியைப் பார்த்த சமயம், அவள் வீட்டில் ஒரு தத்தாத்ரேய விக்கிரகமும் இரு வாள்களும் ஒரு குத்துவாளும் பூஜை அறையிலிருந்தன. இவை பாரதியாரால் பூஜிக்கப் பட்டவை என்று சொன்னார்கள்.

பாரதி இந்த வாள்களை வாள் பயிற்சிக்காக உபயோகித்தாராம். தேகப் பயிற்சி செய்யவேண்டும் என்ற ஆசை மட்டும் உள்ளவர் அவர். தொடர்ந்து பயிற்சி செய்யும் பிடிவாதம் இல்லை. ஒருநாள் புதுவைக் கடற்கரை மணலில், நிலவொளியில் வாள் பயிற்சி செய்வதெனத் தீர்மானித்தார். நண்பரொருவர்—இது அம்மாக் கண்ணுவின் புதல்வர் வேணுவாக இருக்கலாம்—வாளை எப்படிச் சுழற்றுவது என்று காட்டினார். பாரதி வாளைக் கையில் வாங்கிச் சில தடவை சுற்றினார். திடீரென ஆவேசம் வந்தவர் போல் வாளை அதிவேகமாய்ச் சுற்றி, எதிரேயிருந்த நண்பனைத் தாக்குவதுபோல வந்துவிட்டார். அவர் கையிலிருந்து வாளை வாங்குவது பெரும் பாடாகிவிட்டது. க்ஷணத்தில் தம்மை மறந்துவிடும் பாரதிக்கு அதன் பிறகு யாரும் வாள் பயிற்சி போதிக்கத் துணியவில்லை!

அம்மாக் கண்ணுவின் குடும்பம் மட்டுமல்ல. ஹரிஜன இளைஞர் ரா. கனகலிங்கம், உப்பளம் முத்துமாரியம்மன் கோயில் பண்டாரம், கொட்டடி வேணு நாயக்கர் முதலிய பலதரப்பட்ட நண்பர்கள் பாரதிக்கு உண்டு. ஜாதி மத பேதத்தை அறியாதவர் அவர். எந்த ஜாதி மதத்தினரானாலும், நண்பர்களென்றால் வித்தியாசமின்றிப் பழகுவார், சல்லாபிப்பார், உண்டு உறங்குவார். *1912*-ல் புரோகிரஸிவ் யூனியன் கிரிக்கெட் கிளப் என்ற புதுவைச் சங்கத்தில் 'ஜாதி வித்தியாசம்' என்பதுபற்றி பாரதி பேசினார். அரசாங்க அனுமதியின்றி இந்தக் கூட்டத்தை நடத்தியதாக, இளைஞர் கனகலிங்கத்துக்கு மூன்று ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது.

புதுவையில் ஹரிஜனங்கள் போற்றும் உப்பளம் முத்துமாரியம்மன் கோயில் மீதுதான் "தேச முத்துமாரி பாட்டு" பாடியிருக்கிறார் பாரதி.

"வெள்ளைக்காரனை வீட்டுக்குப் போகச் செய்வது; ஜாதியென்ற இந்த நாசப் பூண்டை வேரோடு களைவது; பெண்களுக்கு விடுதலை - இந்த மூன்றும் அத்தியாவசியம்" என்று பாரதி அடிக்கடி சொல்வாராம். இவற்றை அக்காலத்திலேயே செயலிலும் காட்டிவந்த தீரர் அவர்.

# சில வேதபுர நண்பர்கள்

**பு**துவையில் கல்வே கல்லூரி என்ற உயர் நிலைப்பள்ளி இருக்கிறது. அதில் ஆங்கில போதகாசிரியர் புரொபஸர் என். சுப்பிரமணிய அய்யர் என்று ஒருவர் இருந்தார். பாரதி, வ. வே. சு. அய்யர் போலவே ஈசுவரன் தர்மராஜா கோயில் வீதியில் இருந்தார். புதுவையை வேதபுரம் என்று வர்ணிக்கும் பல கட்டுரைகளில், இவரை "பிரம்மராயர்" என்றும் "பிரம்மராய அய்யர்" என்றும் பாரதி குறிப்பிடுகின்றார். "பெண்" என்ற கட்டுரையில் பாரதி கூறுகிறார்:

"வேத புரத்தில் தர்ம வீதியில் வாத்தியார் பிரம்மராய அய்யர் என்றொரு பிராமணர் இருக்கிறார். இவர் சாக்த மதத்தைச் சேர்ந்தவர்...இங்கிலீஷ், பிரெஞ்சு என்ற இரண்டு பாஷைகளிலும் நல்ல பாண்டித்தியமுள்ளவர். கொஞ்சம் சமஸ்கிருதமும் தெரியும்... வேதாந்த விசாரணையிலே நல்ல பழக்கமுண்டு. கதை, காலக்ஷேபம் உபந்யாசம் முதலியன நடந்தால் தவறாமல் கேட்கப் போவார். பெரும்பாலும் கதை கேட்டு விட்டு அதிருப்தியுடனே திரும்பி வருவார்... மேற்படி பிரம்மராய வாத்தியாருக்குத் தமிழிலும் கொஞ்சம் ஞானமுண்டு. ஐரோப்பியரின் சாஸ்திரங்களில் பலவற்றைத் தமிழில் எழுதியிருக்கிறார். சில சமயங்களில் கவிதைகூட எழுதுவார்......

"இவர் இந்தத் தெருவில் வார்த்தை சொன்னால் மூன்றாவது தெருவுக்குக் கேட்கும்... ஸாயங்காலம் திண்ணையில் சிநேகிதர்களுடன் பேசிக்கொண்டு அதாவது கர்ஜனை செய்து கொண்டிருப்பார்...இவருடைய வீட்டுத் திண்ணைக்கு அக்கம் பக்கத்தார் 'இடிப் பள்ளிக்கூடம்' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்......மேற்படி வாத்தியாருக்கும் எனக்கும் சிநேகமுண்டு. நானும் அடிக்கடி இடிப்பள்ளிக்கூடத்துக்குப் போய்ப் பேச்சுக் கேட்கும் வழக்கமுண்டு."

கலவை சங்கர செட்டியார் என்பவர் தனவந்தர், தயாளு. அரவிந்தர் வந்த சமயம் தன் வீட்டு மாடியில் தங்கியிருக்க இடமளித்தவர். "சுதேசி"த்தலைவர்களிடம்அன்புகொண்டவர்.

*1911-12*-ல் பாரதி, வ. வே. சு. அய்யர், அரவிந்தர் முதலியவர்களை வெளியேற்ற ஒரு முயற்சி நடந்தது. ஐந்து கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகளிடம் கையெழுத்து வாங்கிப் போலீஸாரிடம் பதிவு செய்து கொண்டாலன்றி, புதுவையிலுள்ள பிரஞ்சுப் பிரஜையல்லாதவர்கள் வெளியேறிவிடவேண்டும் என்று ஒரு சட்டம் வந்தது. விஷயமறிந்த சங்கரசெட்டியார் அன்று பகல் மூன்று மணிக்குள்ளாக ஐந்து மாஜிஸ்ட்ரேட்டுகளின் கையெழுத்தை வாங்கிக் கொடுத்துவிட்டார்.

ஆறுமுகம் செட்டியார் என்று மற்றொரு நண்பர் செல்வாக்குள்ள வர்த்தகர். மகா சாது. அரசியலில் அப்பாவி. மெலிந்த குரல். இவர் தம் வீட்டில் சீமை வெள்ளை எலிகளை வளர்த்தார். இதனால் இவரை "எலிக் குஞ்சு செட்டியார்" என்று பாரதி தம் கட்டுரைகளில் அழைக்கிறார்.

வ. ரா. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து பல தந்திரமான வழிகளில் பணம் தருவிக்க ஆறுமுகம் செட்டியாரின் பெயரைத்தான்—அவர் அறிந்தும் அறியாமலும்—உபயோகித்துக் கொண்டார்.

மணியாச்சி ஜங்ஷனில் ஆஷ்துரை சுட்டுக் கொல்லப்பட்டதில் சம்பந்தப்பட்டவரெனக் கருதப்பட்டவரும், திடீரெனத் தலைமறைவாகி இருந்த இடமே தெரியாமல் மறைந்தவருமான மாடசாமிப் பிள்ளை என்பவர் புதுவை வந்து ஆறுமுகம் செட்டியார் வீட்டின் மாடியில் யாருமறியாமல் தங்கியிருந்தாராம். போலீஸார் தம் வீட்டைச் சோதனையிட வந்து, மாடியைப் பார்க்க விரும்பிய போது, முன்னால் அடுக்கியிருந்த நெல் மூட்டைகளைக் காட்டி அவர்களைத் திருப்பியனுப்பினார் செட்டியார்.

ஒருநாள் பாரதியார் வீட்டில் சிறு கூட்டம். நடுவில் தீ வளர்த்து, தீயைச் சுற்றி வேத மந்திரங்களை ஜபித்துக் கொண்டிருந்தனர். தீயைச் சுற்றி வ. வே. சு. அய்யர், மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரி, பிரம்மராய அய்யர், குவளைக் கண்ணன், நாகசாமி அய்யர், கோவிந்தராஜுலு நாயுடு என்ற நண்பர் முதலியோர் வீற்றிருந்தனர். ஒரு பலகையில் பாரதி அமர்ந்திருந்தார்; மற்றொரு பலகையில் கனகலிங்கம். கனகலிங்கத்துக்கு பிரம்மோபதேசம் செய்து, பூணூல் அணிவித்தார் பாரதி. "நீ இன்று முதல் பிராமணன். யார் உனக்குப் பூணூல் போட்டுவித்தது என்றால், அதட்டியே 'பாரதி' என்று சொல்" என்றும் உபதேசித்தார்.

மூன்று பிரிவினருக்குப் பூணூல் இருப்பதால், மற்ற இரு பிரிவுகளுக்கும் பூணூல் போட்டுச் சமத்துவம் உண்டாக்கலாம் என்று அக்காலத்தில் ஒரு நம்பிக்கை நிலவியது. பாரதி இதை யொட்டியே கனகலிங்கத்தைப் பிராமணன் ஆக்கியிருக்க வேண்டும்.

கனகலிங்கம் "என் குருநாதர் பாரதி" என்ற சிறந்த நூலை எழுதியிருக்கிறார். அவரும் ஆறுமுகம்செட்டியாரும் இன்றும் ஜீவிதமாக இருக்கின்றனர்.



70. **"பிரம்ம ராய அய்யர்"** என்று பாரதி அழைத்த புரொபஸர் சுப்பிரமணிய அய்யர். இவரைப் பற்றிப் பல பாரதி கட்டுரைகளில் குறிப்புகள் வருகின்றன.



71. **தயாளு:** செல்வந்தரும் புதுவை தேச பக்தர்களின் உற்ற நண்பரும், அவர்களை ஆபத்தில் காத்தவருமான கலவை சங்கர செட்டியார்.

72. **சீடர்:** பாரதியால் பூணூல் அணி விக்கப் பெற்ற ஹரிஜனச் சீடர் ரா. கனகலிங்கம். (1953-ல் எடுத்த படம்.)





73. **உதவியளித்த செல்வந்தர்:** பாரதி, வ. வே. ஸு. அய்யர், வ. ரா., ஆஷ் கொலை வழக்கு எதிரி மாடசாமி முதலியோருக்கு உதவியாயிருந்த செல்வந்தர் ஆறுமுகம் செட்டியார். (1939-ல் எடுத்த படம்.) மாடசாமியைத் தம் வீட்டில் ஒன்றரை வருஷம் பரம ரகசியமாய் வைத்துக் காத்ததாக இவர் கூறுகிறார்.



74. **கவியின் மனதைக் கவர்ந்த மடு:** பாரதியும் குவளைக் கண்ணனும் தினந்தோறும் அதிகாலையில் ஸ்நானம் செய்யச் சென்றுவந்த தியகராஜ பிள்ளை மடு. இதற்குப் போகும் வழியில் பாடப்பட்டதே பாரதமாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்.

# திருப்பள்ளி யெழுச்சி மடு

ஒரு நாள் குவளைக் கண்ணன் பாரதியிடம் வந்து, "இந்த ஊரில் தியாகராஜ பிள்ளை மடு என்று ஒரு நல்ல மடு இருக்கிறது. ஸ்நானம் செய்துவரச் சிறந்தது. ஆனால் கொஞ்சதூரத்தில் இருக்கிறது. தாங்கள் தினம் அங்கு ஸ்நானத்துக்கு வரமுடியுமா?" என்று கேட்டார்.

பாரதியார் ஆவலுடன் சம்மதித்தார்.

"ஊருக்கு மேற்கே இரண்டு மைலில் இருக்கிறது. காலை 4 மணிக்கு எழுந்து சென்றால் தான் நிம்மதியாகக் குளிக்கலாம்" என்றார் குவளை. "நீ எப்பொழுது வந்து எழுப்பினாலும் வருகிறேன்" என்றார் பாரதி.

மறுநாள், குறித்தபடி காலை 4 மணிக்குக் குவளை பாரதி வீட்டுக் கதவைத் தட்டினார். "யார்?" என்ற அதிகாரமான கேள்வியுடன் பாரதி வெளியே வந்தார். இருவரும் மடுவை நோக்கி நடந்தனர். ரஸ்தாவின் இருமருங்கிலும் உள்ள நஞ்சை புஞ்சை வயல்களும் தென்னந் தோப்புகளும் அதிகாலையின் மந்த மாருதமும் புட்களின் குரலொலிகளும் பாரதியைப் பரவசப் படுத்தின. மடுவில் குளித்து மகிழ்ந்து திரும்பினர்.

மறுநாளும் அப்படியே. மூன்றும் நாள் குவளை வந்து கூப்பிடவில்லை. அவரைத் தேடிக் கொண்டு பாரதி போய் விட்டார். பாரதி கதவைத் தட்டியதும் குவளையின் தாயார் கதவைத் திறந்து உள்ளே அழைத்துச் சென்றாள்.

இவர்தான் பாரதி யென்று குவளை அறிமுகம் செய்துவைக்கவே, அந்த அம்மாள், "அவர் நன்றாகப் பாடுவார் என்கிறாயே. சுப்பிரபாதம் பாடச் சொல்லு" என்றாள்.

"சுப்பிரபாதம் என்றால் என்ன?" என்று பாரதி கேட்டார்.

"சுப்பிரபாதம் என்றால் என்ன என்று கேட்கிறாரே, இவ்வளவுதானா உன் பாரதி!" என்று நகைத்தாள் கிழவி.

வடமொழியில் சுப்பிரபாதம் என்றால் திருப்பள்ளி யெழுச்சி என்றர்த்தம். பாரதியும் குவளையும் மடுவுக்குப் போகும் வழியில் சுப்பிரபாதம் என்றால் என்ன வென்பதை பாரதி கேட்டறிந்தார். "இவ்வளவுதானே!" என்று சொல்லி, சில தினங்களில் "பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி" என்ற பாடலைக் கவனம் செய்து, குவளையின் தாயாரிடம் பாடியும் காட்டினார் கவிஞர்.

"காலைப் பொழுது" என்ற தனிப் பாடலில், காலையில் மடுவுக்குப்போய் வந்த போது பாரதி கண்ட காட்சிகள் வர்ணனையாக அமைந்துள்ளன.

தியாகராஜ பிள்ளை மடுவின் படிக்கரையில் அடர்ந்த மரங்களின் நிழலில் ஒரு பங்களா இருந்தது. இந்தச் சுகமான இடத்தில் பாரதி தம் நண்பர்களுக்கு ஒரு விருந்து நடத்தினார்.

தியாகராஜ பிள்ளை மடுவுக்குத்தினம் போய் வரத் தலைப்பட்ட பாரதியார், ஒருநாள் மடுவுக்குப் போகும்போது குவளைக் கண்ணனிடம், "கண்ணா, ஆழ்வார்கள் எத்தனை பேர்?" என்று கேட்டார்.

"பன்னிரண்டு பேர்", என்று பதிலளித்தார் குவளைக் கண்ணன்.

"அவர்கள் பாடியுள்ள பாடல்கள் மொத்தம் எவ்வளவு?"

"நாலாயிரம். உண்மையில் நாலாயிரத்துக்கும் கொஞ்சம் குறைவு."

"இவ்வளவுதானா! பார், நான் ஒருவனே ஆறாயிரம் பாடல்கள் பாடுகிறேன். அவர்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் பாடினால், நான் தனியாக 'பாரதி ஆறாயிரம்' பாடுகிறேன்!" என்றார் பாரதி.

அன்று முதல் 40 நாள் மௌன விரத மிருந்து பல பாடல்களை இயற்றிவரலானார். "எனக்கு முன்னே சித்தர் பலர் இருந்தாரப்பா! யானும் வந்தேன் ஒரு சித்தன் இந்த நாட்டினிலே" என்று கடவுள் வாழ்த்து, பராசக்தி துதியுடன் முதற் காண்டம் ஆரம்பிக்கும் இந்தப் பாடல்களில், மரணத்தை வெல்லும் வழி, சினத்தின் கேடு, பொறுமையின் பெருமை, கடவுள் எங்கே இருக்கிறார்?, குருக்கள் துதி, குவளைக் கண்ணன் புகழ், குரு தரிசனம், உபதேசம், பெண் விடுதலை, காதலின் புகழ், ஸர்வமத ஸமரஸம் முதலிய பற்பல விஷயங்களைப் பற்றி பாரதி பாடியிருக்கிறார்.

"பாரதி ஆறாயிர"மாக விரிய வேண்டிய இந்நூல் முற்றுப் பெறாமல் 66 பாடல்களுடன் நிற்கிறது. பாரதி பிரசுராலயத்தினர் இதனை வெளியிட்டபோது, காரணப் பெயராக, இதற்கு "பாரதி அறுபத்தாறு" என்ற பெயரை ஈந்தனர்.

அறுபத்தாறே பாடல்கள்தான் இருக்கின்றன வென்றாலும், பாரதியின் முதிர்ந்த அனுபவ ஞானம் முழுதும் இப் பாடல்களில் கனி ரஸமெனப் பிழிந்து தரப்பெற்றுள்ளன.

# குயில் பாட்டுத் தோப்பு

"வெல்லச்சு" கிருஷ்ணசாமி செட்டியாருக்குப் புதுவையை யடுத்த முத்தியாலுப் பேட்டைக்குப் பக்கத்தில் ஒரு அழகான தோப்பு இருந்தது. அந்தத் தோப்பில் பாரதியார் மணிக்கணக்காய்ச் சஞ்சரித்திருப்பார். இந்தத் தோப்பே பாரதியின் "குயில் பாட்"டிற்குக் காட்சி ஸ்தலம். தமிழ் உள்ளளவும் சாகா வரம் பெற்றுவிட்டது இந்தத்தோப்பு!

ஒரு சில மனிதர்களின் முகத்தையே திரும்பத் திரும்பப் பார்க்க நேர்ந்தால் சலித்துப் போவது மனிதரின் இயற்கை. கவிகளுக்கோ கேட்க வேண்டாம். எப்போதும் புதுமை நாடிய பாரதியார் புதுவையிலிருந்த காலத்தில், வீட்டில் இருந்த நேரம் மிகக் குறைவு; நண்பர்களுடன் அளவளாவுதல்கூட அவருக்கு எளிதில் சலித்துவிடும். கவிதா சிருஷ்டி வெறி வந்து விட்டாலோ, அவருக்கு எங்கும் இருக்க இருப்புக் கொள்ளாது.

தோட்டங்களின் பச்சைப் பசேலென்ற காட்சிகளிலும், பட்சிகளின் கீதத்திலும் 'ஜிவ்'வென்று வானில் எழுந்து செல்லும் சிட்டுக் குருவிகளின் பறப்புத் திறமையிலும், 'வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழக்கும்' கடலின் பெருமூச்சிலும், இளவெயிலின் மாட்சியிலும், அந்திவேளை அஸ்தமன வர்ண ஜாலத்திலும் பாரதி தம் துயர்களையெல்லாம் மறந்து போவார். "எத்தனை கோடி இன்பம் வைத்தாய், எங்கள் இறைவா! இறைவா!" என்று மனம் குளிர்ந்து பாடுவார்.

கவிதை பிறக்கும் சமயம் அவர் பிரசவ வேதனைப் படுவார். ஸரிக-க-காமா என்று வாய்க்குள்ளேயே பாடுவார். புதிய பாட்டுக்கு ஸ்வரம் போட்டுக்கொண்டிருக்கிறாரென்று பக்கத்திலிருப்பவர்கள் புரிந்து கொள்ள வேண்டும். இத்தகைய சந்தர்ப்பங்களில் தாம் படும் வேதனையைக் கண்டவர் பார்த்து நகைக்க அவர் விரும்பமாட்டார். உற்ற நண்பர் எவரையேனும் கூட்டிக் கொண்டு கிருஷ்ணசாமி செட்டியார் தோப்புக்கோ, வில்லியனூரில் உள்ளதோர் தோட்டத்துக்கோ போய்விடுவார்.

இயற்கையழகில் தம் நினைவை மறந்துவிடுவார். மரத்தை வெறித்துப் பார்ப்பார்; மடுவை உற்று நோக்குவார். வானத்தை நிமிர்ந்து, மார்பை முன்னே தள்ளி, காலால் தாளம் போட்ட வண்ணம் புதிய பாட்டின் ஸ்வரங்களை உரக்கப் பாடுவார். பாட்டு சரியாக வந்தால் போச்சு, வராவிட்டால் பூமிக்கு பலமாக ஓர் உதை! மௌனம். "சொல் ஆழி வெண் சங்கே!" என்ற கூப்பாடு அல்லது "மத்தகஜம் என வளர்த்தாய்!" என்ற தாயுமானவர் கண்ணி. மீண்டும் ஸ்வரங்களைப் பாடுதல். முடிவில் பாடல் வெற்றிகரமாய் வெளிவரும். ஆனந்தம், பேரானந்தம்! பாரதியின் மெலிந்த உடலில் இருக்கும் அத்தனை உயிரையும் பிழிந்தெடுத்து, அமிர்த வெள்ளமாய்க் கொட்டுவாள் கவிதா தேவி!

"செந்தமிழ்த்தென் புதுவையெனுந் திருநகரின் மேற்கே, சிறுதொலைவில் மேவுமொரு மாஞ்சோலை" என்று குயில்பாட்டுத் துவக்கத்தில் வர்ணிக்கப்படும் முத்தியாலுப் பேட்டைத் தோப்பு பாரதியாருக்கு ஆனந்தமான புகலிடமாக இருந்தது.

நள வருஷம் கார்த்திகை மாதம் 8-ந் தேதி (*22-11-1916*) புதுவையில் கடுமையான புயல் அடித்தது. "திக்குக்கள் எட்டும் சிதறி" என்ற பாட்டில் அன்றைய நிலையை பாரதி வர்ணித்திருக்கிறார். அன்று தெய்வம் பாரதி குடும்பத்தைக் காத்த விவரமும், புருஷன் மனைவி சம்பாஷணையாக, "காற்றடிக்குது கடல் குமுறுது" என்ற பாட்டில் வெளி வந்துள்ளது.

அன்றைய புயலில், முத்தியாலுப் பேட்டையிலுள்ள அத்தனை தோப்புகளும் நாற்றினைப் போல் சிதறி வீழ்ந்திருக்க, கிருஷ்ணசாமி செட்டியாரின் தென்னந் தோப்பு ஒன்று மட்டும் சேதமின்றி நின்றது!

குயில் பாட்டு மாஞ்சோலை நிழல் நிறைந்தது. என்ன வெயிலடித்தாலும் உறைக்காத அதன் குளிர் தரு நிழலிலிருந்து வெளியே பார்த்தால், கண்ணுக் கெட்டும் தூரம் வரை பசுமையான வயல் தெரியும், அந்த வயல் வெளிகள் நடுவே ஒரு தென்னந் தோப்பு தன்னந் தனியாய் நிற்கும். சுற்றியிருந்த மரங்களெல்லாம் வீழ்ந்து விட இத்தோப்பு மட்டும் எஞ்சி நின்ற அதிசயத்தை, "பிழைத்த தென்னந் தோப்பு" என்ற பாடலில் பாரதி பாடியிருக்கிறார்:

> **"சிறிய திட்டையிலிலே—உளதோர்**
> **தென்னஞ் சிறு தோப்பு**
>
> **வறிய வனுடைமை—அதனை**
> **வாயு பொடிக்கவில்லை."**

சிறு தொலையில் மேவு மொரு

-குயில் பாட்டு.

75. **குயில் பாட்டுத் தோப்பு:** புதுவை முத்தியாலுப் பேட்டைக்கருகே உள்ள நிழல் நிறைந்ததொரு மாந்தோப்பு. பாரதி அடிக்கடி பகல் பொழுதைக் கழித்த இடம். குயில் பாட்டில் குறிக்கப் பெறும் தோப்பு இதுவே. தோப்புக்கப்பால் தெரிவதுதான் "**பிழைத்த தென்னந் தோப்பு.**"

76. **தோப்புக்கு வெளியே:** அழகான கழனிகள் நிறைந்த இக்காட்சி கவியின் உள்ளத்தைக் கவர்ந்தது.



77. **புதுவைக் கடற்கரை :** சென்னைக் கடற்கரையைவிட மிகச் சிறியதாயினும், புதுவைக் கடற்கரையும் மிக வசீகரமானதே. இப்படம், தற்சமயம் உடைந்து மூடப்பட்டுள்ள இரும்புக் கடற் பாலத்திலிருந்து எடுத்தது.

78. தேசமுத்துமாரி கோயில், புதுவை.

79. பாரதியால் பாடல் பெற்ற புதுவை மணக்குள விநாயகர் கோயில்.



# புதுவைக் கடற்கரை

புதுவைக் கடற்கரை சென்னைக் கடற்கரை போல் விரிந்ததல்ல. என்றாலும் அச்சிறு கடற்கரையும் அழகானதே. சென்னையில் இல்லாத ஒரு விசேஷம் புதுச்சேரியில் இருக்கிறது. கடலுக்குள்ளே இரண்டு பர்லாங்கு தூரம் உள்ளே செல்லும் இரும்பு வாராவதி யொன்று புதுவையில் உண்டு. கப்பல்கள் வந்து தங்க புதுவையில் துறைமுகம் இல்லை. சில மைலுக்கப்பால் நிற்கும் கப்பல்களிலிருந்து மக்களையும் சாமான்களையும் இறக்கி வரும் படகுகள் 'பியர்' என்ற இந்த இரும்பு வாராவதியில் கொண்டு வந்து இறக்கிக் கரை சேர்க்கும். இந்தப் பாலம் கடலாலும் புயலாலும் ஜீரணிக்கப்பட்டு, இப்போது முன்பு இருந்ததில் மூன்றில் ஒரு பங்கு நீளமே இருக்கிறது. இதற்குத் தெற்கே கடலில் பெரியதொரு பாலம் கட்ட இப்போது ஏற்பாடாகியுள்ளது.

முழுதாக இருந்த இரும்புப் பாலம் நகர மக்கள் மாலை வேளையில் காற்று வாங்குவதற்கும் உலாவுவதற்கும் பெஞ்சுகளில் அமர்ந்து பொழுது போக்கவும் வசதியாக இருந்தது. பாரதியும் நண்பர்களும் இந்தப் பாலத்தில் உலவுவதுண்டு. கடற் பாலத்திலிருந்து பார்த்தால் புதுவை நகரம் அழகான காட்சியாய்த் தெரியும்,

பாலத்துக்குப் பக்கத்தில் உள்ள மணல் கரையிலும் பாரதியும் நண்பர்களும் பொழுது போக்குவார்கள். "மழை" என்ற கட்டுரையிலும், "கடற்பாலத்தில் வர்ணாசிரம சபை" என்ற கட்டுரையிலும் இத்தகைய நிகழ்ச்சிகள் பாரதியால் விவரிக்கப்படுகின்றன.

கடலில் ஸ்நானம் செய்வதிலும் பாரதிக்கும் பிரியம். ஞாயிறு தோறும் பாரதி, வ. வே. சு. அய்யர், ஸ்ரீநிவாஸாச்சாரியார் முதலியோர் குழந்தைகளுடன் காலையில் கடலில் ஸ்நானம் செய்வார்கள். பாரதிக்கு நீந்தத் தெரியாது. அய்யர் நன்றாக நீந்துவார்.

ஒரு நாள் பாரதியார் தம் குழந்தைகளைக் கடலில் ஸ்நானம் செய்வித்துக் கொண்டிருந்தார். அலைகளைக் கண்டு குழந்தைகள் கரை நோக்கி ஓடின; பாரதி அவர்களைப் பின் தொடர்ந்து ஓடிப் பிடித்து நீருக்கு அழைத்துச் சென்றார். இப்படிச் சிறிது நேரம் நடந்ததும், தங்களைச் சுற்றி வேடிக்கை பார்த்துக் கொண்டு ஒரு பெரிய கூட்டத்தையும், ஏதோ அதட்டிக் கொண்டு முன்னே வரும் ஒரு போலீஸ்காரனையும் பாரதி கண்டார். போலீஸ்காரன் பாரதியை அதட்டி மிரட்டினான்! நடந்ததென்ன வென்றால், தாடி மீசையுடனிருந்த பாரதி குழந்தைகளைத் துரத்திப் பிடித்ததைப் பார்த்த ஒருவன் யாரோ ஒரு பேர்வழி குழந்தைகளைப் பிடித்துச் சமுத்திரத்தில் மூழ்கடித்துக் கொல்லப் பார்ப்பதாக நினைத்துவிட்டான். அத்துடனில்லாமல், சமீபத்திலிருந்த ஒரு போலீஸ்காரனிடம் இத்தகவலைத் தெரிவித்து, அவனை அங்கே அழைத்து வந்துவிட்டான்!

உண்மை தெரிந்ததும் போலீஸ்காரன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு போனான்.

* * *

மற்றவர்களெல்லாம் காலையோ மாலையோ மட்டும் வந்து கடற்கரையின்பத்தை நுகர்வார்கள். ஆனால் பாரதிக்கு நேர நியதி கிடையாது. உச்சிப் பகலில் வருவார், நள்ளிரவிலும் வருவார். பல சமயங்களில் தூக்கம் வராமலோ, கற்பனா வெறியிலோ கடற்கரைக்கு வந்தவர், இரவெல்லாம் அங்கேயே தங்கிவிடுவார். வறுமையை மறக்க சாதனமாக உபயோகப்பட்ட லாஹிரி போதையும் சேர்ந்து மெய்மறந்து ஆடிப்பாடி பிறருக்கு இம்சையின்றிக் கவிதைக் களிப்பில் மூழ்கியிருக்கவும் கடற்கரை பயன்பட்டது.

மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் மூத்த புதல்வி யதுகிரி அம்மாள் தமது "பாரதி நினைவுகள்" நூலில் இத்தகையதோர் சம்பவத்தை விவரித்துள்ளார். ஒரு நாள், அதிகாலையில். சிறுமி யதுகிரியும் அவளது தந்தையும் தங்கையும் கடற்கரையில் உலவி வருகின்றனர். அப்போது—"எங்கிருந்தோ பாட்டுச் சத்தம் கேட்டது. உதய ராகத்திலே உள்ளத்தை உருக்கும்படி மதுரமாக இருந்தது அந்தப் பாட்டு. சிறிது உற்றுக் கேட்டதில் அது திருவாய் மொழிப் பாட்டு என்பதும் புலனாயிற்று......மூவரும் பாட்டின் ஓசை வந்த திக்கை நோக்கிச் சென்றோம். அங்கே ஒரு கட்டுமரத்தின் மேல் பாரதியார் அமர்ந்திருந்தார். கறுப்புச் சொக்காய். கச்சை போட்ட வேஷ்டி. கூப்பிய கரங்கள். கடலில் உதயமாகும் பால சூரியனை நோக்கியபடி பாடிக் கொண்டிருந்தார் அவர்."

இரவு அங்கே வந்த பாரதியார், விடியற் காலை வரையிலும் கடற்கரையிலேயே இருந்திருக்கிறார்! கேட்டால், "கற்பனா உலகத்தில் பறந்துகொண்டிருந்தேன்!" என்கிறார்! என்ன தான் வர கவியாக இருந்தாலும், வேளா வேளைக்கு வீட்டுக்கு வராத புருஷர் மனைவி மக்களுக்கு எவ்வளவு கவலையை அளித்திருக்க வேண்டும்!

# சாமியார்கள் நட்பு

"வேதபுரத்துக்கு வடக்கே இரண்டு கல் தூரத்தில் சித்தாந்தசாமி கோவில் என்றொரு கோவில் இருக்கிறது. அதற்கருகே ஒரு மடம். அந்த மடத்தில் பல வருஷங்களுக்கு முன் சித்தாந்தசாமி என்ற பரதேசி ஒருவர் இருந்தார். அவருடைய சமாதியிலேதான் அந்தக் கோயில் கட்டியிருக்கிறது.

"கோயில் மூலஸ்தானத்திற்கெதிரேயுள்ள மண்டபத்தில் நாளது சித்திரை மாதம் பதினோராந் தேதி திங்கட்கிழமை காலை 9 மணி நேரத்துக்கு முன்னதாகவே நானும் என்னுடன் நாராயணசாமி என்றொரு பிராமணப் பிள்ளையும் வந்து உட்கார்ந்தோம். பகல் முழுதும் ஊருக்கு வெளியே தனியிடத்தில் போயிருந்து உல்லாசமாகப் பொழுது கழிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வந்தோம். எப்போதும் வழக்கம் எப்படியென்றால், மடுவில் ஸ்நானம் செய்துவிட்டு மாந்தோப்புகளில் பொழுது போக்குவோம். (நள வருஷம்) புயற் காற்றடித்த பிறகு மாந்தோப்புகளில் உட்கார நிழல் கிடையாது. ஆதலால் மேற்படி கோயில் மண்டபத்துக்கு வந்து சேர்ந்தோம்."

சித்தாந்தசாமி கோயிலையும் மடத்தையும் பற்றிய இந்தக் குறிப்பு "பிங்கள வருஷம்" என்ற கட்டுரையில் ("கதைக் கொத்து" நூலில் உள்ளது) இருக்கிறது.

இதே சித்தாந்தசாமி கோயிலைப் பற்றி ஒரு சிறு தனிப்பாடலும் பாரதி பாடியிருக்கிறார். அதில் இரண்டு பாக்கள்:

**"சித்தாந்தச் சாமி திருக்கோயில் வாயிலில்**
**தீப வொளி யுண்டாம்—பெண்ணே**
**முத்தாந்த வீதி முழுவதையுங் காட்டிட**
**மூண்ட திருச் சுடராம்—பெண்ணே."**

**"உள்ளத் தழுக்கும் உடலிற் குறைகளும்**
**ஓட்ட வருஞ் சுடராம்—பெண்ணே**
**கள்ளத் தனங்கள் அனைத்தும் வெளிப்படக்**
**காட்ட வருஞ் சுடராம்—பெண்ணே."**

புதுவையில் பாரதிக்குப் பல பண்டாரங்களும் சாமியார்களும் சிநேகம். குள்ளச்சாமி என்ற மாங்கொட்டைச்சாமி, கோவிந்தசாமி, யாழ்ப்பாணத்துச்சாமி என்ற பரதேசிகள் ஒவ்வொருவரிடமும் ஒரு உயர்குணத்தை பாரதி கண்டார். இவர்களைப் பற்றி "பாரதி அறுபத்தா"றில் பாடியுமிருக்கிறார்.

கோவிந்தசாமி என்ற பண்டாரம் பாரதிக்கு இறந்துபோன அவருடைய தந்தையின் உருவம் தெரியும்படி காட்டினான் என்று ஒரு பாட்டில் தெரிவித்திருக்கிறார்.

குள்ளச்சாமி "மண்போலே சுவர்போலே வாழ்தல் வேண்டும்" என்று குறிப்பால் உணர்த்தியதாய்க் கூறுகிறார். இந்தச் சாமியார் தமக்குத் தொழில் வண்ணான் தொழில், உள்ளத்தில் உள்ள அழுக்குகளை வெளுப்பதாகும் என்பாராம்.

ஒரு நாள், பழங் கந்தை அழுக்கு மூட்டை ஒன்றை வளமுறவே கட்டித் தன் முதுகில் சுமந்து வந்த குள்ளச் சாமியை பாரதி, "இது பித்தர் செயலன்றோ! இதென்ன செய்கை!" என்று வினவ, குள்ளச்சாமி, புன்னகை பூத்து, "புறத்தே நான் சுமக்கின்றேன். அகத்தினுள்ளே இன்னதொரு பழங் குப்பை சுமக்கிறாய் நீ!" என்று பதிலளித்தாராம். "மனத்திலுள்ளே பழம் பொய்கள் வளர்ப்பதாலே இன்னலுற்று மாந்தரெல்லாம் மடிவார் வீணே. இருதயத்தில் விடுதலையை இசைத்தல் வேண்டும்" என்று கவிஞர் இதினின்று உணர்ந்து பறையறைவிக்கிறார். பிறர் கண்ணுக்குப் புலப்படாத பெரு விஷயங்களையும், பிறர் மதியாத, ஒதுக்கித் தள்ளும் சாதாரண அனுபவங்களிலிருந்து தேர்ந்து கொள்ளும் அதிசய சக்தி படைத்தவர் பாரதி.

தென் பாண்டி நாட்டில் நெட்டையபுரம் என்ற ஊரில் ஜமீன்தார் ஒருவர் இருப்பதாகவும் அவரிடம் 'கொட்டையசாமி' என்ற யோகி இருந்ததாகவும் "கொட்டையசாமி" என்ற கட்டுரையில் பாரதி சொல்கிறார். நெட்டையபுரம் என்பது எட்டயபுரத்திற்கு பாரதி தந்துள்ள மாற்றுப் பெயர் என்று ஊகிப்பது எளிது. இக் கட்டுரையிலிருந்து எட்டயபுரத்திலேயே பாரதிக்கு சாமியார்கள் பழக்கம் இருந்ததெனத் தெரிகிறது.

சாமியார்கள் சகவாசத்தால் பாரதி வேதாந்த உண்மைகளை அறிந்தாரென்றாலும், சாமியார்களுக்குள்ள சில துர்வழக்கங்களும் பாரதிக்குப் பிடித்துக்கொண்டன. எட்டயபுர ஜமீன்தார் கற்றுக்கொடுத்த அபின் பழக்கம் புதுவைச் சாமியார்களால் மீண்டும் வலிவாக அவரைப் பிடித்துக்கொள்ளும் துர்பாக்கியமும் ஏற்பட்டது. வறுமைத் துயரை மறந்து கவிதா லோகத்தில் சஞ்சரிக்க அபின்போதை பயன்பட்டது; ஆனால், ஏற்கனவே பூஞ்சையான உடலைப் பாழாக்கி, இல்வாழ்க்கையின் பொறுப்புக்களை பாரதி சிறிதும் கவனிக்காமல் போகும்படியும் அது செய்தது.



80. **சித்தாந்தசாமி கோயில் மடம்:** பாரதியால் பாடப் பெற்ற அமைதியானதோர் மடம். ஊருக்கு வெளியே உள்ள இம் மடத்திலும் பாரதி பகல் பொழுதைக் கழிப்பதுண்டு.

எவன் நல்லதும் கெட்டதும் வருமிடத்தே எதனிலும் வாழ்ச்சி யற்றவனாய் உவப்புறுவதும் பகைப்பது மின்றி யிருப்பானோ, அவனுடைய அறிவே நிலை கொண்டது. (57)

ஆமை தன் அவயவங்களை இழுத்துக் கொள்வது போல், எப் புறத்தும் விஷய பதார்த்தங்களினின்று புலன்களை யொருவன் மீட்க வல்லானாயின், அவனறிவே நிலை கொண்டது. (58)

தம்மைக் கவராத ஜீவனிட மிருந்து விஷயங்கள் தாமே விலகிக் கொள்ளுகின்றன. எனினும் அவற்றிலுள்ள சுவையை இவன் மறப்பதில்லை. பரம் பொருளைக் காண்பானாயின், அச் சுவையுந் தீர்ந்து விடும். (59)

குந்தியின் மகனே, (அறிவு) முயற்சியுடைய ~~[illegible]~~ புருஷனிடத்திலே கூட இந்திரியங்கள் வரம்பு கடந்து செல்லும் போது தம் முடன் மனத்தையும் வலிய வாரிச் செல்கின்றன. (60)

அவற்றை யெல்லாம் நன்கு அடக்கி, யோகத்தில் அமர்ந்தவனாய், என்னையே பரமாகக் கொண்டு, புலன்களை வசம் பண்ணி வைத்திருப்பவன் எவனோ, அவனுடைய அறிவே நிலை கொண்டது. (61)

மனிதன் விஷயங்களைக் கருதும் போது அவற்றில் பற்றுதலுண்டாகிறது. பற்றுதலால் விருப்ப முண்டாகிறது. விருப்பத்தால் சினம் பிறக்கிறது. (62)

சினத்தால் ~~மதி~~ மயக்கம்; ~~[illegible]~~ மயக்கத்தால் நினைவுத் தவறுதல்; நினைவுத் தவறுதலால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் அழிகிறான். (63)

விருப்பும் பகைமையு மின்றித், தனக்கு வசப் பட்ட புலன்களுடனே ~~[illegible]~~ ~~[illegible]~~ விஷயங்களிலே ஊடாடுவோனாய்த் தன் வசத்தே தான் உட் பட்ட மனிதன் ஆறுதல் அடைகிறான். (64)

சாந்தி நிலையில் மனிதனுக்கு எல்லாத் துன்பங்களும் அழிகின்றன. சித்தம் சாந்தி பெற்ற பின் ஒருவனுடைய புத்தி விரைவிலே நிலைப்படுகிறது. (65)

யோக மில்லாதவனுக்கு புத்தி யில்லை. யோக மில்லாதவனுக்கு மனோபாவனை யில்லை. மனோபாவனை யில்லாதவனுக்கு சாந்தி யில்லை. சாந்தியில்லாதவனுக்கு இன்ப மேது? (66)

இந்திரியங்கள் அலைகையால் ஒருவனுடைய மனமும் அவற்றைப் பின்பற்றிச் செல்லுமாயின், அம் மனம், கடலில் தோணியைக் காற்று மோதுவது போல், அறிவை மோதுகிறது. (67)

ஆதலால், பெருந் தோளாய், யாங்கணும் விஷயங்களினின்றும் இந்திரியங்களைக் கட்ட வல்லான் எவனோ, அவனறிவே நிலை கொண்டது. (68)

எல்லா உயிர்களுக்கும் இரவாகிய நேரத்தில், (தன்னைக் கட்டிய) முனி விழித்திருக்கிறான். மற்ற உயிர்கள் விழித்திருக்கும் நேர மதுவோ அதுவே முனிக் கிரவு. (69)

81. **கீதை மொழிபெயர்ப்பு:** பகவத் கீதைக்கு பாரதி செய்த மொழிபெயர்ப்பின் ஒரு பக்கம். "கீதை மொழிபெயர்ப்பு", "கண்ணன் பாட்டு", "குயில்", "பாஞ்சாலி சபதம்" ஆகிய நான்கு முக்கிய நூல்களும் 1912-ம் ஆண்டில் உருப்பெற்றன.

# உழைப்பு நிறைந்த வருஷம்

புதுச்சேரிக்கு வந்த இரண்டாண்டுகளில் பாரதியாரின் பத்திரிகை முயற்சிகளெல்லாம் நின்றுபோயின. அதன்பின், புதுவையில் இருந்த காலம் வரை, அவர் வேறு பத்திரிகைகள் ஆரம்பிக்க முயலவேயில்லை.

1910-ம் வருஷத்துக்குப் பிறகு பாரதி பத்திரிகை விவகாரங்களை மறந்து, புத்தகமாக வெளியாகக்கூடிய விஷயங்களை எழுதுவதில் முனைந்தார். 1912-ம் வருஷம் அவருக்கு முக்கியமான காலம். அந்த ஒரே ஆண்டில், புகழ் பெற்ற பல நூல்களை அவர் எழுதி முடித்தார்.

"பகவத் கீதை தமிழ் மொழி பெயர்ப்பு", "கண்ணன் பாட்டு", "குயில்", "பாஞ்சாலி சபதம்" முதலிய நான்கு பெரிய நூல்களும் 1912-ம் ஆண்டிலேயே உருப்பெற்றன,

1912-ல் எழுதப்பெற்ற "கண்ணன் பாட்டு" 1918-ல்தான் வெளியாயிற்று. சென்னை சிந்தாதிரிப்பேட்டையிலிருந்த பரலி சு. நெல்லையப்பர் அதை வெளியிட்டார். "பாஞ்சாலி சபத"த்தின் முதல் பாகம் மட்டும் 1912-ம் ஆண்டில் புதுச்சேரியில் நூலாக வெளியாயிற்று. ஆனால் அதன் இரண்டாம் பாகம், பாரதி காலமான பிறகு, 1924-ல்தான் பிரசுரமாயிற்று. "குயில் பாட்டு" 1923-ம் ஆண்டில் தான் வெளியாயிற்று; அதன்முன் அது வெளியானதாய்த் தெரியவில்லை.

"கண்ணன் பாட்டு" முதற் பதிப்பின் முகவுரையில் பரலி சு. நெல்லையப்ப பிள்ளை, "ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய மேதாவி; மகா பண்டிதர்; தெய்வீகப் புலவர்; ஜீவன் முக்தர். இவர் தமிழ்நாட்டு ரவீந்திரநாதர். இவர் எனது நாட்டின் தவப்பயன்......இந்த ஆசிரியன் காலத்திற்குப் பின், எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பின், இவர் பாடல்களைத் தமிழ் நாட்டு மாதர்களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப்படையும் காட்சியை யான் இப்பொழுதே காண்கின்றேன்" என்று உறுதியோடு கூறினார்.

"கண்ணன் பாட்"டின் இரண்டாம் பதிப்புக்கு வ. வே. ஸு. அய்யர் 1920-ம் ஆண்டு அளித்த முகவுரையில், "பத்து வருஷங்களுக்கு முன் அவர் பதிப்பித்த **ஜன்ம பூமி**யிலேயே ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம் என்று இரண்டு செய்யுள்கள் காணப்படுகின்றன. ஆனால் பிற்பட்டுத்தான் கண்ணனுடைய செயல்களும் திருவிளையாடல்களும் அவர் மனத்தைப் பூரணமாக ஆகர்ஷித்தன" என்றும், இந்தக் கவர்ச்சிக்குப் பெரியாழ்வார் பாசுரங்களை பாரதி பாடி உளமகிழ்ந்ததே பெரிதும் காரணம் என்றும் சொல்கிறார்.

கண்ணன் பாட்டுகளின் கவிதையழகை மாத்திரம் அனுபவித்துவிட்டு நூலின் பண்ணழகை மறந்துவிடக் கூடாது என்றும் வ. வே. ஸு. அய்யர் நினைவு படுத்துகிறார். அவர் மேலும் கூறுகிறார்:

"இதிலுள்ள பாட்டுக்களில் பெரும்பாலானவை தாளத்தோடு பாடுதற்காகவே எழுதப் பட்டவையாயிருக்கின்றன. கடற்கரையில், சாந்தி மயமான சாயங்கால வேளையில், உலகனைத்தையும் மோஹ வயப்படுத்தி நீலக்கடலையும் பாற்கடலாக்கும் நிலவொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனை கர்வத்தோடும் சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தன்னுடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும் இந்நூலிலுள்ள பாட்டுகளை மாணிக்கங்களாக மதிப்பர்...... நமது ஆசிரியரின் நூல்களை நம் நாட்டவர் சரிவர ஆதரிக்காததினாலே,

> **'சுற்றி நில்லாதே போ, பகையே!**
> **துள்ளி வருகுது வேல்!'**

என்றும்,

> **'கைதனில் வில்லும் உண்டு**
> **காண்டீவம் அதன்பேர்'**

என்றும் உள்ள அக்ஷர லக்ஷம் பெறுமான பாக்களை எழுதியிருக்கும் அவருடைய உற்சாகம் குன்றிப்போயிருக்கிறது. தமிழபிமானிகள் இப்பதிப்பை ஆதரித்து வாங்கி ஆசிரியனுடைய உற்சாகத்தை உயர்த்தி அவரால் தமிழில் புதிய இலக்கியங்கள் பிறக்கும்படி செய்வார்கள் என நம்புகிறேன்."

1920-ல் விடுக்கப்பட்ட வேண்டுகோள் இது. ஆனால், பாரதி காலமான இரண்டு வருஷங்களுக்குப் பின்தான் இந்த முகவுரையே கூட அச்சேறிற்று!

"பஞ்சாலி சபதம்" நூலின் சமர்ப்பணத்தில், "தமிழ் மொழிக்கு அழியா உயிரும் ஒளியும் இயலுமாறு இனிப் பிறந்து காவியங்கள் செய்யப் போகிற வரகவிகளுக்கும், அவர்களுக்குத் தக்கவாறு கைங்கரியங்கள் செய்யப் போகிற பிரபுக்களுக்கும் இந் நூலைப் பாத காணிக்கையாகச் செலுத்துகிறேன்" என்று பாரதி குறித்திருப்பது கவனித்தற்குரியது.

மேலும், நூலின் முகவுரையில், "எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான்" என்று தெரிவித்திருப்பதும் எழுத்தாள அன்பர்கள் கவனிக்கத் தக்க லட்சியமாகும்.

# சுப்பிரமணிய சிவா

**நா**ற்பதாண்டுகளுக்குமுன் தமிழ் நாட்டில் தீவிர தேசபக்தி கொழுந்து விட்டெரிந்த சமயம் "சுப்பிரமணியம் மூவர்" இருந்தனர். சுப்பிரமணிய பாரதி, வ. வே. சுப்பிரமணிய அய்யர், சுப்பிரமணிய சிவம்—இந்த மூவரும் ஒருவருக்கொருவர் உற்ற நண்பர்களாய் விளங்கினுர்கள்.

சுப்பிரமணிய சிவம் (இவரை சுப்பிரமணிய சிவா என்றும், சிவா என்றும்கூட அழைப்பர்) மதுரை ஜில்லா வத்தலக்குண்டு கிராமத்தில் பிறந்தவர். ஏழைக் குடும்பம். சிறு வயதிலேயே சிவம் ஆத்மீக விசாரணையில் பற்றுதல் காட்டி, தமது தாய் மாமனுகிய ஓத சுவாமிகளிடம் தீட்சையும் பெற்றுர். ஆயினும் வறுமையை முன்னிட்டு, தந்தையின் வற்புறுத்தலின் பேரில் கோர்ட்டில் ஒரு சிறிய உத்தியோகம் பார்த்தார். ஆனுல் அவரது தீவிர தேசீய மனப்பான்மையினுல் அவ் வேலையிலிருந்து நீங்கினுர்.

சுப்பிரமணிய சிவம் சிறந்த பேச்சாளர். அவருக்கு வழவழாப் பேச்சிலோ கொள்கையிலோ வழவழாச் செயலிலோ நம்பிக்கையில்லை. வெட்டொன்று துண்டிரண்டு என்பவர். திலகர் வழியைப் பின்பற்றி, 'துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனம்' செய்ய வேண்டும் என்பவர்.

பரலி சு. நெல்லையப்ப பிள்ளையின் தமையனுரான பரலி ஷண்முக சுந்தரம் பிள்ளை மூலம் வ. உ. சிதம்பரம் பிள்ளையுடன் இவருக்கு நட்பு உண்டாயிற்று. சுதேசிக் கப்பல் கம்பெனிப் பிரசாரத்திலும் சுதேசியப் பிரசாரத்திலும் பிள்ளையவர்களுக்கு சிவம் நல்ல துணையாக இருந்தார். நாள்தோறும் சிதம்பரமும் சிவமும் தூத்துக்குடி கடற்கரையிலும் மற்ற இடங்களிலும் கூட்டம் கூட்டி தூத்துக்குடியைத் தென் ஜில்லாக்களின் தேசீய இயக்கக் கோட்டையாக்கினுர்கள். அக்காலத்தில், சுதேசியத்தைத் தாக்கிப் பேசிய ஒரு வக்கீலுக்கு க்ஷவரம் செய்துகொண்டிருந்த நாவிதர், வக்கீலின் பேச்சு பொறுக்காமல் பாதி க்ஷவரத்தில் அவரைக் கைவிட்டு விட்டார். அந்த வக்கீல் போலீஸ் பந்தோபஸ்துடன் மதுரை சென்று மறு பாதி க்ஷவரத்தை முடித்துத் திரும்ப வேண்டியதாயிற்று! அக்காலத்தில், தூத்துக்குடியிலிருந்த வெள்ளையர் இரவு நேரத்தை நகரில் கழிக்கத் துணிவின்றி கடலில் ஏழு மைல் தள்ளி நின்ற கப்பல்களில் தினமும் இரவைக் கழித்து வந்தார்கள்!

சிதம்பரம், சிவம் கோஷ்டியின் செல்வாக்கு இப்படி அபரிமிதமாய் வளர்வதைக் கண்டு போலீஸார் அவர்கள் மீது முதலில் ஜாமீன் வழக்கும் பிறகு ராஜத்துவேஷ வழக்கும் தொடர்ந்தார்கள். இவ்வழக்கில் இருவருக்கும் ஆறு வருஷம் சிறைவாசம் கிடைத்தது! சிறையில் சிதம்பரம் செக்கிழுத்தார்; சிவம் கம்பளி மயிர் வெட்டினுர்.

1912-ல் விடுதலையடைந்த சுப்பிரமணிய சிவம் சென்னை மயிலாப்பூரில் குடியேறி "ஞான பாநு" என்ற மாதப் பத்திரிகையை 1913 ஏப்ரல் முதலாக நடத்தத் தொடங்கினுர். "ஞான பாநு" மூன்று வருஷங்கள் நடந்தது. பின்னர், சிவம், "பிரபஞ்ச மித்திரன்", "இந்திய தேசாந்திரி" என்ற பத்திரிகைகளை சிறிது காலம் நடத்தி வந்தார். தம் தேச பக்திப் பேச்சுக்களுக்காக மீண்டும் மூன்று தடவை சிறைவாசம் அனுபவித்தார்.

ஜாதிமத பேதமின்றி பாரத மக்கள் பாரத மாதாவை தெய்வமாக வணங்க ஸ்ரீ பாரத மாதா ஆலயம் கட்ட அவர் பல இடங்களில் முயன்றுர். சென்னைக் கோடம்பாக்கம், அமராவதிபுதூர், மானுமதுரை யடுத்த பசலை முதலிய இடங்களில் முயன்று, முடிவாக சேலம் ஜில்லா பாப்பாரப்பட்டியில் ஸ்ரீ பாரத மாதா கோயிலுக்கு தேசபந்து தாஸ் அஸ்திவாரக்கல் நாட்டச் செய்தார். ஆனுல் அதற்கு மேல் கோயில் வேலைக்கு ஆதரவிருக்கவில்லை.

சுப்பிரமணிய சிவா தமிழ்நாடெங்கும் தமது மனைவியார் சகிதம் கால்நடையாகச் சென்று தேசீயப் பாடல்களைப் பாடியும், உணர்ச்சி மிக்க பிரசங்கங்கள் செய்தும் மக்களைத் தட்டியெழுப்பி வந்தார். இப்படி ஒரு சமயம் அவர் புதுச்சேரிக்கும் போயிருந்தார்.

1925-ம் ஆண்டு ஜுலை மாதம் 25-ந் தேதி பாப்பாரப்பட்டிக்கடுத்து தாம் ஸ்தாபித்த பாரதபுரத்தில் சுப்பிரமணிய சிவம் சமாதியானுர். அப்போது அவருக்குத் தமிழ் நாட்டில் ஏராளமான செல்வாக்கு இருந்தது. மதுரை தியாகராஜ சிவம், சிதம்பர பாரதி, ஸ்ரீநிவாஸவரதன், தற்சமயம் 'கல்கி' நிர்வாகியாக இருக்கும் தி. சதாசிவம், சென்னை 'எவரெஸ்ட்' ஹோட்டல் ஸ்தாபகர் சுந்தரம் முதலியோர் சிவாவின் சிஷ்யர்களாவர்.

"ஞான பாநு"வை ஆரம்பித்த போதே பாரதி அதற்கு விஷயதானம் செய்து வந்தார். இரண்டாவது இதழிலேயே "சின்னச் சங்கரன் கதை" தொடர் கதையாக வெளியாகியிருக்கிறது. "ஞான பாநு"வின் மூன்றுவது ஆண்டு ஆரம்பித்தபோது "ஞான பாநு" என்ற பெயரில் ஒரு கவிதையும் எழுதியனுப்பினுர் பாரதி. இது அப் பத்திரிகையின் 1915 ஏப்ரல் மாத இதழில் முகப்புக் கவிதையாக வெளியாயிற்று.



82. **சுப்பிரமணிய சிவா**: தமிழ்நாட்டில் தேச பக்தியை வளர்த்த பெரியார்களில் ஒருவரான சுப்பிரமணிய சிவா; இளமையில், தாடியின்றி. சிவா நடத்திய "ஞான பாநு" பத்திரிகைக்கு பாரதி தொடர்ச்சியாக விஷயதானம் செய்துவந்தார்.



83. **சுப்பிரமணிய சிவா**: தாடியுடனும், தம் மிடம் எப்போதும் வைத்திருந்த பெரிய கைத் தடி யுடனும். பாரதிக்கும் வ. உ. சி.க்கும் நெருங்கிய நண்பரும் தேசிய ஊழியருமான சிவா சுதேசி இயக் கத்திலும் பாரதி பாடல்களைப் பாடிப் பரப்புவ திலும் முக்கிய பங்கு கொண்டவர்.

ஞானபாநு.

VOL. 3. தொகுதி 3. | April 1915. ராக்ஷஸ வருஷம் சித்திரை மீ | No. 1 பகுதி 1

ஞானபாநு.

(ஸூர்ய ஸ்தோமம்.)

திருவளர் வாழ்க்கை, கீர்த்தி, தீரம், நல்லறிவு, வீரம்,
மருவுபல் கலையின் சோதி, வல்லமை, — யென்பவெல்லாம்
வருவது ஞானத்தாலே, வையக முழுது மெங்கள்
பெருமைதா னிலவி நிற்கப் பிறந்தது ஞானபாநு. (1)

கவலைகள், சிறுமை, நோவு, கைதவம், வறுமைத் துன்பம்,
அவலமா மனைத்தைக் காட்டில் அவலமாம் புலைமை யச்சம்,
இவையெலா மறிவிலாமை யென்பதோர் இருளிற் பேயாம்,
நவமுறு ஞான-பாநு நண்ணுக, தொலைக பேய்கள் (2)

அனைத்தையுந் தேவர்க் காக்கி, அறத்தொழில் செய்யு மேலோர்
மனத்திலே சக்தியாக வளர்வது நெருப்புத் தெய்வம்.
தினத்தொளி ஞானங் கண்டீர், இரண்டுமே சேர்க்கால் வானோர்
இனத்திலே கூடி வாழ்வர் மனிதரென் றிசைக்கும் வேதம். (3)

பண்ணிய முயற்சி யெல்லாம் பயனுற வோங்கு மாங்கே,
எண்ணிய வெண்ணமெல்லாம் எளிதிலே வெற்றி யெய்தும்,
திண்ணிய கருத்தினோடும் சிரித்திடு முகத்தினோடும்
நண்ணிடு ஞானபாநு வதனை நாம் நன்கு போற்றின். (4)

சி. சுப்பிரமணிய பாரதி.

38

84. **"ஞான பாநு"**: சிவாவின் "ஞான பாநு" பத்திரிகையின் மூன்றுவது ஆண்டுத் துவக்கத்தில் "ஞான பாநு" என்ற பாடலை பாரதி பாடித் தந்தார்.

206 ஞானபாநு.

வானத் தாயுதங்களாய் எப்பொழுதும் இருக்கின்றனர். ஈஸ்வரன் உங்கள் எல்லோரையும் அநுக்ரஹிப்பாராக.

அன்புநிறைந்த,
விவேகானந்தர்.

ஓம்.

யோக சித்தி.

ஓர் உத்தமதேசாபிமானியால் இயற்றப்பட்டது.

விண்ணும் மண்ணுந் தனியாளும் — அடி
வீரசக்தி நினதருளே — என்றன்
கண்ணுங் கருத்துமெனக் கொண்டு — அன்பு
கசிந்து கசிந்து கசிந்துருகி — நான்
பண்ணும் பூசனைகளெல்லாம் — வெறும்
பாலை வனத்திலிட்ட நீரோ — உனக்
கெண்ணுஞ் சிந்தை யொன்றிலையோ? அறி
வில்லாத் தமியனிப்பாயோ? 1

நீயே சரணமென்று கூவி — என்றன்
நெஞ்சிற் பெருமுறுதி கொண்டு — அடி
தாயே யெனக்கு மிகநிதியும் — அறந்
தன்னைக் காப்பதற்கோர் திறனும் — தரு
வாயே யென்று பணிந்தேத்தி — பல
வாறு நினது புகழ்பாடி — வாய்
ஓயே லுவலணராயோ? நின
துண்மை தவறுவதோருலகோ. 2

காளிவலியசாமுண்டி — ஓங்
காரத் தலைவி யென்னிராணி — பல
நாளிங்கெனை யலைக்கலாமோ? உள்ளம்
நாடும்பொருளடைதற்கன்றோ — மலர்த்
தாளில் விழுந்தபயங்கேட்டேன் — அது
தாராயெனி லுயிரைத்தீராய் — துன்ப
நீளில் உயிர் தரிக்கமாட்டேன் — கரு
நீலியென் னியல் பறியாயோ? 3

85. **"யோக சித்தி"** என்ற பாரதி பாடல், "ஓர் உத்தம தேசாபிமானியால் இயற்றப்பட்ட"தாக "ஞான பாநு" 1913 டிசம்பர் இதழில் வெளிவந்தது.

# சின்னச் சங்கரன் கதை

"ஞான பாநு"வுக்கு பாரதியார் கவிதைகள் எழுதினர், வசனத்தில் விஷயதானம் செய்தார். தமது சுயசரிதை போல, குலுங்கச் சிரிக்க வைக்கும் நடையில் எழுதிய "சின்னச் சங்கரன் கதை" கைப்பிரதி போலீஸ் வசம் போய்க் கிடைக்காமற் போனபோது, நண்பர்கள் வற்புறுத்தலின் பேரில் மீண்டும் எழுதி, "ஞான பாநு"வில் பிரசுரத்துக்கு அனுப்பி வந்தார். ஆறு அத்தியாயங்கள் எழுதிய பின், ஏனோ அவருக்குச் சலிப்பு வந்துவிட்டது. அதற்குமேல் எழுதாமல் நிறுத்தி விட்டார்.

"சின்னச் சங்கரன் கதை"யின் கதையே விசித்திரமானது. பாரதியார் அதை முழுவதும் எழுதித் தம் வீட்டில் வைத்திருந்தார். அப்போது அவர் வீட்டில் முருகேசன் என்றொரு சிறுவன் வேலை செய்து வந்தான். திடீரென ஒருநாள் முருகேசனைக் காணவில்லை. கிட்டத்தட்ட அதே சமயம் "சின்னச் சங்கரன் கதை" கையெழுத்துப் பிரதியும் மாயமாய் மறைந்து போயிற்று. சுமார் நாற்பது நாள் கழித்து முருகேசன் எலும்பும் தோலுமாய்த் திரும்பி வந்தான். பாரதியைக் கண்டதும் தேம்பித் தேம்பி அழுதான். பிரிட்டிஷ் இந்தியப் போலீஸ் ஆசாமி ஒருவன் தன்னை விழுப்புரம் வரை போய் வரக் கூப்பிட்டதாயும், தமாஷாய்ப் போய் வரலாமென்று போனதாயும், விழுப்புரத்தில் தன்னைக் கைதுசெய்து, 'லாக்கப்'பில் அடித்து உதைத்து இம்சை செய்து பாரதியாரைப் பற்றித் தெரிந்ததையெல்லாம் சொல்லச் சொன்னதாகவும், ஒரு மாதம் கழித்து விடுதலை செய்ததாகவும், கையில் காசில்லாமல் சென்னையிலுள்ள தன் உறவினர்களிடம் சென்று கடன் வாங்கிக்கொண்டு ஊர் திரும்ப நேர்ந்ததாகவும் முருகேசன் சொன்னான். "சின்னச் சங்கரன் கதை" கையெழுத்துப் பிரதி பற்றித் தனக்கொன்றும் தெரியாதென்றான்.

அவன் நிரபராதியென்று பாரதி நம்பினர். பிறர் நம்பவில்லை. எப்படியும் கதையின் கையெழுத்துப் பிரதி போனது கிடைக்கவில்லை. நண்பர்களின் விருப்பத்திற்கிணங்க பாரதி மீண்டும் எழுதிய ஆறு அத்தியாயங்களே இன்று நமக்குக் கிடைத்துள்ளன.

"சின்னச் சங்கரன் கதை"யின் நடையே கவர்ச்சிகரமானது. "முதல் குட்டி அத்தியாய"த்திலேயே தம் கதையின் நகைச்சுவைக்கு மாதிரி காட்டுகிறார் ஆசிரியர். பின் அத்தியாயங்களில், "கவுண்டனூர் சமஸ்தான"த்தில் சமஸ்தானாதிபதி "அடாணா ராமசாமிக்கவுண்டர்" நடத்திய அட்டஹாசங்களையும், சங்கரன் கவுண்டனூர் ராஜசபைப் புலவர்களை முறியடித்துப் புகழ் எய்தியதையும், "கம்ப ராமாயணம் முத்திருளத் தேவர்" என்ற "திருதராஷ்டிரக் கிழவன்" (கண் பார்வை யிழந்தவன்) பேத்தி "இருளாயி"யை சங்கரன் காதலிப்பதையும், இன்னும் பல விஷயங்களையும் பாரதி விவரிக்கிறார். எட்டயபுரத்தில் பாரதி வாழ்க்கையை விவரிக்கும் சுயசரிதம் என்று இதைக் கருதலாம் போலிருக்கிறது. தமிழ்நாட்டின் துரதிர்ஷ்டம் பாரதி இதை இரண்டாவது தடவை எழுதியபோது பாதியில் நிறுத்திவிட்டார். ஈடற்ற நகைச் சுவைப் பொக்கிஷமொன்றைத் தமிழ்நாடு இழந்துவிட்டது.

"ஞானபாநு"வில் "சின்னச்சங்கரன் கதை" "சாவித்திரி என்ற நிருபநேயர்" எழுதுவதாக வந்தது. தம் சொந்தப் பெயரிலும் "சரஸ்வதி", "நித்திய தீரர்", "ஓர் உத்தம தேசாபிமானி" முதலிய புனைபெயர்களிலும் பாரதி "ஞானபாநு"வுக்கு விஷயதானம் செய்தார். "ஒளியும் இருளும்", "மது", "கண்ணன் என் தாய்", "யோகசித்தி", "வேய்ங்குழல்", "இறவாமை", "பாப்பாப் பாட்டு", "ஞானபாநு" என்ற பாடல்கள் இப்பத்திரிகையில் வெளி வந்தவை.

"ஞானபாநு"வின் *1913* நவம்பர் இதழில் பாரதியாரின் "பாஞ்சாலி சபதம்" (முதல் பாகம்) பற்றி விமர்சனம் வந்துள்ளது. அதிலே ஒரு சுவாரஸ்யமான செய்தி கிடைக்கிறது. "ஆசிரியர் இப்புத்தகத்தில் ஒரு பிரதியை சென்னை கவர்னரவர்களுக்கு அனுப்பியிருந்ததாகவும் அவர் தாம் அதை வந்தனத்துடன் ஏற்றுக் கொண்டதாக ஆசிரியருக்குக் கடிதம் எழுதியதாகவும் கேள்விப்படுகிறோம்" என்ற குறிப்பு இவ் விமர்சனத்தில் காணப்படுகிறது.

*1916* ஜனவரி இதழில் "மாதா" என்ற பெயர் கொண்ட பாரதி கவிதைத் தொகுதியின் விளம்பரம் காண்கிறது. இது 1910-ல் பாரதி புதுவையில் வெளியிட்ட மூன்றாவது கவிதைத் தொகுதி; "மாதா வாசகம்" என்பது இந்நூலின் முழுப் பெயர். "பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி", "வந்தே மாதர" கீதத்தின் புதிய மொழிபெயர்ப்பு, "ஸ்வசரிதை" முதலிய பாடல்களும் சக்திப் பாடல்கள் சிலவும் இந்நூலில் இடம் பெற்றிருந்தன.

# பாப்பா பாட்டு

"ஞானபாநு"வில் பாரதி எழுதி வந்த சமயம், தமிழ் நாட்டில் வேறெந்தப் பத்திரிகையிலும் அவரது கவிதைகளோ கதைகளோ வெளியானதாய்த் தெரியவில்லை.

1904-ல் ஆரம்பமான "சுதேச மித்திரன்" தொடர்பு 1906-ல் நின்று போயிருந்தது. 1907 ஸெப்டம்பருக்குப் பின் அவரது எழுத்துகள் எட்டு வருஷ காலம் "சுதேசமித்திர" னில் வரவில்லை. 1915-ம் வருஷம் ஜூன் மாதம் தான் மீண்டும் பாரதி "மித்திர"னில் எழுத ஆரம்பித்திருக்கிறார்.

ஆனால், இடையிலிருந்த எட்டுவருஷங்களில் தான் அவர் ஏராளமாக எழுதிக் குவித்தார்! இந்த வருஷங்களில்தான் அவரது முக்கியமான பல நூல்கள் எழுதப் பெற்றன.

இந்தக் காலத்தில் எழுதப் பெற்ற பெரிய நூல்களில் இரண்டே இரண்டுதான் அப்போது அச்சேறிப் புத்தகமாக வெளி வந்தன. 1910-ம் ஆண்டு நவம்பரில் "மாதா மாணிக்க வாசகம்" என்ற பெயரில் தமது மூன்றாவது கவிதைத் தொகுதியை வெளியிட்டார். "பாஞ்சாலி சபத"த்தின் முதல் பாகம் 1912-ல் பிரசுரமாயிற்று. "புதிய ஆத்திச்சூடி" சிறு பிரசுரமாக 1914-ல் வெளியாயிற்று. அதே வருஷம் பாரதியின் ஆங்கிலத் துண்டுப் பிரசுரம் "பொன் வால் நரி" (The Fox With the Golden Tail) சென்னையில் பெரிய கலக்கத்தையும் குதூகலத்தையும் உண்டாக்கியது.

இம்மாதிரி ஒரு சில எழுத்துக்களே புத்தக வடிவில் வந்ததால், பாரதியை மறுபடி "சுதேசமித்திர"னுக்கும் எழுதும்படி புதுவை நண்பர்கள் சொன்னார்கள். பாரதியின் எழுத்தைப் பிரசுரித்து சங்கடத்தில் மாட்டிக் கொள்ள "சுதேசமித்திரன்" தயாராயிருக்குமோ என்று பாரதி திருப்பிக் கேட்டார். தமக்கும் "மித்திர"னுக்கும் கொள்கையில் வேறுபாடு இருக்கும்போது, அதாவது தம்முடைய அதி தீவிர வாதத்தை "மித்திரன்" ஆதரிக்காதபோது, அதில் தமது எழுத்துக்களை வெளியிடச் சொல்லிக் கேட்பது நியாயமில்லை என்றும் பாரதி சொன்னார்.

இத்தகைய நிலையில் பாரதியாரின் எழுத்துகளை வேண்டி வரவேற்று, துணிந்து வெளியிட்ட பெருமை "ஞானபாநு"வைச் சார்ந்தது.

பாரதியின் "வேய்ங்குழல்" என்ற சுவை மிகுந்த பாட்டு "ஞானபாநு"வில் 1914, ஜனவரி இதழில் முகப்புப் பாடலாக வெளியாயிற்று.

"பாப்பா பாட்டு" 1915 பிப்ரவரி மாத இதழில் வெளி வந்தது. பாரதியார் தமது இரண்டாவது பெண் பாப்பா என்ற சகுந்தலாவுக்காகப் பாடியது இப்பாடல். இதில் பாரதியின் குழந்தையுள்ளம் நன்கு வெளிப்படுகிறது.

"ஞானபாநு"வில் வந்த பாப்பா பாட்டிற்கும் தற்போது பாரதி பாடல் தொகுதியில் இருக்கும் பாப்பா பாட்டிற்கும் சில பாக்களில் வேறுபாடு காண்கிறது. "ஞானபாநு" வில் இப்பாடலுக்கு 14 பாக்களே இருக்கின்றன. தற்போதைய பாடலில் 16 பாக்கள் இருக்கின்றன. "வடக்கில் இமயமலை பாப்பா..." என்றும் "வேதமுடைய திந்த நாடு..." என்றும் தொடங்கும் இரு பாக்கள் பாரதி இப்பாடலை முதலில் எழுதியபோது இல்லை; பின்னால் சேர்த்திருக்கிறார்.

அதே போல, "ஞானபாநு"வில் வந்த பாடலை அவரே பல இடங்களில் திருத்தியிருக்கவும் வேண்டும். "ஞானபாநு"வில் வெளிவந்த "பாப்பா பாட்டி"ல் 11-வது பாவின் கடைசி அடியை "ஆரிய தேசமடி பாப்பா" என்பதற்கு பதிலாக "ஆன்றோர்கள் தேசமடி பாப்பா" என்றும், 12-வது பாவின் கடைசி அடியை "தெய்வமென்று கொண்டாடு பாப்பா" என்பதற்கு பதிலாக "தினமும் புகழ்ந்திடடி பாப்பா" என்றும், 13-வது பா,

> **"சாதிப் பெருமையில்லை பாப்பா—அதில்**
>
> **தாழ்ச்சி யுயர்ச்சி செய்தல் பாவம்**
>
> **நீதி, தெளிந்த மதி, அன்பு—இவை**
>
> **நிறைய வுடையவர்கள் மேலோர்"**

என்பதை,

> **"சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்**
>
> **தாழ்ச்சி யுயர்ச்சி சொல்லல் பாவம்**
>
> **நீதி, உயர்ந்த மதி, கல்வி—அன்பு**
>
> **நிறைய உடையவர்கள் மேலோர்"**

என்றும் திருத்தியிருக்கிறார்.

ஞானபாநு.

VOL - 1. தொகுதி - க. | JANUARY 1914. பிரமாதீச வருடம் தைமீ | No - 10 பகுதி - 10

## வேய்ங் குழல்.

(ராகம் - ஹிந்துஸ்தானி தோடி - ஏகதாளம்.)

எங்கிருந்து வருகுவதோ—ஒலி
யாவர் செய்குவதோ?—அடி தோழி.

1. குன்றினின்றும் வருகுவதோ—மரக்
கொம்பினின்றும் வருகுவதோ—வெளி
மன்றினின்று வருகுவதோ—என்றன்
மதி மருண்டிடச் செய்குதடீ—(இஃதெங்கிருந்து)

2. அலைபொலித்திடும் தெய்வ—யமுனை
யாற்றினின்றும் ஒலிப்பதுவோ—அன்றி
இலைபொலிக்கும் பொழிலிடை நின்றும்
எழுவதோ இஃதின்ன முதைப்போல் (எங்கிருந்து)

3. காட்டினின்றும் வருகுவதோ—நிலாக்
கற்றைகொண்டு தருகுவதோ—வெளி
நாட்டினின்று மிக்கின்றல் கொணர்வதோ
நாதமிஃதென துயிரை யுருக்குதே—(எங்கிருந்து)

4. பறவையேது மொன்றுள்ளதுவோ—இங்ஙன்
பாடுமோ அமுதக் கனற் பாட்டு
மறைவினின்றும் கின்னர ராதியர்
வாத்தியத்தினிசை யிதுவோ—அடி—(எங்கிருந்து)

5. கண்ணனூதிடும் வேய்ங்குழல் தானடீ
காதிலே யமுதுள்ளத்தில் நஞ்சு
பண்ணன்றுமடி பாவையர் வாடப்
பாடியெய்திடும் அம்படி தோழி. (எங்கிருந்து)

சி. சுப்பிரமணிய பாரதி.

28

86. **“வேய்ங் குழல்”**: பாடல் “ஞான பாநு” பத்திரிகையின் 1914-ம் ஆண்டு ஜனவரி மாத இதழில் வெளியாயிற்று.

288

பாதகஞ் செய்பவரைக் கண்டால்—நாம்
பயங் கொள்ள லாகாது பாப்பா.
மோதி மிதித்துவிடு பாப்பா—அவர்
முகத்தி லுமிழ்ந்து விடு பாப்பா. (8)

துன்பம் நெருங்கி வந்த போதும்—நாம்
சோர்ந்து விட லாகாது பாப்பா
அன்புமிகுந்த தெய்வ முண்டு—துன்பம்
அத்தனையும் போக்கி விடும் பாப்பா. (9)

சோம்பல் மிகக்கெடுதி பாப்பா—தாய்
சொன்னசொல்லைத் தட்டாதே பாப்பா.
தேம்பி யழுங்குழந்தை நொண்டி—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா. (10)

தமிழத் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டி பாப்பா
அமிழ்தி னினியதடி பாப்பா—எங்கள்
ஆரிய தேசமடி பாப்பா. (11)

சொல்லி லினிதுதமிழ்ச் சொல்லே—அதைத்
தொழுது படித்திடடி பாப்பா.
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்—அதைத்
தெய்வ மென்று கொண்டாடி பாப்பா. (12)

சாதி பெருமை யில்லை பாப்பா—அதில்
தாழ்ச்சி யுயர்ச்சி செய்தல் பாவம்.
நீதி, தெளிந்த மதி, அன்பு—இவை
நிறைய வுடையவர்கள் மேலோர். (13)

உயிர்க ளிடத்திலன்பு வேணும்—தெய்வம்
உண்மை யென்று தானறிதல் வேணும்
வயிர முடைய நெஞ்சு வேணும்—இது
வாழு முறைமையடி பாப்பா. (14)

புதுவை. சி. சுப்பிரமணிய பாரதி

87. **“பாப்பா பாட்டு”**: “ஞான பாநு” 1915 பிப்ரவரி இதழில் வெளியான “பாப்பா பாட்டு”க்கும் பிற்பாடு வெளியான “பாப்பா பாட்டு”க்கும் சில மாறுபாடுகள் இருக்கின்றன.



88. **கவிஞரும் மனைவியாரும்:** பாரதியும் மனைவி செல்லம்மாளும். 1917-ல் விஜயராகவன் என்ற அன்பரின் தூண்டுதலின்பேரில் எடுத்த புகைப் படம். புதுவையன்பர்கள் பாரதி தாடியுடன் இருக்கும் இப்படத்தையே விரும்புகிறார்கள்.

# பாரதி தம்பதிகள்

**பா**ரதியின் மேதையை மனைவி செல்லம்மாளோ உறவினரோ முதலில் உணரவில்லை.

பாரதி காசியில் படித்துக் கொண்டிருந்த சமயம் அவருக்குச் செல்லமாளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. தேச சுதந்திர விஷயமாய் அவர் ஓயாமல் பாடுபடுவதாகவும், அதனால் ஆபத்து, தீவாந்தர சிட்சை கூட நேரலாமென்றும் உறவினர் மூலம் கேள்விப்பட்டு, உடனே காசியை விட்டுத் தெற்கே வந்துவிடும்படி வேண்டிக் கொண்டிருந்தாள் மனைவி. இதற்கு வந்த பதில் பாரதியின் மனத்தெம்பையே காட்டியது. நீ பயப்படும்படி நான் ஏதும் செய்யவில்லை; இப்படிக் கவலைகளில் பொழுதைப் போக்குவதற்கு பதில் தமிழை நன்றாகப் படி என்று எழுதியிருந்தார் அவர்!

காசியிலிருந்து எட்டயபுரம் வந்த பிறகு, மன்னருடன் சென்னை சென்று திரும்பியவர் பெரிய மூட்டை முடிச்சுடன் வந்தார். தமக்குத் துணிமணி நிறைய வந்திருக்கிறது என்று மகிழ்ந்த செல்லம்மாள், அத்தனையும் பழந்தமிழ் இலக்கிய நூல்கள் என்று கண்டதும் ஏமாற்ற மடைந்தார். பாரதி, ஒரே ஒரு புடவை மட்டும் வாங்கி வந்திருந்தார்!

1908-ல், சென்னையிலிருந்த பாரதி திடீரென்று புதுவைக்குப் போய்விட்டதும் செல்லம்மாளுக்கு வியப்பாக இருந்திருக்கவேண்டும். தனது புருஷர் ஒரு விசித்திர மனிதர் மட்டுமல்ல, எதிர்பாராத காரியங்களையும் செய்யக் கூடியவர் என்பதும் செல்லம்மாளுக்குப் புரிந்து போயிருக்கவேண்டும்.

நாளாக ஆக பாரதி பழுத்த வேதாந்தியாகி விட்டார். கையில் எவ்வளவு பணம் வந்தாலும், என்ன பொருள் இருந்தாலும், ஏழை எளியாரைக் கண்டால் நாளை என்ற நினைவின்றி அப்படியே கொடுத்துவிடுவார் அவர்! ஒரு சமயம் ஒரு கிழப் பிச்சைக்காரன் தெருவில் அவரைக் கண்டு கையேந்தினான். கொடுப்பதற்கோ ஒன்றுமில்லை. குளிர்காலம். பாரதிக்குச் சட்டென ஒரு யோசனை உதயமாயிற்று. "வா தருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே அவனைத் தம் வீட்டு வாசல் வரை அழைத்து வந்தார். வீட்டுக் கதவைத் தட்டினார். செல்லம்மாள் கதவைத் திறந்தார். வீட்டு ரேழிக்குள் சென்று, க்ஷணத்தில் அரை வேஷ்டியைத் களைந்து அதைக் கிழப் பிச்சைக்காரனிடம் வீசி யெறிந்தாராம். கிழவன் அதை யணிந்து மகிழ்ந்தான். கோவணத்துடன் நின்ற பாரதி அக் காட்சியைக் கண்டு புளகாங்கிதமானார். "உமக்கென்று நண்பர்கள் அளித்த புது வேஷ்டியை இப்படி தானம் செய்து விட்டீர்களே!" என்று கேட்ட செல்லம்மாளுக்கு, "நம் குறை இருக்கட்டும். பார், அவனைப் பார். என்ன சந்தோஷத்தோடு போகிறான், பார்!" என்ற பதிலே கிடைத்தது!

"இல்லை" என்ற சொல்லே பாரதிக்கு ஆகாது. "இல்லையென்ற கொடுமை உலகில் இல்லையாக வைப்பேன்" என்று லக்ஷ்மி தேவியிடம் முறையிட்ட அவர், தம் வீட்டில் அரிசி இல்லை என்றால் "அனா இனா" (அ - இ) என்றே தெரிவிக்க வேணுமென மனைவிக்கு உத்தரவிட்டிருந்தார்.

பொருள்களைச் சேமித்து நாளைக்கென வைத்துக்கொள்ளும் வழக்கம் கிடையாதே தவிர, மற்ற வகையிலெல்லாம் பாரதி ஒப்புயர்வான கணவராகவும் தந்தையாகவும் விளங்கினார். அவர் இல்லத்தில் மனைவிக்கும் குழந்தைகட்கும் மட்டற்ற சுதந்திரமிருந்தது.

சிருஷ்டி வெறி வந்துவிட்டால் மட்டும் பாரதியைக் கட்டிப் பிடிக்க இயலாது. இந்த மாதிரி சமயங்களில், இரவோ பகலோ, அவர் வயல் வெளிகளிலும் கடற்கரை நிலவிலும் தனிமையை நாடிச் சென்றுவிடுவார். வீட்டில் இருக்க நேர்ந்த சமயங்களில், மௌன விரதம் அனுஷ்டித்துப் பார்த்துமிருந்திருக்கிறார். "வாரத்தில் மூன்று நாள் பேசாமல் இருந்தால் எழுத்து வேலை தடங்கல் இல்லாமல் நடக்கிறது" என்பது அவர் வாக்கு. "மந்திரம் போல் சொல்லின்பம்" பெற மௌன விரத மனுசரித்து, நாற்பது நாள் தவத்தின் பயனாய் "பாரதி அறுபத்தாறு" பாடல்களையும், "தேவர் வருகவென்று சொல்வதோ" என்று துவங்கும் பாட்டையும் அவர் பாடினாராம்.

புதுவையில் இருக்கையில் கொஞ்ச காலம் பாரதியார்வழக்கமான மீசையைத் தவிர தாடியும் வைத்திருந்தார். அந்தச் சமயம் அவர் வைஷ்ணவ ஆழ்வார்களின் பாசுரங்களில் ஈடுபட்டிருந்தார். நெற்றியில் விரிந்த நாமம், கட்டுக்கடங்காத தாடி மீசை, எதையும் உற்றுநோக்கும் தீக் கங்குகளொத்த விழிகள்! பெண்களுடன் சேர்ந்து புகைப்படம் எடுத்துக் கொள்வதற்கே சங்கோஜப்பட்ட அந்நாளில் தம் மனைவியின் தோளில் கை போட்டு அணைத்துக் கொண்டு புகைப்படமெடுக்கத் துணிந்தவர் பாரதி! இது 1917-ல் எடுத்த படம்.

கவிஞரின் பத்தினி செல்லம்மாள் நாணத்துடன் நிற்பதும் இப்படத்துக்கு ஒப்பற்ற சுவையளிக்கிறது.

# குடும்பப் படம்

புகைப் படம் எடுத்துக்கொள்வதில் பாரதிக்கு விருப்பம் அதிகம்.

பாரதிக்குப் புகைப்படங்களில் விருப்ப மென்றாலும், தமது ஆயுளில் அவர் ஆறு படங்களே எடுத்துக் கொண்டுள்ளார்.

பாரதியாரின் இளமையில் ஒரு புகைப் படம் எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. சிறுவன் சுப்பையாவின் இந்தப் படம் இப் போது நமக்குக் கிடைக்கவில்லை.

இந்த முதல் படத்துக்குப் பிறகு பாரதி எடுத்துக்கொண்ட படம், முன் பக்கத்தி லுள்ள பாரதி-செல்லம்மா படம்தானென்று தோன்றுகிறது. இது புதுவையில் 1917-ல் எடுத்துக் கொண்ட படம். மனைவியுடன் இப்படம் எடுத்துக்கொண்ட அதே தினம், மனைவி மக்கள், இரு நண்பர்களுடன் இன் னொரு படமும் பாரதி எடுத்துக்கொண்டார்.

இந்தப் படத்திலும், அக்கால வழக்குக்கு மாறாகச் சில விஷயங்கள் இருக்கின்றன. புருஷன், மனைவி படமெடுத்துக் கொள்வ தென்றால் புருஷன் உட்கார்ந்துகொண்டும் மனைவி நின்றுகொண்டும் படமெடுத்துக் கொள்வதே நம்மவர் வழக்கம். ஆனால் இந்தக் குடும்பப் படத்திலோ, பாரதி நிற்கிறார், செல்லம்மாள் உட்கார்ந்திருக்கிறார். இது மேனாட்டு ஆசாரத்தைப் பின்பற்றிய தென லாம். மாதர் தம்மை இழிவு செய்யும் மட மையை ஒழிக்க வந்த பாரதி, தம் மனைவியை அமரச் செய்து, தாம் நின்றவண்ணம் பட மெடுத்துக்கொண்டதில் வியப்பில்லை.

இப்படத்தில், பாரதியையும் செல்லம்மாளை யும் தவிர, பாரதியின் இரு புதல்வியரும், நண்பர்கள் இருவரும் இருக்கிறார்கள். செல் லம்மாள் அருகே இளைய பெண் சகுந்தலா உட்கார்ந்திருக்கிறாள். மூத்த பெண் தங்கம் மாள் பின்னே நிற்கிறாள். பாரதியுடன், ராமு என்ற ஒரு இளைஞரும், விஜயராகவன் என்ற மற்றொரு இளைஞரும் நிற்கிறார்கள்.

இருவரும் புதுவையில் பாரதியின் வீட் டுக்கு அருகில் இருந்த இளம் நண்பர்கள். ராமு என்பவரைப் பற்றி மேல் விவரம் கிடைக்கவில்லை. விஜயராகவன் என்பவர் மட் டும், இன்னும் ஜீவிதமாயிருக்கிறார். தற்சமயம் திருப்பாதிரிப்புலியூரில் ஸப்-போஸ்ட்மாஸ்ட ராக இருக்கிறார். எஸ். விஜயராகவாச்சாரி யார் என்பது இவரது முழுப் பெயர். பாரதி குடும்பப் படத்தின் பிரதியை அவரே இந் நூலில் பிரசுரிக்க உதவியுள்ளார்.

பாரதியின் சகவாசத்தால் இளைஞர்கள் எப் படி உற்சாகமடைந்தனர் என்பதற்கு, இப் படத்தில் இளம் விஜயராகவன் பாரதி போலவே தலைப்பாகை அணிந்திருப்பது ஒரு சான்றாகும்.

புதுவையில் எடுக்கப் பெற்ற இவ்விரு படங்களுக்குப் பின், புதுவையை விட்டுக் கடயத்தில் வசித்த சமயம் காரைக்குடிக்குச் சென்று, அங்கே ஹிந்து மதாபிமான சங்கத் தில் ஒரே நாளில் இரண்டு புகைப் படங்கள் எடுத்துக் கொண்டார். ஒரு படத்தில் தாம் மட்டும் தனியாகவும், மற்றொன்றில் சங்க அன்பர்களுடனும் அவர் விளங்குகிறார். இப் படங்கள் இந்நூலில் வேறு பக்கங்களில் வெளிவந்துள்ளன.

இதன் பிறகு, கடயத்திலிருந்து சென் னைக்கு 1920-ல் திரும்பிய பின், வி. பி. ஹாலில் செய்ததோர் ஆங்கிலப் பிரசங்கத்தை அறி விக்கும் துண்டுப் பிரசுரத்தில் வெளியிட வென மார்பளவுப் படமொன்று எடுத்துக் கொண்டார். இந்தத் துண்டுப் பிரசுரமும் அதில் வெளியான படமும் இப்போது நமக் குக் கிடைக்கவில்லை.

பாரதி கடைசியாக எடுத்துக் கொண்ட படமும் அவ்வளவு பிரசித்தமாகவில்லை. ஆனால் அதன் ஒரு பகுதி மட்டும் மிகப் பிரசித்தமாகிவிட்டது. அன்பர் பாரதிதாஸ னின் விருப்பப்படி, முழு அளவுப் படம் ஒன்று எடுத்துக் கொண்டார் பாரதி. இது 1921-ல் இருக்கவேண்டும். மெலிந்த உருண் டைக் கழி நாற்காலி யொன்றில் உட்கார்ந் திருக்கும் பாரதியை, தாடியற்ற பாரதியை, மீசையும் தலைப்பாகையுமுள்ள பாரதியை இப் படத்தில் காண்கிறோம். வாழ்க்கையில் துயரின் ஆழத்தைக் கண்டிருந்தும் கலங்காத நெஞ்சும் மாறாத வீரத் திருப்பார்வையும் கொண்ட இப் படத்தில் பாரதியின் 'பாத ரஸம் போன்ற' பரபரப்பான இயல்பு நன்கு தெரிகிறது. படமெடுத்தாகிவிட்டதா, நான் எழுந்து போகலாமா என்று கேட்பது போல நாற்காலியில் பட்டும் படாமலும் முன் தள்ளி முன்னால் குனிந்து வீற்றிருக்கிறார் இப் படத்தில்.

வழக்கமாக நறுக்கு மீசையுடனும் தலைப் பாகையுடனும் திறந்த கோட்டுடனும் காணும் பாரதியின் பிரபலமான மார்பளவுப் படம் இந்த முழு அளவுப் புகைப் படத்தின் ஒரு பகுதியே யாகும். ஆனால் இரண்டுக்கும் எவ்வளவு வித்தியாசம்! பரபரப்பு மிக்க புலவராக முழு அளவுப் படத்தில் விளங்கும் பாரதியை, முன்னால் சாய்ந்து வீற்றிருக்கும் பாரதியை, நிமிர்த்தி வைத்து பரபரப்பற்ற கவிராஜ சிங்கமாக்கிவிடுகிறது வழக்கமான மார்பளவுப் படம்!



89. **குடும்பமும் இரு நண்பர்களும்:** 1917-ல் புதுவையில், முந்திய படம் எடுத்த அதே நாளில் எடுத்த மற்றொரு படம். உட்கார்ந்திருப்பவர்கள்: புதல்வி சகுந்தலா ('பாப்பா'), மனைவி செல்லம்மாள். நிற்பவர்கள்: புதல்வி தங்கம்மா, நண்பர் ராமு, நண்பர் விஜயராகவன், பாரதி.

Souvenir de Mr Bharati

THE FOX WITH
THE GOLDEN TAIL.

A FABLE WITH
AN ESOTERIC SIGNIFICANCE

2nd EDITION

BY

C. Subramania Bharati.

1914

Price: One anna.

(All rights reserved)

Saigon Sinnaya Press, Pondicherry.

90. **"பொன் வால் நரி"**: ஆங்கிலத்தில் பாரதி எழுதி வெளியிட்ட ஒரு கேலிக் கதை. (இப் பிரதி பிரம்மராய அய்யரால் இந் நூலாசிரியருக்கு அளிக்கப்பட்டது.)

REGISTERED NO: M. 1130
Vol. V — No. 1

आर्य

A PHILOSOPHICAL REVIEW

Editors:

SRI AUROBINDO GHOSE — PAUL & MIRRA RICHARD.

15th August 1918

41, Rue Francois Martin, Pondicherry.

INDIA.

THE MODERN PRESS, PONDICHERRY.

91. **"ஆர்யா"**: அரவிந்தர் புதுவையில் நடத்தி வந்த ஆங்கிலப் பத்திரிகை. இதில் பாரதி ஆங்கிலத்தில் கட்டுரைகளும் பாடல்களும் எழுதியிருக்கிறார்.

# ஆங்கில எழுத்தாளர் பாரதி

பாபு அரவிந்த கோஷ் தனியாக ஆசிரமம் அமைத்துக்கொண்ட பின்னரும் பாரதி அடிக்கடி அவரைப் போய்ப் பார்த்து வருவார். ஒரு நாள் அரவிந்தரிடம் பாரதி எதையோ படித்துக் காட்டிக்கொண்டிருந்தார். அதைக் கேட்கக் கேட்க, அரவிந்தர் விடா நகைப்படைந்து, தாம் மகிழ்வதுடனில்லாமல் ஆசிரமத்திலிருந்த வாலிப வித்வான்களையெல்லாம் அழைத்து, "பாரதியார் எவ்வளவு அருமையான இங்கிலீஷில் ஒரு அதிசயமான கட்டுக்கதை எழுதியிருக்கிறார்! அதை அவரே வாசித்துக் காட்டும்போது நீங்கள் கவனிக்காமலும் கேட்காமலும் எங்கோ கவனித்துப் பேசிக்கொண்டிருக்கிறீர்களே!" என்று சொன்னார்.

அந்த நகைச்சுவை மிக்க கட்டுக் கதை, "பொன் வால் நரி" என்று தமிழிலும், "The Fox With the Golden Tail" என்று ஆங்கிலத்திலும் 1914-ல் வெளிவந்தது. அன்னிபெஸண்டின் அரசியலைப் பற்றியும், ஜே. கிருஷ்ணமூர்த்தியையும் அவரது சகோதரரையும் பெஸண்ட் வளர்த்து வந்ததுபற்றியும் வரையப்பட்ட இந்த கேலிக் கதை சென்னையில் மிகுந்த பரபரப்பை உண்டாக்கிற்று. மயிலாப்பூரில் பெயர் பெற்ற வைத்தியரும் தேசபக்த திலகமாக விளங்கியவருமான டாக்டர் நஞ்சுண்ட ராவ் இந்நூலைப் பற்றிக் கேள்விப்பட்டு உடனே 500 புத்தகங்களுக்கு வி. பி. ஆர்டர் அனுப்பினார்.

மேலும் இந்தப் புத்தகத்தைக் கொண்டாடி பி.ஏ., எம்.ஏ. படித்த பலர் பாரதியாருக்குப் பாராட்டுக் கடிதங்கள் அனுப்பினார்கள். இத்தகைய கடிதங்களில் ஒன்றைப் பிரித்து பாரதியார் படித்துக் கொண்டிருக்கையில் குவளைக் கண்ணன் அவரிடம் "என்ன ஐயா கடிதம்?" என்று கேட்டார்.

பாரதியார் சொன்னார்: "போகச் சொல்லு, விதவைப் பசங்களை! நான் என்னுடைய சொந்த பாஷையில் என் முழு மூளையையும் கசக்கிப் பிழிந்து 'பாஞ்சாலி சபதம்' எழுதியிருக்கிறேன். அது நன்றாக இருக்கிறதென்று ஒருவனும் ஒரு கடிதமும் எனக்கு எழுதவில்லை. அந்தப் புஸ்தகத்தை நீ ஒருவன்தான் வாசிக்கிறாய்! ஆங்கிலத்தில் எழுதின இந்தப் 'பொன் வால் நரி'க்கு 500பிரதி உடனே வேண்டுமாம்!"

தமிழனின் அடிமை மனப்பான்மையும் ஆங்கில மோகமும் அவர் மனதை எவ்வளவு தூரம் புண்படுத்தின என்பது இந்த பதிலின் ஆழத்தில் தொனிக்கிறது.

பாரதி எட்டயபுரத்தில் ஷெல்லி, கீட்ஸ் ஆகிய ஆங்கிலக் கவிகளைச் சுவைத்தவர். "ஷெல்லியன் கில்டு" சங்கம் அமைத்தவர். "ஷெல்லி தாசன்" என்ற புனைபெயர் கொண்டவர். ஸானெட் என்ற ஆங்கிலப் பண்முறையைத் தமிழில் கையாண்டவர். அவர் சொந்தமாகவும் ஆங்கிலக் கவிதை புனைந்திருக்கிறார். அது மட்டுமல்ல. தம்முடைய சில கவிதைகளையும், நம்மாழ்வார், ஆண்டாள் முதலிய தமிழ்க் கவிகளின் பாக்கள் சிலவற்றையும் ஆங்கிலப்படுத்தியிருக்கிறார். இவை அரவிந்தரின் "ஆர்யா" பத்திரிகையிலும், பெஸண்டின் "நியூ இந்தியா" "காமன்வீல்" பத்திரிகைகளிலும் வெளிவந்தன. (1937-ல் "Agni and other Poems" என்ற நூலாக பாரதி பிரசுராலயம் இவைகளை வெளியிட்டது).

"எங்கள் வேள்விக் கூட மீதில்", "பாயுமொளி நீ எனக்கு," "உண்ண உண்ணத் தெவிட்டாதே," "மாதவன் சக்தியினை," "பகைவனுக் கருள்வாய்," "கும்மியடி தமிழ் நாடு முழுதும்," "இயற்கை யென்றுனைப் புகழ்வார்" என்று ஆரம்பமாகும் 7 பாரதி பாடல்களுக்கு அவரே செய்துள்ள ஆங்கில மொழி பெயர்ப்புகள் இந்நூலில் இருக்கின்றன.

வைஷ்ணவர்கள் போற்றும் "வாரணமாயிரம்" பாட்டு உள்ளிட்ட பல பிரபந்தப் பாடல்களும் பாரதியால் ஆங்கிலப்படுத்தப் பட்டுள்ளன.

சென்னையில் "மெட்ராஸ் ஸ்டாண்டர்டு" என்று ஒரு தினசரி இருந்தது. அதில் பாரதிக்கும் புரொபஸர் எம். கே. சுந்தரராமன் (கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியாரின் தந்தை) அவர்களுக்கும் கீதையைப்பற்றி நடந்த விவாதம் உயர்ந்த முறையில் பத்திரிகைச் சர்ச்சைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியதாம். சுந்தரராமன் சாஸ்திரீய ஆதாரங்களுடன் வைதிக முறையில் வாதிக்க, பாரதி தமது மேதாவிலாசத்தால் பல புதிய கருத்துக்களைக் காட்டி விவாதித்தாராம். பாரதியின் இந்த விவாதம் இன்னும் நூலாக வெளிவரவில்லை.

வெளியாகாத பாரதி ஆங்கில எழுத்துக்களில் "Political Evolution in the Madras Presidency" என்பதும் ஒன்று. அதில், கொலை வழியைத் தாம் ஆதரிக்கவில்லை என்பதைத் தெளிவாய்க் கூறியிருக்கிறார் கவிஞர்.

பாரதியின் ஆங்கிலக் கட்டுரைகள் சில "Essays and other Prose Fragments" என்ற நூலாக 1937-ல் வெளிவந்தன. "Coming Age" என்ற 1918-ம் ஆண்டுக் கட்டுரையில் பூதான இயக்கக் கருத்தை தீர்க்கதரிசனமாக வெளியிட்டிருக்கிறார் கவிஞர்.

# 'தம்பி' நெல்லையப்பர்

பரலி சு. நெல்லையப்ப பிள்ளை பாரதியை விட ஏழு வயது சிறியவர். 1889-ம் ஆண்டு ஸெப்டம்பர் 18-ந்தேதி திருநெல்வேலி ஜில்லாவில் பிறந்தவர். வ.உ.சிதம்பரம் பிள்ளைக்கு வலக்கை போலிருந்த "வந்தே மாதரம் பிள்ளை" என்ற பரலி சு. ஷண்முக சுந்தரம் பிள்ளையின் இளைய சகோதரர். இவர் வ. உ. சி. யுடனும் பாரதியுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டவர்.

வ. உ. சி. யின் சுதேசிக் கப்பல் கம்பெனியில் நெல்லையப்பர் ஒரு குமாஸ்தாவாக வேலை பார்த்தார்.

திலகரைச் சேர்ந்த காங்கிரஸ் தீவிரவாதிகள் 1908-ல் ஒரு நாளை சுயராஜ்ய தினமாகக் கொண்டாடினர்கள். அந்த முதல் சுயராஜ்ய தினத்துக்கு ஏற்பாடு செய்த தமிழ் இளைஞர்களில் ஒருவர் நெல்லையப்பர். வ. உ. சி. யுடன் இருந்த அவர், திருநெல்வேலியில் சுயராஜ்ய தின ஊர்வலத்தில் கலந்துகொண்டார்.

தூத்துக்குடியில் வெள்ளையர் ஆதிக்கத்தை ஒடுக்க வ. உ. சி. வெள்ளையர்களின் பட்ளர்கள் வேலை நிறுத்தம் செய்யக் காரணமானர். இதிலும் நெல்லையப்பருக்குப் பங்கு உண்டு.

திருநெல்வேலி சுயராஜ்ய தினக் கொண்டாட்டத்தை ஒரு கலவரம் என்று விவரித்து, சிதம்பரம்பிள்ளை, சுப்பிரமணிய சிவா, நெல்லையப்ப பிள்ளை, சுதேசி பத்மநாபய்யங்கார் ஆகிய நால்வர் மீதும் அரசாங்கம் வழக்குத் தொடுத்தது. இந்த வழக்கில்சாட்சியம் சொல்வதற்காக பாரதியும் ஸ்ரீநிவாஸாச்சாரியாரும் சென்னையிலிருந்து திருநெல்வேலி போய் வந்தார்கள்.

இவ் வழக்கில் நால்வருக்கும் சிறைவாசம் விதிக்கப்பட்டது. சிறையிலிருந்து விடுதலையடைந்த பின் நெல்லையப்பர் ஒரு வருஷம் தலை மறைவாக இருந்து, கோவைச் சிறையிலிருந்த வ. உ. சி. யுடன் ரகசியத் தொடர்பு கொண்டு, சிறு சிறு துண்டுக் காகிதங்களில் வ. உ. சி. தரும் செய்திகளைப் பெற்று அவரது திட்டங்களை நிறைவேற்றி வந்தார்.

இதன் பிறகு புதுவை சென்று பாரதியின் "இந்தியா" பத்திரிகையில் சிறிது காலம் உதவியாசிரியராக இருந்தார். பாரதி இவரைப் பரிவுடன் "தம்பீ" என்றழைப்பார். இவர் சிறந்த கவி, நல்ல பத்திரிகாசிரியர் என்று பாரதி கருதினர். "நெல்லையப்பருக்கு நன்கு மதிப்பு" என்ற பாரதி அளித்த சிபார்சுக் கடிதம் பாரதியின் அபிப்பிராயத்தை எடுத்துக் காட்டுகிறது.

புதுவையிலிருந்து சென்னை வந்த நெல்லையப்பர், பாரதியின் கவிதைகளைத் தொகுத்து, 1917-ல் பாரதியின் காலத்திலேயே, "நாட்டுப் பாட்டு" என்ற நூலாகவெளியிட்டார். இதன் இரண்டாம் பதிப்பு 1919-ல் வெளி வந்தது.

"தேசிய கீதங்கள்" என்று பெயரிட்டு விற்றால் பாரதி கவிதைகளை அரசாங்கம் தடுத்துவிடும் என்றே நெல்லையப்பர் "நாட்டுப் பாட்டு" என்று பெயர் கொடுத்தாராம். அரசாங்கம் புத்தகத்தில் என்னென்ன கவிதைகள் வெளி வரும் என்று கேட்டது. அவர்களிடம் சொல்லி அனுமதி பெற்ற கவிதைகள் தவிர, அனுமதி பெறாத சில பாடல்களையும் தனியாக அச்சடித்து நூலில் ரகசியமாய்ச் சேர்த்து விற்றார் நெல்லையப்பர்!

"லோகோபகாரி", "பாரதி", "நாரதர்" "திராவிடப் பத்திரிகை", திரு. வி. க. வின் "தேச பக்தன்" ஆகிய அக்காலத்திய பத்திரிகைகளிலும் நெல்லையப்பர் உழைத்திருக்கிறர். 1921-ல் "தேசபக்தன்" ஆசிரியர் வ. வே. சு. அய்யர் சிறை செய்யப்பட்ட சமயம் நெல்லையப்பர் அப்பத்திரிகையின் ஆசிரியரானர். பின்னர் "லோகோபகாரி"யின் ஆசிரியரும் அதிபருமாகி, அப்பத்திரிகை மூலம் பாரதி எழுத்துக்களைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்துவதிலும் இணையற்ற தொண்டு புரிந்தார்.

எளிய தமிழில் பெரிய விஷயங்களை எழுதித் தமிழ்ப் பத்திரிகை வசன நடையை வளர்த்தவர்களில் நெல்லையப்பரும் ஒருவர். சிறுசிறு வாக்கியங்களால் எவரும் புரிந்து கொள்ளக்கூடிய சொற்களால் அவர் "லோகோபகாரி"யில் எழுதி வந்த தலையங்கங்களும், "பாரி" என்ற புனை பெயரில் எழுதி வந்த நானுவிதக் குறிப்புகளும், "மண்ணெண்ணெய்ச் சனியனை" எதிர்த்தும், மகாத்மா காந்திக்காகவும் கதருக்காகவும் ஆதரவு தந்தும் அவர் எழுதிவந்த விஷயங்களும் முந்தின தலைமுறைத் தமிழ்ப் பத்திரிகை வாசகர்களின் அபிமானத்தைப் பெரிதும் கவர்ந்தன. தமது தமிழ்நடையைப் போலவே, வாழ்க்கையிலும் எளிமையைப் பேணுபவர் நெல்லையப்பர்.

பாரதி நூல்களை லட்சக் கணக்கில் அச்சடித்தால் மலிவாக இரண்டணு விலையில் விற்கமுடியும்; அப்போதுதான் கிராமங்களிலும் பாரதி பாடல் பரவும் என்று நெல்லையப்பர் வற்புறுத்துவார். இதை இன்னும் தமிழ்நாடு செய்யத் துணியவில்லை.

குழந்தையுள்ளம் படைத்த நெல்லையப்பர், பாரதியுடன் பழகிய பழம் பெரும் தேச பக்தர்களில் இன்னும் நம்முடனிருக்கும் வெகு சிலரில் ஒருவராவர். இவர் சென்னை, குரோம்பேட்டையில் வாழ்கிறர்.



**92. "சுதேசி" பத்மநாபய்யங்கார்:** 1908-ல் வ.உ.சி., சிவா, நெல்லையப்பர் முதலியோருடன் சிறை தண்டனை விதிக்கப்பெற்ற திருநெல்வேலித் தலைவர். ஆங்கிலப் பத்திரிகை நடத்தி சுதேசி இயக்கத்தைப் பரப்பியவர். (பிற்காலப் படம்.)



**93, 94. பரலி சு. நெல்லையப்பர்:** பாரதியின் நெருங்கிய நண்பர், "இந்தியா"வில் வேலை பார்த்தவர், சிறந்த கவிஞர், "லோகோபகாரி" பத்திராதிபர். (1939-ல் எடுத்த படம்.) நெல்லையப்பருக்கு பாரதி தந்த "நன்கு மதிப்பு"க் கடிதம் கீழே உள்ளது.

ஓம்

நன்கு மதிப்பு.

சக்தி துணை. புதுச்சேரி. ராக்ஷஸ வருஷம் ஐப்பசி, 25.

தமிழ்ப் பத்திரிகை நடத்தும் தொழிலில் ஸ்ரீ. ப. சு. நெல்லையப்ப பிள்ளை நல்ல திறமை யுடையவர் என்பது நானறிவேன். இவரை உதவியாகக் கொண்டு நடத்தப்படும் பத்திரிகையை ஜனங்கள் மிகவும் ஆதரிப்பார்களாதலால், அதற்கு நல்ல புகழும் லாபமும் உண்டாகுமென்பது என்னுடைய நம்பிக்கை.

சி. சுப்பிரமணிய பாரதி

ஸ்ரீமான் ப. சு. நெல்லையப்ப பிள்ளை
சித்தத்தில் [illegible]
[illegible]

ஓம்.

புதுச்சேரி
19 ஜூலை 1915

ஸ்ரீமான் தம்பியாகிய ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளைக்கு பராசக்தி நன்று காத்திடுக.

தம்பி — மாதத்துக்கு மாதம், வாரத்துக்கு வாரம், நினது மலர்ச்சி பெற்று வருவதைக் காண்கிறேன். நினது உள்ளக்கமலத்திலே பேரறிவாகிய உள்-ஞாயிற்றின் கதிர்கள் விரைவிலே தாக்கி நினக்கு நல்லின்பம் உண்டாகுமென்று கருதுகிறேன்.

" " "

நெஞ்சம் இளகி விரிவெய்தி விசாலமெய்தி அறிவிலே சுடர் ஏறுகிறது. நம்மிலும் மெலியாருக்கு நோய் இரங்கி அவர்களை நமக்கு நிகராகச் செய்து விட வேண்டுமென்று பாடுபடுதலே நாம் வலிமை பெறுதற்கு வழியாகும். வேறு வழியில்லை.

" " "

ஹா! உனக்கு ஹிந்தி, மராட்டி முதலிய வடநாட்டு பாஷைகள் தெரிந்திருந்தால், அந்த பாஷைப் பத்திரிகைகள் என்ன அற்புதமான புதுமை பெற்றுள்ளன



என்பதை நேரிடத் தெரிந்து கொள்ள முடியுமானால் — தமிழ் நாட்டிற்கு எத்தனை நன்மை யுண்டாகும்! தமிழ், தமிழ், தமிழ் — என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனால் புதிய புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் — தமிழில் ஏறிக் கொண்டே போக வேண்டும்.

" " "

தம்பி, — நான் ஏது செய்வேனடா! தமிழை விட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனை விட மற்றொரு ஜாதியான் அறிவிலும், வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு சம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது. தம்பி— உள்ளமே உலகம்.
ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே! நின்ற நிலையிலிருந்து கீழே விழாதபடி கயிறுகள் கட்டி வைத்துக் கொண்டு பிழைக்க முயற்சி பண்ணும் ஈ பழங்காலத்து மூடர்களைக் கண்டு உடல் குலுங்கச் சிரி.
உனக்குச் சிறகுகள் தோன்றுக. பறந்து போ.

95, 96. **நெல்லையப்பருக்குக் கடிதம்:** புதுவையிலிருந்து 1915 ஜூலை 19-ந் தேதி நெல்லையப்பருக்கு பாரதி எழுதிய இந்த நீண்ட கடிதம் பாரதிக்கு அப்போதிருந்த மன நிலையையும், உலகத் தொல்லைகளை மீறிச் சுடர்விட்டுப் பிரகாசித்த லட்சிய வேகத்தையும் நன்றாகக் காட்டுகிறது.

# வறுமையிற் செம்மை

**1910**-லிருந்து *1915* வரை பாரதிக்கு தீராத கடன் தொல்லைகள் ஒருபுறம், கற்பனு வேகத்தால் படும் அவஸ்தைகள் ஒரு புறம். குடும்பப் பொறுப்பை நிர்வகிக்க அவர் பெரும்பாடு பட்டிருக்கவேண்டும். ஆனல், வறுமையிலும் துன்பத்திலும் உற்ற துணை யாக செல்லம்மாள் இருந்தார்.

*1907*-ல் நின்று போன பாரதி-''சுதேச மித்திரன்'' தொடர்பு, *1915*-ம் ஆண்டில்தான் மீண்டும் ஏற்பட்டது. பல வருஷங்களுக்குப் பிறகு, *1915* ஜுன் *15*-ந் தேதிதான் முதன் முதலாக பாரதி கட்டுரை ஒன்று ''சுதேச மித்திர''னில் இடம் பெற்றது. அது முதல், பாரதி எழுதினுலும் எழுதாவிட்டாலும் மாதம் முப்பது ரூபாய் அனுப்புவதென ''மித்திரன்'' ஆசிரியர் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்கார் முடிவு செய்தார். இந்த முப்பது ரூபாய் அன்று முதல் இன்றளவும் பாரதி குடும்பத்துக்கு அனுப்பப்பட்டு வருவது, ''மித்திரன்'' செய்து வரும் இணையற்ற மௌனத் தொண்டாகும்.

*1915*-ல் பாரதிக்கு வறுமைப் பிணி எவ்வளவு கடுமையாக இருந்த தென்பதை அந்த வருஷம் அவர் எழுதியுள்ள குறிப்புகளிலிருந்தும் கடிதங்களிலிருந்தும் அறிகிறோம்.

ஜுலை மாதம் முதல் தேதி அவர் எழுதிய குறிப்பில், ''காலை கண் விழிக்கும் போதே 'பணம்' என்ற ஞாபகம்'' என்று எழுதுகிறார். மறுநாள், ஜுலை 2-ந்தேதி, எழுதிய குறிப்பில், ''வியாதி, பயம், சோம்பர். இன்று காலைப் பொழுதையும் இவை வந்து வீணுக்கிவிட்டன. செ—வழக்கம் போல் வந்தான். பரமேச்வரி, மகா சக்தி—உன்னிடத்தில் அமரத் தன்மை கேட்கிறேன். என்னை மனக் கவலையிலிருந்து விடுவிக்க வேண்டும்'' என்று வேண்டுகிறார்.

மேலும்—

''முதலாவது, எனக்கு என்மீது வெற்றி வரவேண்டும், குழந்தைக்கு ஜ்வரம் வந்தது. நினது திருவருளால் குணமாய்விட்டது. இரண்டு மாத காலம் இரவு பகலுமாக நானும் செல்லம்மாளும் புழுத் துடிப்பது போலத் துடித்தோம். ஊண் நேரே செல்லவில்லை இருவருக்கும். உறக்கம் நேரே வரவில்லை— இருவருக்கும். எப்போதும் சஞ்சலம். பயம், பயம், பயம்! சக்தி, உன்னை நம்பித்தானிருக்கிறோம். நீ கடைசியாகக் காப்பாற்றிருய். உன்னை வாழ்த்துகிறேன்.

''கடன்காரர் தொல்லையும் அத்துடன் வந்து கலந்தது. வைத்தியனுக்குக் கொடுக்கப் பணமில்லை. குழப்பம், குழப்பம்—தீராத குழப்பம்! எத்தனை நாட்கள்! எத்தனை மாதங்கள்! எத்தனை வருஷங்கள்!

''பராசக்தி, ஓயாமல் கவிதை எழுதிக் கொண்டிருக்கும்படி திருவருள் செய்ய மாட்டாயா? கடன்களெல்லாம் தீர்ந்து, தொல்லையில்லாதபடி என் குடும்பத்தாரும் என்னைச் சார்ந்த பிறரும் வாழ்ந்திருக்க, நான் எப்போதும் உன் புகழை ஆயிர விதமான புதிய புதிய பாட்டுக்களில் அமைக்க விரும்புகிறேன். உலகத்தில் இதுவரை எங்குமில்லாதபடி அற்புதமான ஒளிச் சிறப்பும் பொருட் பெருமையும் உடைய பாட்டொன்று என் வாயிலே தோன்றும்படி செய்யவேண்டும்.''

வீட்டுக்காரச் செட்டியாருக்கு ''எத்தனை நாள் பொய் வாயிதா, பொய் வாயிதா—தினம் இந்தக் கொடுமைதானு? சீச்சீ! பராசக்தி, உன்னை நான் நம்புவதை முற்றிலும் விட்டு, நிச்சயமாக நாஸ்திகனுய் விடுவேன், நீ என்னை அற்பத் தொல்லைகளுக்கு உட்படுத்திக் கொண்டே யிருந்தால்'' என்றும் பராசக்தியிடம் உரிமையுடன் மன்றுடுகிறார்.

ஆனல், பராசக்தியிடம் அசையாத பக்தி கொண்ட அவர், முடிவில், ''சொல்லு, மனமே சொல்லு! பராசக்தி வெல்க! பராசக்தி வெல்க!'' என்றே தமது அன்றைய குறிப்பை முடிக்கிறார்! எத்தனை தொல்லையிலும், எவ்வித சோதனையிலும் தெய்வ பக்தி அவரை விட்டகலவில்லை. துன்பக் கனலில் அவரது பக்தி புடமிட்டு மெருகேறுகிறது.

*1915*-ம் வருஷம். அதே ஜுலை மாதம், *19*-ந்தேதி பாரதி தமது ''அருமைத் தம்பி'' நெல்லையப்பருக்கு எழுதிய நீண்ட கடிதம் அப்போது அவருக்கிருந்த வறுமையையும், வறுமைக்கு மேலாகச் சுடர் விட்டுப் பிரகாசித்த லட்சிய வேகத்தையும் நன்ருகக் காட்டுகிறது.

எதிர்ப்பக்கங்களில் முழுதும் வெளியாகியுள்ள அந்தக் கடிதம் ஒரு கடித இலக்கியமாக விளங்குகிறது.

## "பற! பற!—மேலே, மேலே, மேலே"

**து**ன்பத்தின் நடுவே இன்பம் என்பதற்கு பாரதியின் இந்த நீண்ட கடிதம் சிறந்த இலக்காக விளங்குகிறது. வாழ்வில் எவ்வளவோ இன்னல்கள் இருந்தும் அவைகளில் அமுங்திப் போகாமல் லட்சியச் சிறகுகள் கொண்டு மேலே மேலே பறந்து சென்றது கவியின் உள்ளம். நெல்லையப்பருக்கு எழுதியுள்ள இந்த நீண்ட கடிதத்தில் கடைசி ஒரு பாரா மட்டுமே அவருக்குள்ள வாழ்க்கைச் சங்கடங்களைக் குறிப்பிடுகிறது. கடிதத்தின் பாக்கி பகுதிகள் யாவும் கவிஞனது மனோ எழுச்சி சிறகெடுத்துப் பறப்பதையே காட்டுகிறது.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்" என்று வாயாரப் பாடிய கவிஞர், பிற மொழிகள் பெற்றுவரும் வளர்ச்சியைக் கண்டு தமிழில் அத்தகைய வளர்ச்சி இல்லையே என்று மனம் குமுறினர். "ஹா! உனக்கு ஹிந்தி, மராட்டி முதலிய வடநாட்டு பாஷைகள் தெரிந்திருந்து, அந்தப் பாஷைப் பத்திரிகைகள் என்ன அற்புதமான புதுமை பெற்றுள்ளன என்பதை நேரிடத் தெரிந்துகொள்ள முடியுமானல் தமிழ்நாட்டிற்கு எத்தனை நன்மையுண்டாகும்! தமிழ், தமிழ், தமிழ்—என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனல் புதிய புதிய செய்தி, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக்கொண்டே போகவேண்டும்," என்று நெல்லையப்பருக்கும் அவர்மூலம் பிற தமிழர்களுக்கும் உபதேசிக்கிருர்.

தமிழ்நாட்டில் வீதிதோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டு, அவைகளில் நவீன கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வளர வேண்டும் என்ருர் கவிஞர். ஜாதி பேதம் என்ற நாசப் பூண்டை அடியோடு ஒழிப்போம் என்ருர். பெண்ணுக்கு விடுதலையைப் பேச்சளவிலின்றிச் செயலளவிலும் காட்டுவோம் என்ருர். தொழில்கள் வளரவேண்டும், தொழில் செய்பவன் தாழ்ந்தவனென்று கருதுவது முட்டாள்தனம் என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினர். மேலும்—

"தம்பி—நான் ஏது செய்வேனடா! தமிழை விட மற்ருெரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்ருெரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு ஸம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்ருெரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது. தம்பி, உள்ளமே உலகம். ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே!"

பாரதி இந்தக் கடிதம் எழுதிய சமயம் அவர் வீட்டில் செல்லம்மாள், சகுந்தலா மூவரே இருந்தனர். மூத்த பெண் தங்கம்மாள் காசியில் வளர்ந்துவந்தாள்.

மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியின் மனைவியார் சகுந்தலாவுக்கு ஒரு மைசூர் வெள்ளி கிருஷ்ண விக்ரகம் தந்திருந்தார். திடீரென ஒரு நாள் அது காணுமற்போயிற்று. அன்று முதலே சகுந்தலா ஜுரத்தினல் பீடிக்கப்பட்டு இரண்டு மாத காலம் மிகுந்த கவலையை உண்டாக்கினள்.

நோய்க் கிருமிகள் என்ருலே பாரதிக்கு பயம் அதிகம்.

"பாப்பாவைத் தொட்டுவிட்டுக் கையைக் கழுவாவிட்டால் உள்ளே போகவிடமாட்டார். ஏதோ ஒரு மருந்தை ஒரு பாத்திரத்தில் வைத்து அதில் கையைக் கழுவு என்பார். எதைத் தொட்டாலும் அந்த மருந்தின் நாற்றம்!"—இவ்வாறு செல்லம்மாள் கூறியுள்ளார்.

இரண்டாவது வாரம், சகுந்தலாவுக்கு ஜுரம் அதிகமாயிருந்த சமயம் நடந்த ஒரு சம்பவத்தையும் செல்லம்மாள் விவரித்திருக்கிருர்:

"இரவு எட்டு மணி இருக்கும். இவர் (பாரதி) காய்ச்சல் குச்சியை வாயில் வைத்தார். ஐந்து நிமிஷம் கழித்து எடுத்துப் பார்த்தால் அளவு மீறி இருந்தது. மறுபடி வைக்கலாம் என்று உதறினர். அது கை நழுவிக் கீழே விழுந்து சுக்கல் சுக்கலாக ஆகிவிட்டது. கை நடுக்கம்! மனத்தில் பயம்!......இரவெல்லாம் தூங்காமல் 'சக்தி, சக்தி' என்று கதறினர். காலையில் ஜுரம் குறைந்தது."

தமிழ்ச் சொல்லுக்குப் புதுப் புது சக்தி பிறக்கவேண்டும் என்ற துடிப்பும் பாரதிக்கு இந்தச் சமயம் இருந்தது. வாரத்தில் மூன்று நாள் பேசாமல் இருந்து, எழுத்து வேலையில் முனைந்தார் அவர். இது ஒரு விதத்தில் நல்ல பலன் தந்தது. "சுதேசமித்திர"னுக்கு பாரதி ஒழுங்காக எழுதவாரம்பித்தார்.

"புதிய சொல்—அதாவது 'ஓம்' என்பதைப் போல் தமிழில் ஒரு பதம் கண்டுபிடிக்க வேண்டும்" என்று பாரதி மௌன விரதமிருந்து வந்தார். இந்த லட்சியத்தையே அவர் "சொல்" என்ற பாடலில் ("தேவர் வருகவென்று சொல்வதோ?" என்று ஆரம்பிப்பது) பாடியுள்ளார். "சொல் ஒன்று வேண்டும். தேவ சக்திகளை நம்முள்ளே நிலைபெறச் செய்யும் சொல் வேண்டும்" என்பது இப்பாடலின் உப-தலைப்பு.

பக்கம் — 3

பழி! பழி!— மேலே, மேலே, மேலே.

" "

தம்பி — தமிழ்நாடு வாழ்க என்றெழுது.

தமிழ்நாட்டில் நோய்கள் தீர்க என்றெழுது.

தமிழ்நாட்டில் வீதிதோறும் தமிழ்ப்பள்ளிக் கூடங்கள் மலிக என்றெழுது.

அந்தத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களிலே நவீன-கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வளர்க என்றெழுது.

தமிழ் நாட்டில் ஒரே ஜாதி தான் உண்டு. அதன் பெயர் தமிழ் ஜாதி அது ஆர்ய ஜாதி என்ற குடும்பத்திலே தலைக்குழந்தை என்றெழுது.

ஆணும் பெண்ணும் - ஜீவனின் இரண்டு கண்கள் என்றெழுது.

ஒன்றிலொன்று தாழ்வில்லை என்றெழுது.

பெண்ணைத் தாழ்மை செய்தோன் கண்ணைக் குத்திக் கொண்டான் என்றெழுது.

பெண்ணை அடைத்தவன் கண்ணை அடைத்தான் என்றெழுது.

தொழில்கள், தொழில்கள் தொழில்கள் என்று கூவு.

பக்கம் - 4.

தப்பாக வேதம் சொல்பவனைக் காட்டிலும் நன்றாகச் சிரைப்பவன் மேல்நிலைத்தானென்று கூவு.

வியாபாரம் வளர்க, யந்திரங்கள் பெருகுக.

முயற்சிகள் ஓங்குக. ஸங்கீதம், சிற்பம், யந்திரநூல், பூமிநூல், வானநூல், இயற்கை நூலின் ஆயிரம் கிளைகள் இவை தமிழ் நாட்டிலே மலிந்திடுக என்று முழங்கு.

சக்தி, சக்தி, சக்தி, என்று பாடு.

தம்பி — நீ வாழ்க.

" " "

உனது கடிதம் கிடைத்தது. குழந்தைக்கு உடம்பு சௌக்யமில்லாமல் இருந்தபடியால் உடனே "ஜவாப்" எழுத முடியவில்லை. குழந்தை புதிய உயிர் கொண்டது. இன்று உன் விலாஸத்துக்கு "நாட்டுப் பாட்டுக்களை" அனுப்புகிறேன். அவற்றைப் பகுதி பகுதியாக உனது பத்திரிகையிலும் ஞானபானுவிலும் ப்ரசுரம் செய்வித்திடு. "புதுமைப் பெண்" என்றொரு பாட்டு அனுப்புகிறேன். அதைத் தவறாமல் உடனே அச்சிட்டு அதன் கருத்தை விளக்கி எழுதுக. எங்கேனும், எப்படியேனும் பணம் கண்டுபிடித்து ஒரு நண்பர் பெயரால் எனக்கு அனுப்புக. தம்பி — உனக்கேனடா இது கடமை யென்று தோன்றவில்லை? நீ வாழ்க.

உன்னன்புள்ள,
பாரதி

97, 98. **கடித இலக்கியம்:** நெல்லையப்பருக்கு பாரதி எழுதிய நீண்ட கடிதத்தின் பிற்பகுதி. புதிய புதிய செய்தி, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக்கொண்டே போகவேண்டும் என்று பொறி பறக்கும் மொழிகளில் வற்புறுத்துகிறார் கவிஞர்.

ஓம் சக்தி

(அ)

# ஜய பேரிகை.

பல்லவி.

ஜய பேரிகை கொட் டடா — கொட் டடா!
ஜய பேரிகை கொட் டடா!

சரணங்கள்

பய மெனும் பேய் தனை யடித்தோம் — பொய்மைப்
பாம்பைப் பிளந் துயிரைக் குடித்தோம்
வியனுல கனைத்தையு மமுதென நுகரும்
வேத வாழ்வினைக் கைப் பிடித்தோம் — (ஜய பேரிகை) (1)

இரவியி னொளி யிடைக் குளித்தோம் — ஒளி
இன்னமு தினை யுண்டு களித்தோம் —
கரவினில் வந் துயிர்க் குலத்தினை யழிக்கும்
காலன் நடு நடுங்க விழித்தோம் — (ஜய பேரிகை) — (2)

காக்கை, குருவி யெங்கள் ஜாதி — நீள்
கடலு மலையு மெங்கள் கூட்டம்
நோக்குந் திசை யெலாம் நாமன்றி வேறில்லை
நோக்க, நோக்கக் களி யாட்டம் — (ஜய பேரிகை) — (3)

99. **முத்து முத்தான எழுத்துகள் :** வெகு வேகமாய் எழுதினாலும் அடித்தல் திருத்த லின்றி, வார்த்தைக்கு வார்த்தை பகுதி விகுதி பிரித்து, முத்து முத்தான எழுத்துகளில் எழுது வார் பாரதி. தமிழ்நாட்டுக் குழந்தைகள் எழுதிப் பழகிப் பின்பற்றத் தகுந்த கையெழுத்து.

## "ஜயபேரிகை கொட்டடா!"

"**பு**கை நடுவினிலே தீயிருக்கும் புதுமையைக் கண்டோமே" என்று பாடிய கவிஞர் அதைத் தம் நித்திய வாழ்விலும் அனுபவித்தே பாடினார். கடன் தொல்லை, நோய் நொடிகள், குடும்பத் தொல்லை, கற்பனை வேதனை என்று பல்வேறு கஷ்டங்களான புகைக்கு நடுவேயும் பாரதி பராசக்தியின் பொன்மேனியைக் கண்டு போற்றிப் பரவசமடைந்தார்.

"ஜயபேரிகை கொட்டடா!" என்ற சின்னஞ் சிறிய பாடல் அவரது அடங்காத நம்பிக்கையூற்றுக்குச் சிறந்த சான்று.

"பயமெனும் பேய்தனை யடித்தோம்" என்று முழங்குகிறது இப்பாடலின் முதல் பா. பயம்தான் மனிதனுக்கு முதல் எதிரி என்று பாரதி பன்முறை பலவிடங்களில் வற்புறுத்தியுள்ளார்.

"அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே! உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும், அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே!" என்று ஓரிடத்தில் பாடுகிறார். "பாரதி அறுபத்தா"றில், "மரணத்தை வெல்லும் வழி" என்ற பாவில்,

**"அச்சத்தை வேட்கைதனை அழித்துவிட்டால்**
**அப்போது சாவுமங்கே அழிந்துபோகும்"**

என்று உறுதியுடன் கூறுகிறார்.

"காக்கை குருவி எங்கள் ஜாதி" என்று "ஜயபேரிகை" பாட்டின் மூன்றாவது பாவில் வரும் சிந்தனை பாரதியின் விரிந்த நோக்குக்கு ஓர் உதாரணம். ஆனால், இந்த விரிந்த நோக்கை கவிதையளவில் கொட்டி முழக்குவது எளிது; வாழ்வில்—செயலில் செய்து காட்டினால் எவ்வளவு சிரமமாக இருக்கும்? பாரதி இதைச் செய்யும் துணிவும் பெற்றிருந்தார்.

புதுவையில் பாரதி குடும்பம் நடத்திய சமயம் நிகழ்ந்த சம்பவங்கள் பலவற்றை மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் புதல்வி யதுகிரியம்மாள் தமது "பாரதி நினைவுகள்" நூலில் விவரித்திருக்கிறார்.

ஒரு நாள் சிறுமி யதுகிரி பாரதி வீட்டுக்குச் சென்றார். அங்கே செல்லம்மாள் தவிர வேறு யாருமில்லை; செல்லம்மாளும் வழக்கம் போல் கலகலப்பாயில்லை. விசாரித்ததில், வழக்கமான திரவியக் கோளாறும் பாரதி செய்ததோர் 'தர்ம கைங்கரிய'முமே செல்லம்மாளின் வருத்தத்துக்குக் காரணமென்று தெரிந்தது.

வழக்கமாக அன்று "சுதேசமித்திர"னுக்கு அனுப்பவேண்டிய கட்டுரையை பாரதி அனுப்பவில்லையாம். காலையில் குளித்து, காப்பி குடித்து, வெற்றிலை பாக்கு எல்லாம் கிரமமாக ஆனபிறகு, மேஜைமேல் காகிதம் பேனா மை புட்டி எல்லாவற்றையும் வைத்துச் சென்றார் செல்லம்மாள். அதாவது பாரதி ஒழுங்காக உட்கார்ந்து "சுதேசமித்திர"னுக்குக் கட்டுரை எழுதும்படி தூண்டுதல் இவை.

பாரதி மேஜையில் உட்கார்ந்திருக்க, செல்லம்மாள் சமையலுக்கு அரிசியை எடுத்து, முறத்தில் போட்டுக் கல் பொறுக்கி, முறத்தோடு வைத்துவிட்டு உள்ளே ஏதோ காரியமாய்ப் போனார். திரும்பி வந்து பார்க்கும் போது, முறத்தில் இருந்த அரிசியில் கால் பங்கு முற்றத்தில் வாரி யிறைந்து கிடந்தது; குருவிகள் கூடிக் கொத்திக் கொண்டிருந்தன; பாரதி பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தார்! அரிசியை எடுத்துக் குருவிகளுக்குப் போட்டிருந்தார் அவர்!

செல்லம்மாளுக்கு அழுகை வந்துவிட்டது. இதைக் கண்ட பாரதி, "வா, செல்லம்மா, இந்தக் குருவிகளைப் பார்! எவ்வளவு சந்தோஷமாக இருக்கின்றன! நாமும் அவைகளைப்போல் ஏன் இருக்கக்கூடாது?" என்றாரும்!

இது தனிப்பட்ட ஒருநாள் சம்பவமல்ல. பிற்காலத்தில், புதுவையைவிட்டு சென்னை திருவல்லிக்கேணியில் குடி யிருந்தபோதும் இப்படியே சமையலுக்கான அரிசியை காக்கை குருவிக்கும் அணிலுக்கும் அளித்து விடுவாராம் பாரதி!

* * *

பாரதியின் மணி மணியான கையெழுத்துக்கும் இப்பாடலின் பிரதி ஓர் உதாரணமாகும். முத்து முத்தான எழுத்துகள், வார்த்தையின் இடையிலேயே இடம் விட்டுப் பிரித்து எழுதும் அழகு, சிந்தையினின்று வரும் தெளிந்த கருத்துகள் அடித்தல் திருத்தலின்றிக் காகிதத்தில் உருப்பெறுதல் - இவைகளையெல்லாம் கவனிக்கும்போது, பாரதியைப் பற்றிப் பல விஷயங்களை உணருகிறோம்.

பாரதிக்கு பல சமயம் எழுதுவதற்கு நல்ல காகிதம், பேனா, மைகூடக் கிடைத்ததில்லை. அப்படிப்பட்ட நிலையிலும் அவரது எழுத்துகள் இவ்வளவு அழகும் உருவச் சிறப்பும் பெற்றிருப்பது இந்த எழுத்துகளின் மேன்மையை மேலும் அதிகரிக்கின்றன.

தமிழ்நாட்டுக் குழந்தைகள் தங்கள் கையெழுத்துப் படிவதற்கு பாரதியாரின் முத்து எழுத்துகளைப் பார்த்தெழுதிப் பழகலாம். அழகுற எழுதிப் பழகினால், எதையும் அழகுறச் செய்து முடிக்கும் பழக்கமும் ஏற்படும்.

# தந்திக் காகிதத்தில் ரசீது!

புதுவையிலிருந்த 'சுதேசி' தலைவர்களுக்கு நிலையான வருவாய் கிடையாது. முதல் மகா யுத்தம் நடந்த காலத்தில் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் புதுச்சேரியில் ஒரு பங்களாவை வாடகைக்கு வாங்கிக் கொண்டு அங்கே முகாம் போட்டிருந்தார்கள். 'சுதேசி'கள்மீது கண்காணிப்பும், அவர்களுக்கு உதவி கிடைக்காமல் செய்யும் நடவடிக்கைகளும் அதிகமாகிவிட்டன.

பாரதி, அய்யர், அரவிந்தர், ஸ்ரீநிவாஸாச்சாரி முதலிய 'சுதேசி'த் தலைவர்களின் பணக் கஷ்டத்தைச் சொல்லி முடியாது. தபால் சரியாகக் கிடைக்காது; பிரிட்டிஷ் போலீஸார் வழிமறித்து விடுவார்கள். மணியார்டர்கள் வந்து சேரவே சேரா. புதுச்சேரி மக்களோ போலீஸ் பயத்தினால் உதவிசெய்யப் பயந்தார்கள். அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து சில்லறையாக சாமான்கள் கடன் வாங்கிக்கொள்வதுகூட அருமையாகிவிட்டது.

பண விஷயத்தில் பாரதியார் நிலைமைதான் மிக மோசம். வ. வே. ஸு. அய்யர் கட்டுப்பாடானவர்; கையில் கொஞ்சம் பணம் வைத்துக்கொண்டு சிக்கனமாகச் செலவு செய்யும் சுபாவமுள்ளவர். ஸ்ரீநிவாஸாச்சாரியாரும் பாதகமில்லை. உள்ளூரில் தொடர்பு கொண்டவர்; ஆதலால் அவருக்குப் புதுவையில் தெரிந்த நண்பர்கள் இருந்தனர். அரவிந்தரின் நிலைமையும் சுமாராக இருந்தது. கையில் கொஞ்சம் பணம் இருந்தால் நல்லதென்று சிக்கனமாயிருக்கும் யோசனையே இல்லாத பாரதியாரின் நிலைமைதான் ரொம்பவும் சங்கடமாயிருந்தது.

தப்பித் தவறி பாரதிக்கு யாராவது பணம் அனுப்பினாலும், கர்ணனைப்போல அதைக் கொடையில் செலவழித்து விடுவார் அவர்.

கும்பகோணத்துக்குக் கிழக்கே நாச்சியார் கோயில் என்றொரு ஊர். அதில் டி. ஜி. கிருஷ்ணசாமிப் பிள்ளை என்றொரு சித்திரக்காரர் இருந்தார். இவர் சில சிறு புத்தகங்கள் கூடப் பிரசுரம் செய்திருக்கிறார். கிருஷ்ணசாமிப் பிள்ளை பாரதியாருடைய புத்தகங்களை விற்பனை செய்ய விரும்பி, பாரதியாருக்கு நூற்றைம்பது ரூபாய் அனுப்பினார். பணம் எப்படியோ போலீஸின் கண்களுக்குத் தப்பி பாரதியார் கைக்குப் போய்ச் சேர்ந்தது.

இந்த நூற்றைம்பது ரூபாய்க்கு பாரதியார் அழகான தமிழில் ஒரு ரசீது எழுதியனுப்பினார். கடிதம் எழுதுவதில் பாரதியாரின் நடையே தனி அழகு வாய்ந்தது. கூடிய வரையில் தமிழிலேயே எழுதுவார்; தமிழ்ச் சொற்களையே உபயோகிப்பார்; வாக்கியங்கள் வெகு நயமாய் இருக்கும்.

*1918* ஜூலை 9-ந் தேதியிட்டு, கிருஷ்ணஸ்வாமி பிள்ளைக்கு பாரதி அனுப்பிய ரசீதின் வாசகம் வருமாறு:

"தங்களுக்கும் எனக்கும் பின்னே எழுதிக் கொள்ளக்கூடிய உடன்படிக்கைப்படி ஏற்படப்போகிற புஸ்தக வியாபார ஸம்பந்தமாக இப்போது தங்களிடம் முன்பணமாகப் பெற்றுக் கொள்ளுகிற ரூபாய் நூற்றைம்பது (ரூ. *150*)க்கு இதை ஏற்புச்சீட்டாகவும் கடன் பத்திரமாகவும் அங்கீகரிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன்—சி. சுப்பிரமணிய பாரதி."

இந்த ரசீது ஒரு தந்திக் காகிதத்தின் பின் பக்கத்தில் எழுதப்பட்டிருப்பது கவனிக்க வேண்டிய விஷயம். புதுவையில் நல்ல காகிதம், மை இல்லாமல் பாரதி தவித்த சமயங்கள் பல. ஆனால், காகிதம் இருந்தாலும் இல்லாவிட்டாலும், கையில் கிடைத்த காகிதத்தில் எழுதும் வழக்கம் அவருக்கு உண்டு. இந்த ரசீது எழுத நினைத்த சமயம் தந்திக் காகிதம்தான் கிடைத்தது போலும்!

* * *

புதுவையிலிருக்கையில் "சுதேசமித்திர"னுக்கு பாரதியார் எழுதியனுப்பிய விஷயங்கள் அவ்வப்போது "மித்திர"னில் வெளியாயின. ஆனால், பத்திரிகையில் வெளியானவை தவிர புத்தக வடிவமாக அக்காலத்தில் வெளிவந்த சில விஷயங்களும் இருந்தன.

"பாரத ஜன சபை" என்ற ஒரு பெரிய நூலை பாரதியார் "சுதேசமித்திர"னுக்கு எழுதியனுப்பினார். இது இந்திய தேசீய காங்கிரஸ் மகா சபையின் சரிதம்; சுமார் ஐம்பது அத்தியாயங்கள் கொண்ட நூல்.

இந்திய விஞ்ஞான அறிஞர் ஜகதீச சந்திர வசு எழுதிய "ஜீவ வாக்கு" என்ற தாவர நூலும் தமிழில் பாரதியாரால் மொழி பெயர்க்கப்பட்டு சிறு நூலாக 2 அணா விலையில் விற்கப்பட்டது.

தாகூரின் சிறு கதைகள் சிலவற்றையும் ஆங்கிலத்திலிருந்து தமிழ்ப்படுத்தினார் பாரதி. வங்காளியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, அதிலிருந்து தமிழ்ப்படுத்தப்பட்ட போதிலும் பாரதியின் மொழி பெயர்ப்பு முதநூலின் அழகுடன் விளங்குகிறதே தவிர, மொழி பெயர்ப்பாகவே தோன்றவில்லை.

"பாரத ஜன சபை", "ஜீவ வாக்கு", தாகூர் கதைகள் முதலியவை பாரதியின் நூல் தொகுப்புகளில் இன்னும் சேர்க்கப்படவில்லை.

The ACCURACY of telegrams is not guaranteed; the Sender must accept ALL RISKS arising from non-delivery, mutilations or delays. Applications regarding Refunds of the cost of this telegram should be addressed to the Deputy Accountant-General, Telegraph Check Office, Calcutta, and Complaints respecting it to the Director-General of Posts & Telegraphs, Traffic Branch, Calcutta, within two months of the date of the telegram. The receipt granted for the telegram should be enclosed with the reference. In addresses consisting of a name prefixed to a Registered or Abbreviated address or when a telegram is addressed to one person at the house of another whose name is also given, the words "Care of" or the symbol c/o should be inserted after the name of the Addressee. There is always risk of a telegram not being delivered if a full and definite address is not given in the first instance.

ADDITIONAL SPACE FOR STAMPS



100. **தந்திக் காகிதத்தில் ரசீது!** தமது நூல்கள் விற்பனை சம்பந்தமாக டி. ஜி. கிருஷ்ணஸாமி பிள்ளை என்ற அன்பர் அனுப்பிய ரூபாய் 150-க்கு பாரதி தந்த ஏற்புச் சீட்டு. ஒரு தந்திக் காகிதத்தின் பின்புறம் இதை எழுதித் தந்துள்ளார் பாரதி! (காகிதத்தில் கீழ்ப்புறம் உள்ளது பிள்ளையவர்களின் படம்; அவரே இக் கடிதத்தில் ஒட்டி வைத்திருந்தது.) கிருஷ்ணஸாமி பிள்ளை நீண்ட காலமாய் பாரதி யிடம் லயித்தவர். இந் நூலில் 29, 37 பக்கங்களில் வெளியாகியுள்ள "எங்கள் காங்கிரஸ் யாத்திரை, "புதிய கட்சியின் கொள்கைகள்" பிரசுரங்களும் பிள்ளையவர்கள் வைத்திருந்தவையே.



101. **தம்பியும் தங்கையும்:** பாரதியின் தம்பி சி. விசுவ நாதனும் தங்கை லக்ஷ்மி அம்மாளும். (சுமார் 1934-ல் எடுத்த படம்.) பாரதி பாடல்களை உணர்ச்சி, சங்கீதம் இரண்டும் சேர்த்துப் பாடப் பழகியவர் விசுவநாதன். தற்சமயம் மானு மதுரையில் இருக்கிறார்.

102. **யதுகிரி அம்மாள்:** பாரதி இருந்த காலத்தில் அவருடைய அன்புக்குப் பாத்திர மான சிறுமியாக இருந்த யதுகிரி அம்மாள். மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் புதல்வி. தாம் கண்ட பாரதியை "பாரதி நினைவுகள்" என்ற சுவைமிக்க நூலாக எழுதியுள்ள இவ் வம்மையார் 1954-ல் காலமானார். இப் படம் 1947-ல் எடுத்தது.





103. **மைத்துனர்:** பாரதியின் மைத்துனர் (செல் லம்மாளின் தமயனார்) க. ரா. அப்பாதுரை. தேச பக்தி கொண்டவர்; தேசிய நடவடிக்கைகளுக்காக வும் பாரதிக்குத் துணை நின்றதற்காகவும் போஸ்ட் மாஸ்டர் வேலையிலிருந்து நீக்கப் பெற்றவர்; ஜமீன் தார்கள் சகவாசம் உள்ளபடியால் அலங்காரத் தலைப்பாகை கட்டும் பழக்கம் கொண்டவர்.

**1918-ம்** வருஷம் முதல் மகாயுத்தம் முடியும் தறுவாயில் பாரதியின் மைத்துனர் அப்பாதுரை புதுவைக்கு வந்திருந்தார். பாரதியிடம் அன்பும் மரியாதையும் கொண்டவர் அப்பாதுரை. தாமும் தேசபக்தி கொண்டவர். அரசாங்க வேலையை ராஜிநாமா செய்தவர். பாரதி புதுவையை விட்டு வெளிக்கிளம்புவதெப்படியென்ற ஆலோசனைகளில் அப்பாதுரையும் கலந்துகொண்டார்.

1918-ம் வருஷம் பாரதிக்குப் பல விதமான எண்ணங்கள் இருந்து வந்தன. புதுவை வாழ்வு சலித்து விட்டது. ஒரே ஊரில் அடைபட்டுக் கிடப்பதை விடுத்து, தாயகமான சென்னை மாகாணத்தில் சஞ்சரிக்க விரும்பினர். ஒரு சமயம் யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் மன்னார்குடியை யடுத்த நாகை என்ற சிறு கிராமம் (நாகப்பட்டணம் அல்ல) வரை ரகசியமாய்ச் சென்று வந்தாராம். பாரதியாருக்குத் தலை வழுக்கை. அதை மறைக்க எப்போதும் தலைப்பாகை இருக்கும். நாகை போன போது அவர் தம் தலைப்பாகையை எடுத்துவிட்டார்; மீசையைச் சிரைத்துவிட்டார். அவ்வளவுதான், அவர் முகத்தை நன்ருக அறிந்த எல்லைப் போலீஸ் கூட அவரை அடையாளம் கண்டு கொள்ளவில்லை!

பாரதி திடீரென்று கிளம்பிவிட்டது செல்லம்மாளுக்கும் தெரியாது.

பாரதி மாறு வேஷத்தில் போன பத்துப் பதினைந்து தினங்கள் கழித்து மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் வீட்டுக்கு யாரோ ஒரு புது மனிதர் வந்தார். தந்தையுடன் அவர் பேசிக்கொண்டிருக்கையில் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் குமாரி யதுகிரி மாடிக்குப் போனுள். பாரதியுடன் நெருங்கிப் பழகிய அவளால்கூட அந்தப் புது மனிதர் பாரதியே என்று கண்டு கொள்ள முடியவில்லை!

பாரதி இவ்வாறு மாறு வேஷத்தில் பிரிட்டிஷ் இந்தியாவுக்குப் போன சமயம்தான் "பாருக்குள்ளே நல்ல நாடு" என்ற பாட்டைக் கவனம் செய்தாராம். ரயிலில் ஒரு பிச்சைக்காரப் பெண் ஹிந்துஸ்தானிப் பாட்டொன்றைப் பாட அதே மெட்டில் பாரதி இப்பாட்டை அமைத்தாராம்.

1918-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 3-ம் தேதி பாரதி தம் இளைய சகோதரர் சி. விசுவநாதனுக்கு ஒரு கடிதம் எழுதினர். அச்சமயம் அவர் மனதிலிருந்த கவலைகளை இக்கடிதம் வெளிப்படுத்துகிறது. முழுக் கடிதமும் வருமாறு:—

ஓம் சக்தி

C. Subramania Bharati Pondicherry,
3rd August, 1918

ஸ்ரீமான் விசுவநாதனுக்குப் பராசக்தி துணை செய்க. உன்னுடைய அன்பு மிகுந்த கடிதம் கிடைத்தது. அதைப் படித்து அதினின்றும் உன்னுடைய புத்திப் பயிற்சியின் உயர்வைக் கண்டு சந்தோஷ மடைந்தேன். தந்தைக் கப்பால் நீ என்னை முக்கிய சகாயமாகக் கருதுவதுமுறையே. இதுவரை உன்னை நேரே பரிபாலனம் செய்வதற்குரிய இடம் பொருளேவல் எனக்கு தெய்வ சங்கற்பத்தால் கிடையாமல் போய்விட்டது. அதையெண்ணி இப்போது வருந்துவதிலே பயனில்லை. எனினும் இயன்றவரை விரைவாகவே எனக்கு நற்காலமும் அதனல் உன் போன்ருருக்குக் கடமைகள் செய்யும் திறமும் நிச்சயமாக வரும். உன் கடிதத்தில் கண்டபடி நீ இங்கே என்னைப் பார்க்கவரும் காலத்தை மிக ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்—சீக்கிரம் வா. தங்கை ஸ்ரீலக்ஷ்மி சில வருஷங்களுக்கு முன் எட்டயபுரத்துக்கு வந்திருந்த காலத்தில் என்னைக் கொஞ்சம் பணம் அனுப்பச் சொல்லியிருந்தாள். அப்போது என் கையில் பணம் இல்லாதபடியால் அனுப்பவில்லை. அதுமுதல் என்மீது கோபங் கொண்டு எனக்கு ஒரு வார்த்தைகூட எழுதாமலிருக்கிருள். என்னை மன்னிக்கும்படிக்கும் எனக்கு அடிக்கடி காயிதங்களெழுதும்படிக்கும் நீ அவளை அழுத்தமான பிரார்த்தனை செய்யும்படி வேண்டுகிறேன். "தம்பியுள்ளோன் படைக்கஞ்சான்" என்ற வாக்கியத்தின் உண்மையை உன் விஷயத்தில் நம்பியிருக்கலாமென்றே நம்புகிறேன்.

எனக்கு இனிமேல் இங்கிலீஷில் காயிதம் எழுதாதே. நீ எழுதும் தமிழ் எத்தனை கொச்சையாக இருந்தபோதிலும் அதைப் படிக்க நான் ஆவலுறுவேன். கொச்சைத் தமிழ்கூட எழுத முடியாவிட்டால் ஸம்ஸ்கிர்தத்திலே காயிதம் எழுது. திருப்பயணம் வி. ராமஸ்வாமி அய்யங்கார் என்னிடம் "விநாயகர் ஸ்தோத்திரம்" (தமிழ் நூல்) அச்சிட வாங்கிக்கொண்டு போனர். இன்னும் அச்சிட்டனுப்பவில்லை. மேலும், அவர் "பாஞ்சாலி சபதம்" அச்சிடும் சம்பந்தமாகப் பணம் சேகரித்துப் பட்டணத்துக்கனுப்புவதாகச் சொன்னர். அங்ஙனம் அனுப்பமுடியுமானல் உடனே புதுச்சேரியில் எனது விலாசத்துக்கனுப்பும்படி ஏற்பாடு செய்.

அது மாத்திரமேயன்றி, "விநாயகர் ஸ்தோத்திரம்" வேலையை விரைவில் முடித்துப் புஸ்தகங்களனுப்பும்படி சொல்லு. உடம்பை யெண்ணிப் பயப்படாதே. அடிக்கடி பால் குடி. ஜலத்தை எப்போதும் காய்ச்சிக் குடி. வேறு எந்த விஷயத்துக்கும் கவலைப்படாதே. பொறுமையாலும் பயமின்மையாலும் இவ்வுலகத்தில் மனிதன் தேவதன்மை அடைகிருன். அந்நிலைமை உனக்கு மஹாசக்தி அருள் செய்க.

உனதன்புள்ள ஸஹோதரன்,
சி. சுப்பிரமணிய பாரதி.

# புதுவை வாச முடிவு

முதல் மகாயுத்தம் முடிந்து ஒன்பதே நாட்களில் பாரதி பகிரங்கமாகப் புதுவையை விட்டுச் சென்னை மாகாணத்துக்குத் திரும்புவதாகத் தீர்மானித்துவிட்டார். அதற்கு முன்பாக, பாரதியின் மாமனார் இறந்துவிட்டதனால்,' செல்லம்மா தம் ஊராகிய கடயத்துக்குச் சென்று, ஒரு மாதம் கழித்துத் திரும்பி வந்தார். திரும்பி வந்தது முதல் பிரிட்டிஷ் இந்தியாவுக்குப் போய்விட வேண்டும் என்ற ஆசை அவருக்கிருந்தது. உற்றார் உறவினரும் பாரதிக்குக் கடிதம் எழுதினார்கள்.

*1918*-ம் வருஷம் நவம்பர் மாத வாக்கில், ஒரு நாள் பாரதி தம்பதிகளுக்குள்ளே ஏதோ பிணக்கு. செல்லம்மாள் குழந்தைகளை அழைத்துக்கொண்டு, முக்கியமான சாமான்களுடன் கடயத்துக்குக் கிளம்பிச் சென்றார், ஆனால் ஒரு வாரத்தில் தம் தமயன் அப்பாதுரையுடன் செல்லம்மாள் திரும்பி வந்துவிட்டார்.

*1918*-ம் வருஷம் நவம்பர் மாதம் *20*-ந் தேதி பாரதி, செல்லம்மாள், அப்பாதுரை மூவரும் வில்லியனூர்ப் பக்கம் குதிரை வண்டியில் போனார்கள். *6*-வது மைலில் ஒரு ஹெட் கான்ஸ்டேபிள் அவரைக் கைது செய்திருப்பதாகச் சொன்னார். வாரண்ட் தன்னிடமில்லை யென்றும், அவரைக் கைது செய்ய வாரண்ட் தேவையில்லை யென்றும் அவர் சொன்னார். பாரதியை திருப்பாதிரிப்புலியூர் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு சென்று, போலீஸ் ரிபோர்ட் சகிதம் கடலூர் ஸ்டேஷனரி ஸப் மாஜிஸ்ட்ரெட் ஆர். சக்கரவர்த்தி அய்யங்கார் முன் ஆஜர் செய்தார்கள். பாரதியை இரண்டு நாள் கடலூர் ஸப் ஜெயிலில் வைத்திருக்கும்படி மாஜிஸ்ட்ரேட் உத்தரவிட்டார்.

கடலூர் வக்கீல்கள் சடகோபாச்சாரியார், நடராஜய்யர் என்ற இருவர் பாரதியை ஜாமீனில் விடவேண்டு மென்று கோரினார்கள். பாரதி ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டிடம் அன்றே அனுப்பப்படுவாரென்றும், தம்மிடம் ஜாமீன் மனு கொடுப்பதில் பயனில்லை என்றும் மாஜிஸ்ட்ரேட் கூறினார்.

செல்லம்மாளும் அப்பாதுரையும் புதுவை திரும்பி, வீட்டைக் காலிசெய்துகொண்டு, பாக்கிகளைத் தீர்த்து குழந்தைகளுடன் திருநெல்வேலியில் அம்பா சமுத்திரம் தாலுகாவிலுள்ள தங்கள் ஊரான கீழக்கடயம் போய்ச் சேர்ந்தார்கள்.

*24-11-1918* ஞாயிற்றுக் கிழமைதான் சிதம்பரத்தில் முகாம் செய்த ஜில்லா மாஜிஸ்ட்ரேட் மிஸ்டர் ஸ்டோடார்ட்டிடம் பாரதி ஆஜர் செய்யப்பட்டார். வக்கீல்களும் ஜாமீன் மனு சமர்ப்பித்தார்கள். பாரதியை சென்னை சர்க்கார் உத்தரவுப்படியே கைது செய்திருப்பதாயும், யுத்தம் ஆரம்பித்த சமயம் அமுலுக்கு வந்த "இந்தியா பிரவேசச் சட்ட"த்தின்படியே நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதென்றும், அன்றே சென்னை சர்க்காருக்கு ரிப்போர்ட் அனுப்புவதாகவும் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் கூறினார்.

கடலூர் ஸப் ஜெயில் இருப்பதற்கு வசதியானதல்ல வென்றும், ஸிவில் ஜெயிலிலாகிலும் வேறு எந்த இடத்திலாகிலும் பாரதியை வைத்திருப்பது தகுமென்றும், சமீபத்தில் காய்ச்சல் நோயினால் மிகவும் க்ஷீணப்பட்டிருக்கும் பாரதிக்கு இயன்ற சௌகரியங்கள் செய்துதர வேண்டுமென்றும் வக்கீல்கள் கேட்டுக்கொண்டார்கள். அவ்விதமே செய்வதாக ஜில்லா மாஜிஸ்ட்ரேட் வாக்களித்து, கடலூர் ஸிவில் ஜெயில் சூபரிண்டெண்டுக்கு கடிதம் எழுதியனுப்புவதாகவும் சொன்னார்.

இரண்டொரு தினங்களில் சென்னை போலீஸ் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல் மிஸ்டர் ஹானிங்டன் கடலூர் ஜெயிலில் பாரதியைக் கண்டு பேசினார். அப் பேச்சிலிருந்து பாரதி நிபந்தனையின்றி விடுவிக்கப்படுவாரென்று ஊகிக்கப்பட்டது.

*1918* டிஸம்பர் *16*-ந் தேதி "சுதேச மித்திரன்" தினசரியில் தலையங்கத்துக்கு அடுத்தாற்போல் பின்வரும் செய்தி வெளிவந்தது :

**ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதிக்கு விடுதலை**

"கடலூர் ஜெயிலிலிருந்து ஸ்ரீமான் சுப்ரமணிய பாரதி விடுதலை யடைந்துவிட்டதாகவும், அவர் திருநெல்வேலி வழியாய் கடயம் போய்ச் சேர்ந்துவிட்டதாகவும், அவருடைய உடம்பு அசௌகரியமாயிருப்பதால் பாபநாசத்திலாவது குற்றாலத்திலாவது கொஞ்ச காலம் தாமதிப்பாரென்றும் அவர் திருநெல்வேலியைக் கடந்து சென்றபொழுது அவருடைய சிநேகிதர்கள் ரயில்வே ஸ்டேஷனில் எதிர்கொண்டழைத்து சந்தோஷ ஆரவாரம் செய்ததாகவும் தந்தி கிடைத்திருக்கிறது."

பாரதி விடுதலையான சரியான தேதி இதிலிருந்து தெரியவில்லை. ஆனால் டிஸம்பர் *14*-ந் தேதி என்று ஊகிக்கலாம். அப்படியென்றால் நவம்பர் *20* முதல் டிஸம்பர் *14* வரை *24* நாட்கள் சிறைவாசம் அனுபவித்திருக்கிறார் பாரதி.

பாரதி புதுச்சேரிக்குப் போனது *1908*-ம் வருஷம் ஜூலை அல்லது ஆகஸ்ட் மாதத்தில். அங்கிருந்து வெளியேறியது *1918*-ம் வருஷம் நவம்பர் மாதம் *20*-ந் தேதி. பாரதியின் புதுவை அஞ்ஞாதவாசம் பத்தேகால் வருஷம் நடந்தது.



104. **கடயம் நித்திய கல்யாணி கோயில்:** செல்லம்மாளின் ஊராகிய கடயத்திலுள்ளது. வனப்பு மிக்க சூழ்நிலை கொண்டது. "அன்னையே நித்திய கல்யாணியே" என்று பாரதியால் பாடப் பெற்ற அம்மன்.

105. **பாரதி இருந்த இல்லம்:** கடயத்தில் பாரதி வசித்துவந்த வீடு. அக்கிரகாரத்துக் கோடியில் ஒதுப்புறமாய் உள்ளது. தம் சீர்திருத்தக் கருத்துகளினால் அக்கிரகாரத்தில் வசிக்க முடியாமல் இவ் வீட்டுக்குக் குடி மாறினார் கவிஞர்.

ஓம் சக்தி

கடையம்
21- டிஸம்பர் - 1918.

ஸ்ரீமான் நெல்லையப்ப பிள்ளைக்கு நமஸ்காரம்.

நான் க்ஷேமமாகக் கடையத்துக்கு வந்து சேர்ந்தேன். இங்கு நான் வந்து பல நாள் — பாப்பா பாட்டு, முரசு, நாட்டுப் பாட்டு, இவற்றின் பிரதி வேண்டுமென்று பல இடங்களிலிருந்து கடிதங்கள் கிடைத்தன.

என் வசம் ஒரு புஸ்தகங்கூட இல்லை. உன் வசம் ஒரு புஸ்தகமேனும் இருந்தால் அனுப்பக் கூடிய தொகை ஏதேனும் அனுப்பும்படி பிரார்த்திக்கிறேன்.

"பாஞ்சாலி சபதம்" — இரண்டு பாகங்களையும் சேர்த்து ஒன்றாக அச்சடிப்பதற்கு [illegible] எது வரை நடந்திருக்கிறதென்று விஷயம் தெரியவில்லை.

இனிமேல் சிறிது காலம் வரை நான் ப்ரசுரம் செய்யும் புஸ்தகங்களை போலீஸ் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் காட்டி அவருடைய அனுமதி பெற்றுக் கொண்டு — பிறகே ப்ரசுரம் செய்வதாக ராஜாங்கத்தாருக்கு நான் ஒப்பந்தம் எழுதிக் கொடுத்திருக்கிறேன். ([illegible])

[illegible] "பாஞ்சாலி சபதம்", வெளிப்படுத்துகிற பக்ஷத்திலும், ப்ரசுரம் செய்பவன் [illegible] நீ யாதலாலும் இதை அச்சிடு முன் ஒப்பந்த விதியை அநுசரித்தல் அவசியமில்லை யென்று தோன்றுகிறது.

அப்படியே [illegible] [illegible]. [illegible] — [illegible] [illegible]. ஆதலால், [illegible] [illegible] செய்யக் கூடியவர் [illegible] நீயே ஒரு [illegible] அனுமதி பெற்றுக் கொள்ளலாம்.

பாப்பா பாட்டு முதலியன, உன் வசம் இல்லாவிட்டால் உடனே அவற்றை மறுபடி ப்ரசுரம் செய்யும் விஷயம் [illegible]. இவை முதலிய எல்லா விஷயங்களைப் பற்றியும் உன்னிடம் நேரே பேச விரும்புகிறேன்.

பக்கம் 2

இதன் பொருட்டாக இக் கடிதம் கண்டவுடன் இங்கு நீ நேரே புறப்பட்டு வந்து சேரும்படி வேண்டுகிறேன். ஸ்ரீமான் — வெங்கட கிருஷ்ணையங்கார் முதலிய எனது நண்பர்களுக்கு என் நமஸ்காரத்தைத் தெரிவிக்கும்படி பிரார்த்திக்கிறேன். இன்னும் ப்ரசுரம் செய்ய வேண்டிய நூல்கள் என் வசம் பல இருக்கின்றன. நான் இப்போது ப்ரிடிஷ் இந்தியாவுக்கு வந்து விட்டபடியால் எனது ப்ரசுரங்களுக்குப் பணம் கொடுக்கக் கூடிய நண்பர்களும் பலர் இருக்கிறார்கள். உன்னை ஸஹாய புருஷனாகக் கொண்டால் ப்ரசுர காரியம் [illegible] யாவும் நடைபெறுமென்று தோன்றுகிறது.

எதற்கும், நீ உடனே புறப்பட்டு இங்கு வந்து சேரும்படி ப்ரார்த்திக்கிறேன்.

உனக்கு மஹா சக்தி அமரத் தன்மை தருக.

உனதன்புள்ள
சி. சுப்பிரமணிய பாரதி

**106, 107. கடயத்திலிருந்து கடிதம்:** 1918-ம் ஆண்டு இறுதியில் புதுவையிலிருந்து வந்து, கைதாகி, விடுதலை பெற்று, பிறகு, நேரே கடயம் சென்றதும் நண்பர் நெல்லையப்பருக்கு பாரதி எழுதிய கடிதம். அரசாங்கத்துக்குத் தாம் கொடுத்துள்ள வாக்குறுதி, தமது எதிர்காலத் திட்டங்கள் முதலியவற்றை இக்கடிதத்தில் கவிஞர் குறிப்பிடுகிறார்.

# கடயத்தில்

கடயம் போய்ச் சேர்ந்த இரண்டு தினங்களில் பாரதி "மித்திரன்" ஆசிரியர் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்காருக்கு ஒரு வந்தனக் கடிதம் எழுதினர். இது "மித்திர"னில் 19-12-1918 பிரசுரமாயிற்று :

கடயம்,
டிசம்பர் 17.

ஸ்ரீமான் ரங்கசாமி அய்யங்காருக்கு நமஸ்காரம். ஞாயிற்றுக்கிழமை (15ங் தெதி) இரவு நான் இவ்வூருக்கு வந்து சேர்ந்தேன். என் விடுதலையின் பொருட்டாகத் தாங்களும் மற்ற நண்பர்களும் மிகவும் சிரத்தையுடன் பாடுபட்டதற்கு என் மனப்பூர்வமான நன்றி தெரிவிக்கிறேன்.

ஸ்ரீமதி அனி பெஸண்ட், ஸ்ரீ மணி அய்யர், ஸ்ரீ சி. பி. ராமசாமி அய்யர் முதலாக என் விடுதலை விஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொண்ட தங்களுடைய மித்திரர்களுக்கெல்லாம் எனது நன்றி தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

தங்களன்புள்ள
சி. சுப்பிரமணிய பாரதி.

டிஸம்பர் 21ங் தேதியன்று கடயத்திலிருந்து பரலி சு. நெல்லையப்பருக்கு எழுதிய கடிதத்தில் தமது நூல்களைப் பிரசுரிப்பதில் அரசாங்கத் தடைகள் ஏதும் இல்லையென்றும், டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஹானிங்டன் தம்மிடம் அன்புடன் நடந்து கொள்வதாயும் பாரதி எழுதுகிறார். ஏற்கனவே "நாட்டுப் பாட்"டை வெளியிட்ட நெல்லையப்பரே "பாஞ்சாலி சபத"த்தையும் வெளியிடலாமென்று யோசனை சொல்கிறார். தமது நூல்களைப் பிரசுரிக்கும் காரியத்தில் தீவிரமாக ஈடுபட வேண்டியதன் அவசியத்தையும் வற்புறுத்துகிறார்.

* * *

கடயம் என்பது, திருநெல்வேலியிருந்து தென்காசி போகும் ரயில் பாதையில், தென்காசிக்கு நான்கு ஸ்டேஷன்கள் முன்னே உள்ள ஒருசிற்றூர். செல்லம்மாளின் சொந்த ஊர் இது. கடயம் இயற்கையழகு நிறைந்த இடம். ஊருக்கு வெளியே அழகானதோர் சிற்றுறு உண்டு. அதற்கப்பால் எலுமிச்சைத் தோட்டங்களும் மாந்தோப்புகளும் பசுமையான நெல் வயல்களும் இருக்கும். ஊருக்கு மேற்கே எங்கு பார்த்தாலும் ஒரே நீலமலைச் சிகரங்கள். அவைகளிலிருந்து விழும் அருவிகளும் சலசலவென்றோடும் ஓடைகளும் பாரதிக்குப் பேரானந்தம் அளித்தன.

கடயத்திலிருந்து இரண்டு மைல் தூரத்தில் நித்திய கல்யாணி அம்மன் கோவில் இருக்கிறது. மலையடிவாரத்தில், ஒரு கற்பாறையிலுள்ள சுனையும், பாறைகளுக்கு நடுவே ஓர் அழகான ஏரியும் இருக்கின்றன. ஏரிக்கரையில் ஒரு பத்திரகாளி கோயில். அதனருகே ஒரு பழைய ஆலமரம். இந்த ஆலமரக் காட்சியை "ஜகத் சித்திரம்" என்ற நாடகத்தில் பாரதி வர்ணித்திருக்கிறார்.

நித்திய கல்யாணி அம்மனைப்பற்றியும்பாரதி பாடியிருக்கிறார். "நின்னையே ரதியென்று நினைக்கிறேனடி" என்று தொடங்கும் பாட்டிலும், "பூலோக குமாரி" என்ற பாட்டிலும், "உஜ்ஜயினி நித்திய கல்யாணி" என்ற நவராத்திரிப் பாட்டிலும் நித்திய கல்யாணி அம்மனைப் போற்றியிருக்கிறார்.

இயற்கை யழகு மிகுந்திருந்தாலும் கடயம் நாகரிக வாசனையற்ற பிற்போக்கான கிராமம் தான். அதிசீக்கிரத்தில் கடயம் வாசம் பாரதிக்குப் புளித்துப் போய்விட்டது. புதுச்சேரியே தேவலை என்றுகூட ஆகிவிட்டது!

கடயத்தில் முதலில் ராமசாமி கோயிலுக்கெதிரேயுள்ள அக்கிரகாரத்தில் தமது மைத்துனர் வீட்டில் பாரதி தம் குடும்பத்தாரோடு வசித்தார். ஆனல் பாரதிக்கு பிராமணரல்லாதார், முஸ்லிம்கள் முதலியோரும் நண்பர்களாயிருந்தனர். ஒரு சமயம் ஓர் உற்சவத்தில் சைவப் பிள்ளைமார்களுடன் உட்கார்ந்து போஜனமருந்தினர் பாரதி. அது கடயம் பிராம்மண சமூகத்துக்கு மன்னிக்க முடியாத குற்றமாகி விட்டது. அவரை வீட்டில் சேர்க்கக் கூடாதென்றும், உண்ண உணவு அளிக்கக் கூடாதென்றும் உத்தரவு போட்டார்கள். செல்லம்மாளும் குழந்தைகளும் ஊரார் நிர்ப்பந்தத்தினல் பாரதிக்கு உணவளிக்க இயலாது போனர்கள். புதுவையில் நிர்க்கதியாய்ப் பட்டினி கிடந்த பாரதி கடயத்தில் நிர்ப்பந்தமாய்ப் பட்டினி கிடக்கும்படி நேர்ந்தது.

பாரதி மூன்றுநாள் பட்டினியிருந்தார். பசி தாங்காமல் தவிக்கும் அவரைக் கண்டு இரக்கப்பட்டுக் குடியானவன் ஒருவன் அவருக்கு ஏதோ தின்பண்டங்கள் கொண்டு கொடுத்தான். பாரதி இறந்து விடுவாரோ என்று பயந்து அக்கிரகாரத்தினரும் உணவு கொடுத்தார்கள். ஆனல் ஆகாரம் செல்லவில்லை;வாந்தியெடுத்து அவஸ்தைப்பட்டார் கவிஞர்.

வழக்கம் என்ற கட்டுப்பாட்டை சிறிதும் மதிப்பவரல்ல பாரதி. கழுதையைத் தொடக்கூடாது என்று தமிழ்நாட்டில் ஒரு குருட்டு வழக்கமுண்டு. கடயத்தில் ஒருநாள் அழகான கழுதைக்குட்டி யொன்று பாரதியின் வீட்டெதிரே மேய்ந்துகொண்டிருந்தது. அதன் அழகில் லயித்து அதைக் கட்டியணைத்தார் கவி. ஊரார் அவரை கேலி செய்தனர்.

# காந்திஜீயைச் சந்தித்தது

ரௌலட் சட்ட எதிர்ப்பு இயக்கத்தை ஆரம்பிக்குமுன் நாட்டின் பல பாகத்திலு முள்ள தலைவர்களைக் கலந்துகொண்டார் மகாத்மா காந்தி. இது சம்பந்தமாகக் காந்திஜீ சென்னைக்கும் வந்தார், *1919* மார்ச்சில்.

சென்னையில் காந்திஜீ ராஜகோபாலாச்சாரி யாரின் விருந்தினராக, கதீட்ரல் ரோடு இரண்டாம் நம்பர் பங்களாவில் தங்கியிருந் தார். காந்திஜீயின் இந்த விஜயத்தின்போது பாரதியும் அவரும் சந்தித்தார்களென வ. ரா. கூறுகிறார். ராஜாஜியும் இதை ஊர்ஜிதம் செய் கிறார். இந்தச் சந்திப்பு வெகு சுவாரஸ்யமான சம்பவம்.

பகல் இரண்டு மணி சுமார். காந்திஜீ ஒரு கட்டிலில் மெத்தையில் சாய்ந்திருந்தவண்ணம் தம் காரியதரிசி மகாதேவ் தேசாய்க்கு ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார். சேலம் பாரிஸ்டர் ஆதிநாராயண செட்டியார் குடகுக் கிச்சிலிப் பழங்களை உரித்துப் பிழிந்து காந்திஜீ அருந்துவதற்காகப் பழரசம் தயாரித்துக் கொண்டிருந்தார். அறையில் ஒரு பக்கம், "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்காரும், எஸ். ஸத்தியமூர்த்தியும் சுவரில் சாய்ந்து நின்றுகொண்டிருந்தார்கள். எதிரே ராஜாஜியும் மற்றும் சிலரும் நின்று கொண்டிருந்தனர். அறையில் வாயில்காப்போ னாக வ. ரா. நின்றுகொண்டிருந்தார். யாரை யும் உள்ளே விடவேண்டாம் என்று கண்டிப் பான உத்தரவு.

அச்சமயம் பாரதி அங்கே வந்தார். புதுவை யில் தமக்கு அறிமுகமான வ. ரா. நிற்பதைக் கண்டு "என்ன ஓய்!" என்று சொல்லிக் கொண்டே அறைக்குள் நுழைந்துவிட்டார்.

பாரதி நேரே காந்திஜீயை வணங்கிவிட்டு, அவர் பக்கத்தில் மெத்தையில் உட்கார்ந்து விட்டார். "மிஸ்டர் காந்தி! இன்று மாலை ஐந்தரை மணிக்குத் திருவல்லிக்கேணி கடற் கரையில் ஒரு கூட்டத்தில் பேசப் போகிறேன். அக்கூட்டத்துக்குத் தாங்கள் தலைமை வகிக்க முடியுமா?" என்று கேட்டார்.

அன்று மாலை தமக்கு என்ன அலுவல் என்று காந்திஜீ மகாதேவ தேசாயைக் கேட்டார். வேறு ஒரு அலுவல் இருந்தது.

"இன்றைக்கு நான் வர இயலாது. தங்கள் கூட்டத்தை நாளைக்கு ஒத்திப் போட முடி யுமா?" என்றார் காந்திஜீ.

"முடியாது. நான் போய் வருகிறேன். மிஸ்டர் காந்தி, தாங்கள் ஆரம்பிக்கப் போகும் இயக்கத்தை நான் ஆசீர்வதிக் கிறேன்" என்று சொல்லிவிட்டு பாரதி வெளியே போய்விட்டார்.

பாரதி போனதும், காந்திஜீ, "இவர் யார்?" என்று வினவினார். யாரும் பதில் சொல்ல வில்லை; ராஜகோபாலாச்சாரியார்தான், "இவர் எங்கள் தமிழ் நாட்டுத் தேசியக் கவி" என்று அழகுறச் சொன்னார்.

இதைக் கேட்ட காந்தியடிகள், "இவரை பத்திரமாய்ப் பாதுகாக்கவேண்டும். இதற்குத் தமிழ் நாட்டில் எவரும் இல்லையா?" என்றா ராம்.

இந்தச் சம்பவம் பாரதியின் சுபாவத்தையும் காந்திஜீயின் சுபாவத்தையும் நன்கு காட்டு கிறது. மற்றவர்களெல்லாம் பயபக்தியுடன் நின்றுகொண்டிருக்கையில் சரிசமமாய் காந்தி ஜீயுடன் பாரதி அமர்ந்தது அங்கிருந்த பலருக்குத் திகைப்பை யளித்திருக்கக்கூடும். மேலும், காந்திஜீயின் இனி வரும் இயக்கத் துக்கு பாரதி ஆசீர்வாதம் செய்ததும் அங் குள்ளோருக்கு விசித்திரமாகப் பட்டிருக்க லாம். ஆனால், காந்திஜீக்கோ அப்படித் தோன்றவில்லை. இந்த மேதையைக் காப்பது உங்கள் கடமையல்லவா என்று ஒரே வாக்கி யத்தில் தமிழ் நாட்டுக்கு அதன் கடமையை நினைவுறுத்திவிட்டார். காந்திஜீயைச் சந் தித்த அந்தக் காலத்தில் பாரதி வேதாந்தம் முற்றிய பித்த சந்நியாசிபோல் இருந்தாரென ராஜாஜி சொல்கிறார். உடலிலும் மனதிலும் அவர் அனுபவித்த வேதனை அவரை அப்படி ஆக்கிவிட்டன போலும்!

பாரதி *1908*-ம் ஆண்டிலேயே மகாத்மா காந்தியின் மேன்மையை நன்கறிந்திருந்தார். *1919-20*-ல் அவர் பாடியுள்ள "வாழ்க நீ எம் மான்" என்ற பாடலிலும் இது புலனா கிறது.

தமிழ் நாட்டுத் தலைவர்களில் பாரதியாரை வெகு நாளாய் அறிந்தவர் ராஜகோபாலாச் சாரியார். *1906*-ல் சூரத் காங்கிரஸுக்குச் சென்ற சென்னைப் பிரதிநிதிகளில் அவர் ஒருவர். பாரதியார் புதுச்சேரியில் இருந்த சமயம் அவரைப் போய்ப் பார்த்து வந்திருக் கிறார் ராஜாஜி. புதுவையிலிருந்து திரும்பி, மீண்டும் சென்னைக்கு வந்தபோது அவரை ரயில் ஸ்டேஷனில் வரவேற்றவர்களில் ராஜாஜி ஒருவர். காந்திஜீயிடம், "இவர் எங்கள் தமிழ்நாட்டுத் தேசியக் கவி" என்று ரத்தினச் சுருக்கமாகச் சொல்லித் தமிழர் மானத்தைக் காத்த இவரே, பாரதி கால மான பிறகு, சில பாரதி பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து மகாத்மா காந்தியின் "யங் இந்தியா" பத்திரிகையில் பாரதியின் மேதையை விளம்பரப்படுத்தி னார். அப்போது வருஷம் *1925*.

108. **காந்திஜீயும் ராஜாஜீயும்:** பாரத விடுதலை இயக்கத்தின் அஸ்திவாரமும் அரணுமான இவ்விரு தலைவர்கள் 1919-ல் கூடிய சமயம் அவர்களுக்கு பாரதி வலிய ஆசீர்வதித்தார். (இது 1945-ல் எடுத்த படம்.)



109. **விடுதலைக்கு உதவியவர்கள்:** 1918 முடிவில் பாரதியை அரசாங்கம் விடுதலை செய்ய உதவிய பெருமக்களில் இருவர். "மித்திரன்" ஆசிரியர் ரங்கஸ்வாமி அய்யங்கார், அரசியல் தலைவர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர். (சுமார் 1936-ல் எடுத்த படம்.)



110. **அன்னி பெஸண்ட்:** அரசியலில் பாரதிக்கும் தமக்கும் வேற்றுமை இருந்தும் பாரதி விடுதலைக்கு உதவிய ஹோம் ரூல் இயக்கத் தலைவி அன்னி பெஸண்ட்.



111. **இரு நண்பர்கள்:** பாரதியின் ஆதிகால நண்பரும் தொழிலாளர் தலைவருமான வி. சக்கரை செட்டியாரும் (படத்தில் வலக்கோடி), நாவலர் ஸத்திய மூர்த்தியும் (இடக்கோடி). இவர்களுடன் ஆந்திரத் தலைவர் வி. வி. கிரியும் ஒரு தொழிலாளர் கூட்டத்தில் பேசுவதை இந்த 1936 படம் காட்டுகிறது.

**112, 113. சீட்டுக் கவிகள்:** எட்டயபுரம் சென்ற பாரதி 1919 மே 2-ம் தேதி மன்னருக்கு அனுப்பிய முதல் சீட்டுக் கவிகள். ஐந்து பாக்கள் கொண்ட இப் பாடல் தவிர, மற்றொரு சீட்டுக் கவியை மறுநாள் பாரதி அனுப்பியுள்ளார். இக் கவிகளில் தம் மங்காத புகழை அழுத்தம் திருத்த மாய்த் தெரிவிக்கிறார் கவி.

# எட்டயபுர மன்னருக்கு சீட்டுக் கவிகள்

கூடயத்திற்கு வந்த கொஞ்ச நாட்களில் பாரதி தாம் பிறந்த ஊராகிய எட்டயபுரத் துக்குப் போய் உற்றார் உறவினருடன் அள வளாவினர். உணர்ச்சி மிக்க வாலிபனாய், இளம் புருஷனாய் எட்டயபுரத்தை விட்டு 1904-ல் சென்ற பாரதி 15 வருஷங்களுக்குப் பின் எலும்பும் தோலுமாக, பழுத்த வேதாந்தி யாக, அதி தீவிரவாதியாகத் திரும்பியபோது, எட்டயபுர மக்களுக்கும் அவர் ஒரு விசித் திரப் பேர்வழியாகவே தோன்றினர்.

செல்லம்மாளுடன் கை கோத்துக்கொண்டு தெருவில் நடப்பவர், எட்டயபுரம் மண்ணில் இடறி விழுந்தபோது அதைப் புண்ணிய பூமி யென்று முத்தமிட்டவர், அரசாங்கத்துக்கு விரோதி, சமூக சீர்திருத்தம் என்று பேச்சள விலன்றிச் செயலிலும் காட்டும் துணிச்சலுள் ளவர் என்றெல்லாம் எட்டயபுர மக்கள் பார தியை ஏளனக் கண்களோடு பார்த்தார்கள்.

காசியிலிருந்து 1902-ல் எட்டயபுரம் திரும் பியபோது இருந்த மன்னர் காலமாகிவிட் டார். அவருக்கு வாரிசு இல்லாததால் அவரு டைய சிற்றப்பனும் இளம் பாரதியைப் பிரி யத்துடன் நடத்தியவரும் தமிழ்ப் பற்றுடைய வருமான வெங்கடேசுர ரெட்டப்ப பூபதி 1919-ல் எட்டயபுரம் மன்னராக இருந்தார்.

மன்னருக்கு பாரதியைப் பார்க்க வேண்டு மென்ற ஆசைதான். குழந்தையாகத் தாம் எடுத்துப் பாலித்த பாலகன் தமிழுலகம் போற்றும் பெருங் கவிஞனாக விளங்குவது அவருக்கு மனப் பூரிப்பையே கொடுத்தது. ஆனால் அந்தச் சிறுவன் ஒரு அரசியல் தலை வனுமாகி, பிரிட்டிஷ் ஆட்சியின் வைரியாக விளங்குவதுதான் மன்னருக்கு தர்ம சங்கட மாக இருந்தது.

பாரதி எட்டயபுரம் மன்னரைக் காண விரும்பி அவருக்கு இரண்டு சீட்டுக் கவிகள் அனுப்பினர். முதலில் 1919-ம் ஆண்டு மே மாதம் 2-ந் தேதி ஐந்து பாக்கள் கொண்ட சீட்டுக் கவியும், அடுத்தபடி மறுநாள் மே 3-ந் தேதி மூன்று பாக்கள் கொண்டதோர் சீட் டுக் கவியும் மன்னருக்கு எழுதியனுப்பினர் அவர். மேனாட்டு அறிஞரெல்லாம் என் கவி தையைப் போற்றுகின்றார், உனைக் காண நான் வந்தேன், இருள் போக்கும் சூரிய னைப்ப எனக் காண விரைகிலாயோ என்று பாரதி விடுத்த வேண்டுகோள்களுக்கு மன்ன ரிடமிருந்து பதில் இல்லை. பயம்!

அதன் பின்னும் பாரதி அதே ஆண்டு ஆகஸ்ட் மாதம் ஒரு கடிதம் எழுதி மன்னருக் கனுப்பினர்:

எட்டயபுரம்,
6 ஆகஸ்ட், 1919.

ஸ்ரீமான் மஹாராஜ ராஜ பூஜித மஹாராஜ ராஜ ஸ்ரீ எட்டயபுரம் மஹாராஜா, வெங்கடேசுர எட்டப்ப நாயக்க ஐயனவர்கள் ஸந்நிதானத் துக்கு சி. சுப்பிரமணிய பாரதி அநேக ஆசீர் வாதம்.

முன்பு கவிகேஸரி ஸ்ரீ ஸ்வாமி தீக்ஷிதரால் எழுதப்பட்ட 'வம்சமணி தீபிகை' என்ற எட்டய புரத்து ராஜ வம்சத்தின் சரித்திரம் மிகவும் கொச்சையான தமிழ் நடையில் பலவிதமான குற்றங்களுடையதாக இருப்பது ஸந்நிதானத்துக் குத் தெரிந்த விஷயமே.

அதைத் திருத்தி நல்ல, இனிய, தெளிந்த தமிழ் நடையில் நான் அமைத்துத் தருவேன். அங்ஙனம் செய்தால் அந் நூலை ராஜாங்கப் பாடசாலை களில் தமிழ்ப் பாடமாக வைக்க ஏற்பாடு செய்ய லாம். சில மாசங்களுக்கு முன் கடலூரில் என்னை விடுதலை செய்யுங் காலத்தில் விதிக்கப் பட்ட தடைகளெல்லாம் சமீபத்தில் நீங்கிவிட்ட தினின்றும், ஆங்கில ராஜாங்கத்தார் என்னிடம் பரிபூர்ணமான நல்லெண்ணம் செலுத்துகிறார் களென்பது தெளிவாகப் புலப்படும். எனவே அந் நூலை சர்க்கார் பள்ளிக்கூடப் பாடங்களில் சேர்க்கும்படி செய்தல் எளிதாகும்.

மேலும், நான் அதை எழுதுகிற மாதிரியை ஒட்டியும் என் பெயரை ஒட்டியும் அந் நூல் தமிழ் நாட்டில் வசன காவியத்துக்கோர் இலக்கியமாக எக்காலத்திலும் நின்று நிலவும்படி செய்யப்படும்.

அதை அரமனை அச்சுக் கூடத்திலேயே அடிக் கலாம். சந்நிதானத்தின் உத்தரவு கிடைத்ததற்கு மறுநாள் முதலாகவே அச்சுக்கூடத்தில் கோப்பு வேலை தொடங்கிவிடலாம். அன்றாடம் சேர்க்க வேண்டிய பகுதியை நான் முதல் நாள் எழுதிக் கொடுப்பேன். இக் கார்யத்தில் இவ்விடத்து ராஜ குடும்பத்துக்கு அழியாத கீர்த்தியும் தமிழ் மொழிக்கொரு மேன்மையும் பொருந்திய சரித் திர நூலும் சமையும்.

இது தொடங்குவதற்கு விரைவில் உத்தரவளிக் கும்படி ப்ரார்த்திக்கிறேன். நூலின் "காபிரைட்" அரமனைக்கே சேரும்.

சந்நிதானத்துக்கு மஹா சக்தி அமரத் தன்மை தருக.

சந்நிதானத்திடம் மிக்க அன்புள்ள,
சி. சுப்பிரமணிய பாரதி.

குறிப்பு: நான் இவ்வூரிலேயே ஸ்திரமாக வசிப்பேன். கைம்மாறு விஷயம் சந்நிதானத் தின் உத்தரவுப்படி. பாரதி

பிரிட்டிஷ் அதிகாரத்துக்கு அஞ்சிய மன் னர் பாரதியைப் பார்க்கத் துணியவில்லை, பார திக்கு பதில் ஏதும் தெரிவிக்கவில்லை. ஆனால் பாரதியின் கடிதத்தையும் சீட்டுக் கவிகளை யும் பலரிடம் படித்துக் காட்டி மகிழ்ந்தாராம்.

# செட்டி நாட்டில் கவியரசர்

தமிழ் நாட்டில் தனவணிக மக்கள் தமிழ்ப் பற்றுதலுக்குப் பெயர்போனவர்கள். கவியரசர் பாரதியிடமும் அவர்கள் மெய் யன்பு பூண்டதில் ஆச்சரியமில்லை.

புதுவையிலிருந்து திரும்பிக் கடயத்திலிருக் கும் பாரதியாரைச் செட்டி நாட்டுக்கும் அழைத்துவர வேண்டும் என்ற எண்ணம் 1919-ல் சில ஆர்வமிக்க தனவணிக இளைஞர் களுக்கு உதித்தது. கானாடுகாத்தானுக்கு வருமாறு வை. சு. சண்முகம் என்ற தன வணிக அன்பர் வேண்டிக் கொண்டதன் பேரில், சுப்பிரமணிய பாரதியார் 28-10-1919 அன்று காலை 10-30 மணிக்கு காரைக்குடியில் சிவன் செயல் ஊருணித் தென் கரையிலிருந்த மதுரை பஸ் ஸ்டாண்டில் வந்திறங்கினார். பல இளைஞர்கள் அவரை வரவேற்றனர்.

அன்று மாலை பாரதி கானாடுகாத்தான் போய்ச் சேர்ந்தார். அங்கே வை. சு. சண் முகம் இல்லத்தில் ஒன்பது நாட்கள் இருந் தார். கவிஞரின் தேவைகள் யாவும் அங்கு கவனிக்கப் பெற்றிருந்தன. அந்த ஊரிலேயே பாரதி இனித் தங்கி வசதியாய் வாழலாமென சண்முகம் கூறினார். பாரதியும் இசைந்து, செல்லம்மாவை அழைத்துவர ஒரு ஆளைக் கடயத்துக்கு அனுப்பினார். ஆனால் செல் லம்மா வரவில்லை. அதனால், மனைவியின்றி இங்கே வாழ இயலாதென்று, பாரதி 6-11-1919 அன்று கிளம்பிச் சென்றுவிட் டார். கானாடு காத்தானிலிருந்து அன்று மாலையே காரைக்குடி சென்றார்; பின்னர் கடயம் போனார்.

கானாடுகாத்தானில் வள்ளல் சண்முகத்தின் மீது பாரதி ஒரு பாடல் பாடியுள்ளார். இது இன்னும் வெளியிடப் பெறவில்லை. "மன்னர் மிசைச் செல்வர் மிசைத் தமிழ் பாடி யெய்ப் புற்று மனங் கசந்து பொன்னனைய கவிதை யினி வானவர்க்கேயன்றி மக்கட்புறத்தோர்க் கியோம்" என்று கொண்டிருந்த முடிபை வை. சு. சண்முகத்தின் வள்ளன்மை கண்டு மாற்றிக்கொண்டதாக இப்பாடலில் பாரதி குறிப்பிடுகிறார்.

கடயம் திரும்பும் வழியில் காரைக்குடி போன சமயம்தான் அந்நகர் ஹிந்து மதாபி மான சங்கத்தின்மீது வாழ்த்துப் பாடல் பாடினார் பாரதி.

செட்டி நாட்டு அன்பர்கள் பாரதிக்கு தேவையான பொருளுதவியும், அணிவதற்கு ஒரு கோட்டும், எழுதுவதற்கு மாணிக்கம் பதித்த ஒரு பவுண்டன் பேனாவும், அழகான வேலைப்பாடமைந்த ஒரு மரக் கைப் பெட்டி யும் அளித்தனர். இவைகளை பாரதி பத்திர மாய்க் கடயம் கொண்டு சேர்த்தார். ஆனால், பேனாவை நாராயணப் பிள்ளை என்ற நண்ப ருக்குக் கொடுத்துவிட்டார்!

இதற்கு இரண்டு மாதம் கழித்து, பாரதி மீண்டும் ஒரு முறை கானாடுகாத்தான் வந்தி ருந்தார். இரண்டாவது தடவையாக 6-1-1920 முதல் 10-1-1920 வரை அந்த ஊரில் அவர் தங்கினார், இம்முறை காரைக்குடி வழியே சென்றபோது, ஹிந்து மதாபிமான சங்க இளைஞர்களான சொ. முருகப்பா, ராய. சொக்கலிங்கம் முதலியோரது விருப்பத்திற் கிணங்க தனியாகவும் அவர்களுடனும் இரு புகைப் படங்கள் எடுத்துக் கொண்டார்.

இந்தப் புகைப் படங்களில் பாரதி தமது கைத் தடியை வைத்திருக்கும் கோலம் விசித் திரமானது. அன்று நடந்த விஷயங்களை சொ. முருகப்பா அவர்கள் ஒரு கடிதத்தில் விவரித்திருக்கிறார்.

அன்று பாரதியை முதலில் தனியாக ஒரு படமெடுத்தார்கள். புகைப்படத்துக்கு உட் கார்ந்த பாரதி தமது கைத் தடியை நடு பாதியில் சிலம்பு சுற்றுவது போல் பிடித்துக் கொண்டிருந்தார். புகைப் படமெடுப்பவர் தடியை இப்படிப் பிடித்தால் நன்றாயிரா தென்று சொன்னார். "எனக்குத் தெரியும் பட மெடு" என்று கூறிவிட்டார் பாரதி.

ஹிந்து மதாபிமான சங்க இளைஞர்களுடன் சேர்ந்து எடுத்துக் கொண்ட இரண்டாவது படத்தின் போதும் பாரதி தடியை நடுவில் பிடித்த வண்ணம் உட்கார்ந்தார். அன்பர்கள் சொல்லிப் பார்த்தார்கள். பாரதி உடனே தடியை அதன் கொண்டைப் பக்கம் பிடித்து, செங்கோல் பிடிப்பதுபோல நுனியை மேல் பக்கம் நீட்டிப் பிடித்துக் கொண்டுவிட்டார்! அதிகம் சொன்னால் எழுந்து போய்விடுவா ரென்று பயந்து அவர் இஷ்டப்படியே பட மெடுத்துக் கொண்டார்கள்.

பாரதிக்கு முழங்கால்கள் உட்பக்கமாய் நெருங்கியிருக்கும். அவர் உட்கார்ந்திருந்த போது, புகைப் படக்காரர் பாரதி தம் முழங் கால்களை அகற்றி வைத்துக் கொள்ளும்படி சொன்னார். பாரதிக்கு அன்றிருந்த நிலைமை யில் கோபம் வந்துவிட்டது. "என் கால்களைச் சீர்திருத்துவது இருக்கட்டும். முதலில் உன் கால்களைச் சீர்திருத்திக் கொண்டுவா!" என்று பதிலளித்தார். பாவம், அந்தப் புகைப் படக்காரருக்குக் கால் ஊனம்!



114. **செங்கோல் செலுத்தும் கவியரசன்:** காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தில் பாரதியும் இளம் நண்பர்களும்; இடமிருந்து வலம்: அ. மு. க. மு. க. கறுப்பன் செட்டியார், ராய. சொக்கலிங்கன், பாரதி, சொ. முருகப்பா, கி. நாராயணன் செட்டியார். பின்னல்: மு. நடராசன்; சிறுவன் பெயர் தெரியவில்லை. இதேதினம் இதற்குமுன் எடுக்கப்பெற்ற படம் 125-ம் பக்கத்தில் உள்ளது.

C. Subramania Bharati

Kadayam

28th June 1920

To

R. Srinivasa Varadachariya

Madura

Dear friend,

All my manuscripts—the accumulated labour of my 12 years' exile—have arrived here from Pondichery. They are to be divided into 40 separate books; of each book I print 10,000 copies for the first edition. This work will cost me an initial outlay of Rs. 20,000. And, within one year, or, at the most, two years from the date of publication, I shall certainly be able to get a net profit of a lac and a half rupees.

Most of the works which I have now selected for publication are prose-stories, sensational and, at the same time, classical; very easy, lucid, clear, luminous and all but too popular in style and diction and, at the same time, chaste, pure, correct, epic and time-defying. This fact and (2) the ever-growing increase of Tamil-reading men, women and children in the Tamil land and the Tamil world overseas; (3) the historic necessity of my works for the uplift of the Tamil land which, again, is a sheer necessity of the inevitable, imminent and Heaven-ordained Revival of the East; (4) the novel and American-like improvements which I propose to make in the printing, binding and get-up of my editions—which, aided by the beautiful and suitable pictures illustrating the interesting events occurring in the stories, will make them a tremendous attraction to our public and such a wondrous surprise; (5) the comparatively low prices of my books; for I am going to sell my prose-works uniformly at eight annas a copy and my poems at, so far as possible, four annas a copy; and (6) my high reputation and

2

unrivalled popularity in the Tamil-reading world due to my past publications—all these are bound, most evidently, to make my sales a prodigious success.

Please send whatever you can send as loan towards the printing expenses. I expect from you at least Rs. 100. Kindly induce at least twenty more of your friends to lend me similar and much larger sums, if possible.

I shall give stamped 'Pro'—notes for the sums I receive from you and your friends, paying the generous interest of 2% per month, in view of my large profits. Expecting, very eagerly, your kind reply and scores of money orders from your side and praying to God to grant you a long and joyous life,

I remain,
Yours faithfully,
C. Subramania Bharati

N. B. All Government restrictions against me have been removed and all accusations withdrawn and so Government Officials may also be asked to subscribe for this loan. Nobody's name will be announced to the public in this connection and the subscribers will be merely treated as private creditors. *The debts will be fully cleared within 2 years.* C. S. B.

115, 116. **நூல் பிரசுரத் திட்டம்**: தமது நூல்களின் இறவாத் தன்மை, அவைகளைத் தொகுத்து வெளியிட தமது விரிவான திட்டம் முதலிய வற்றை விவரிக்கும் ஆங்கில அச்சுக் கடிதம். மதுரை யன்பர் ஸ்ரீநிவாஸவரதனுக்கு அனுப்பிய பிரதி.

# புத்தகப் பிரசுரத் திட்டம்

எட்டயபுரம் மன்னருக்குக் கடிதமெழுதி ஏமாற்றமடைந்த பாரதி மீண்டும் அங்கே வசிப்பதென்ற எண்ணத்தைக் கைவிட்டு விட்டுக் கடயம் திரும்பினர்.

கடயத்தில், தம்முடைய நூல்கள் எல்லா வற்றையும் ஒழுங்குபடுத்தி வரிசையாய் வெளியிடப் பெரியதோர் திட்டமிட்டார் அவர். பிரசுரத் திட்டத்துக்குப் பணம் சேர்ப்பதற்காக பாரதி தமது அன்பர்களுக்கு ஒரு அச்சடித்த சுற்றறிக்கை விடுத்தார். தலைக்கு நூறு ரூபாய் வீதம் இருநூறு அன்பர்கள் கடனுகப் பண உதவி செய்தால் போதுமென்பது அவர் யோசனை.

ஆங்கிலத்தில் உள்ள அந்த சுற்றறிக்கை தமது நூல்களின் மகிமைபற்றி பாரதிக்கிருந்த தன்னம்பிக்கையையும், அவைகளை எப்படி வெளியிட்டு, எவ்வளவு பிரதிகள் அச்சிட்டு, என்ன விலையில் விற்கவேண்டும் என்று அவர் கொண்டிருந்த கருத்துகளையும் விளக்குகிறது.

மதுரை தேச பக்தர் ஆர். ஸ்ரீநிவாஸவரதனுக்கு அனுப்பிய சுற்றறிக்கைப் பிரதி எதிர்ப் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ளது. அந்த சுற்றறிக்கையின் மொழிபெயர்ப்பு வருமாறு:

**சி. சுப்பிரமணிய பாரதி.**

கடயம்
28 ஜூன், 1920.

ஆர். ஸ்ரீநிவாஸ வரதாசார்யனுக்கு,
மதுரை.

அன்புள்ள நண்பரே,

எனது எழுத்துப் பிரதிகள் யாவும்—என்னுடைய பன்னிரண்டு வருஷ அஞ்ஞாத வாசத்தின் பலன்கள்—புதுவையிலிருந்து இங்கு வந்துசேர்ந்து விட்டன. அவைகளை 40 தனிப் புத்தங்களாகப் பிரிக்க வேண்டும்; முதல் பதிப்பாக ஒவ்வொரு புத்தகத்திலும் 10,000 பிரதிகள் நான் அச்சிடப் போகிறேன். இந்த வேலைக்கு ஆரம்பத்தில் 20,000 ரூபாய் மூலதனம் தேவைப்படும். புத்தகங்கள் வெளிவந்த ஒரு வருஷத்தில், அதிகமானல் இரண்டு வருஷத்திற்குள், செலவெல்லாம் போக நிகர லாபமாக ஒன்றரை லக்ஷம் ரூபாய் அடைவது நிச்சயம்.

வெளியிடுவதற்காக நான் இப்போது தேர்ந்தெடுத்திருக்கும் நூல்களில் பெரும்பாலானவை வசனக் கதைகள். அவை நெஞ்சை அள்ளக் கூடியவை; அதே சமயம் ஆழ்ந்த இலக்கிய அழகு கொண்டவை; எளிய நடையில் உள்ளவை; தெளிவானவை; ஒளி மிகுந்தவை. ஜனங்களுக்குப் பிடித்தமான நடையும் சொல்லழகும் கொண்டவை. அதே சமயம், பரிசுத்தமானவை, வழுவில்லாதவை. இவை காவிய ரஸம் பொருந்தியவை, காலத்தை மீறி நிற்க வல்லவை.

இதனுலும், இது தவிர (2) தமிழ் நாட்டிலும் தமிழ் படிக்கும் வெளிநாடுகளிலும் தினந்தோறும் தமிழ் வாசகர்கள் ஆண், பெண், குழந்தைகள் பெருகி வருவதனுலும்; (3) தமிழ் நாட்டின் முன்னேற்றத்துக்கு எனது நூல்கள் சரித்திர பூர்வமாய் அத்தியாவசியமானவை யென்பதனுலும், உடனே நிகழப் போகின்றதும், தெய்வ சித்தமானதும் தவிர்க்க முடியாததுமான கீழ்த் திசை நாடுகளின் மறுமலர்ச்சிக்குத் தமிழகத்தின் மேம்பாடு அத்தியாவசிய மென்பதனுலும்; (4) என்னுடைய பதிப்புகளில் நான் கையாளப் போகிற புதுமையான, அமெரிக்க வழியிலுள்ள முன்னேற்றங்களாலும், கதைகளில் வரும் சம்பவங்களுக் கேற்ப அழகான பொருத்தமான சித்திரங்களைக் கொண்டிருப்பதாலும் மக்கள் பிரமித்துப்போய் மனதைப் பறிகொடுத்து விடுவார்கள் என்பதனுலும்; (5) எனது நூல்களின் மலிவான விலையினுலும்—வசன நூல்களை எட்டணு விலையிலும், கவிதை, நூல்களைக் கூடுமானவரை நான் கணு விலையிலும் நான் விற்கத் திட்டமிட்டிருப்பதனுலும்; (6) என்னுடைய பழைய பிரசுரங்களினுல் எனக்கிருக்கும் உயர்ந்த மதிப்பினுலும் ஈடு இணையற்ற செல்வாக்கினுலும்—இவை எல்லாவற்றினுலும் என்னுடைய நூல்கள் அமோகமாக விற்பனையாவது திண்ணம்.

புத்தகங்களை அச்சடிப்பதற்கான செலவிற்காக உங்களால் முடிந்த அளவு தொகையை தயவு செய்து கடனுக அனுப்பி வையுங்கள். உங்களிடமிருந்து குறைந்த பட்சம் 100 ரூபாயாவது எதிர்பார்க்கிறேன். கிருபை கூர்ந்து தங்கள் நண்பர்கள் இருபது பேரையாவது இதே மாதிரியோ அல்லது அதிகமான தொகையோ கடன் தந்து உதவும்படி தூண்டுங்கள்.

உங்களிடமிருந்தும் உங்கள் நண்பர்களிடமிருந்தும் கிடைக்கும் தொகைகளுக்கு நான் ஸ்டாம்பு ஒட்டி புரோ—நோட்டு எழுதிக்கொடுக்கிறேன். எனக்குக் கிடைக்கக் கூடிய அபரிமிதமான லாபத்தை முன்னிட்டு, மாதம் 2 சதவிகிதம் தாராளமாகவே வட்டி தருகிறேன். உங்கள் அன்பான பதிலையும் உங்கள் தரப்பிலிருந்து பற்பல மணியார்டர்களையும் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். தங்களுக்கு நீடித்த ஆயுளும் இன்பகரமான வாழ்க்கையும் அளிக்குமாறு கடவுளைப் பிரார்த்தித்திருக்கும்,

தங்கள் அன்புள்ள,
**சி. சுப்பிரமணிய பாரதி.**

குறிப்பு: என்மீதிருந்த அரசாங்கத் தடைகள் யாவும் நீக்கப்பட்டுவிட்டன. என் மீதிருந்த குற்றச்சாட்டுகள் யாவும் வாபஸ் பெறப்பட்டு விட்டன. ஆகையால், அரசாங்க அதிகாரிகள் கூட இந்தக் கடனுக்கு உதவி செய்யும்படி தூண்டலாம். இது சம்பந்தமாக அவர்கள் பெயரும் வெளியிடப்படமாட்டாது. கடன் தருபவர்கள் யாவரும் தனிப்பட்ட முறையில் கடன் தந்தவர்களாகவே கருதப்படுவார்கள். **இரண்டே வருஷங்களில் இக்கடன்கள் யாவும் தீர்க்கப் படும்.**—சி. எஸ். பி.

## "தீப்பெட்டியிலும் ஸாதாரணமாக"

தமது நூல்களை வெளியிடுவதற்கு பாரதி போட்ட திட்டமும் அதற்காக விடுத்த வேண்டுகோளும் அக்காலத்திய தமிழ் மக்கள் மனதைக் கவரவில்லை. தாம் எதிர்பார்த்தபடி எவரும் உதவி செய்ய முன்வராதது கண்டு பாரதி மனம் வெதும்பினார். ஆனால் அவர் இந்தத் திட்டத்தை அதன் பின்னரும் விட்டு விடவில்லை.

கடயத்தில் இருந்தவரை வேறு திட்டங்களும் போட்டுப் பார்த்தார். அதன்பின், *1921*-ல் மீண்டும் சென்னைக்குத் திரும்பி "சுதேசமித்திர"னில் பணியாற்றிய சமயம், தமது நூல் பிரசுரத் திட்டத்தை மீண்டும் வற்புறுத்தி ஆங்கிலத்திலும் தமிழிலும் சுற்றறிக்கைகள் அனுப்பிப் பார்த்தார்.

சென்னையில் அப்போது ஸ்தாபிக்கப்பட்டிருந்த "தமிழ் வளர்ப்புப் பண்ணை"யின் பெயரால் தமிழ் விளம்பரமொன்று அச்சடிக்கப்பெற்றது. அதில், பாரதியின் கீர்த்தி "பூமண்டலம் நிறைந்த கீர்த்தி" என்று எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அந்த விளம்பரப் பிரசுரம் கூறியதாவது:

"இவருடைய கீர்த்தி தமிழ்நாட்டில் மாத்திரமே பரவி யிருப்பதாக நினைத்துவிடக் கூடாது. இவருடைய பாட்டுக்கள் பல தெலுங்கு பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டு ஆந்திர தேசத்தாரால் கொண்டாடப் படுகின்றன. ஐர்லாந்து தேசத்து மகா கவிகளில் ஒருவரும், ஜப்பான் தேசத்தின் ராஜதானியாகிய டோக்யோ நகரத்திலுள்ள இம்பீரியல் யுனிவர்ஸிடி என்ற ஸாம்ராஜ்ய ஸர்வ கலா ஸங்கத்தில் இங்கிலீஷ் ஆசிரியராக விளங்கியவருமாகிய ஜேம்ஸ் எச். கஸின்ஸ் என்பவர் இவருடைய தமிழ்ப் பாட்டுக்கள் சிலவற்றை இங்கிலீஷில் மொழிபெயர்த்து மேல் நாட்டார் வியப்புறும்படி செய்திருக்கிறார்.

"மேலும் மேற்படி கஸின்ஸ் என்ற வித்வான் *1916* டிஸம்பர் *8*-ம் தேதியன்று பிரசுரமான 'காமன்வீல்' என்ற பத்திரிகையில் வெர்ஹேரன் என்ற பெல்ஜியம் தேசத்துக் கவிச் சக்கரவர்த்தியைப் பற்றி எழுதி யிருக்கும் நீண்ட வியாஸத்தினிடையே, மேற்படி வெர்ஹேரனையும் நம் இந்தியா தேசத்துப் புலவர் சிலரையும் சீர் தூக்கிப் பார்க்குமிடத்தே பின் வருமாறு சொல்கிறார்:

"'ஒரு வஸ்துவின் புறத்தே காணப்படும் ஸௌந்தரியத்தை மட்டுமன்றி அதனை ஊடுருவிப் பார்த்து, (அதில் மறைந்துகிடக்கும்) உள்ளழகையும் உணரும் சக்தி ஞான திருஷ்டிக்குரியதாகும். புறத்தோற்றம் வெறுமே வாய்க்கால் போன்றது, வெறும் அடையாளமென்பதை ஒரு புலவன் எத்தனைக் கெத்தனை தெளிவாகக் காண்கிறானோ அத்தனைக்கத்தனை அந்த வஸ்துவுக்கும் அந்தப் புலவனுக்கும் அதிக மஹிமை யேற்படும். இங்ஙனம் விமோசனம் படைத்த ஞான திருஷ்டியெய்தும் பருவத்தை வெர்ஹேரன் கவி மிகவும் நெருங்கி வந்தார். ஆனால் ரவீந்திரநாத டாகுர், ஸரோஜினி நாயுடு, அரவிந்த கோஷ், சுப்பிரமணிய பாரதி இவர்களுடைய கவிதையிலும் இவர்களைப் போன்ற ஞானத் தெளிவு கொண்ட ஐரிஷ் கவிஞர் சிலரின் கவிதையிலே யுந்தான் ஸௌந்தரிய தெய்வத்தைப் பிரத்தியக்ஷமாகக் கண்டு, அதை உண்மையாகவும் சுத்தமாகவும் உணர்த்தும் சக்தி காணப்படுகிறது' என்கிறார்.

"இங்ஙனம் கீர்த்தி வாய்ந்த கவியரசர் ஒருவர் தமிழ்நாட்டில் இருப்பது நமக்கெல்லாம் சாலமிகப் பெருமை யன்றோ? இவர் தமிழ் நாட்டையும் தமிழ் பாஷையையும் மேம்படுத்தியதற்கு நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்?..."

பாரதி தமது நூல்களை நாற்பது புத்தகங்களாய் அச்சிடப் போகிறார் என்றும், ஒவ்வொன்றிலும் பத்தாயிரம் பிரதி அச்சடிப்பார் என்றும் குறிப்பிட்டு, "இந் நான்கு லக்ஷம் புத்தகங்களும் தமிழ்நாட்டில் மண்ணெண்ணெய் தீப்பெட்டிகளைக் காட்டிலும் அதிக ஸாதாரணமாகவும் அதிக விரைவாகவும் விலைபட்டுப் போகுமென்பதில் சிறிதேனும் ஸந்தேஹத்துக்கிடமில்லை" என்றும் தமிழ் வளர்ப்புப் பண்ணையின் பிரசுரம் வற்புறுத்தியது.

பாரதியின் திட்டத்துக்குப் பொருள் கடனாகவோ நன்கொடையாகவோ தந்து "எக்காலத்திலும் அழியாத புண்ணியம்" அடையும்படியும் இப் பிரசுரம் கோரிக்கை விடுத்தது. "ஸமயத்தை மதிமயக்கத்தாலே தவறவிட்டு விடாதீர்கள்! அன்பர்களே! உடனே, உடனே, உடனே தத் தம்மால் இயன்ற தொகைகளை அடியிற்கண்ட ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரின் விலாசத்துக்கனுப்புங்கள். உங்களுக்கு மஹாசக்தி அமர வாழ்க்கை தருக!" என்றும் இப் பிரசுரம் கூறிற்று.

ஆனால் தமிழ் மக்கள் பாரதிக்குப் போதிய ஆதரவு தரவில்லை; பிரசுரத் திட்டமும் நடைபெறவில்லை. *36*-ஆண்டுகளுக்குப்பின் *1957*-ல் கூட நிறைவேறியிராத இந்தக் கனவை, *1921*-ல் தமிழ் மக்கள் நிறைவேற்றவில்லை யென்று குறைசொல்ல இடமேது!

ஓம் சக்தி

# தமிழ் வளர்ப்பு-ஒரு வேண்டுகோள்.

## [ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியின் புதிய நூல்கள்]

அன்பர்களே,

ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியின் தமிழ் புதுமை, தெளிவு, முதலிய பல குணங்களுடைய தாய்த் தமிழ் நாட்டில் எல்லா ஜனங்களாலும் மிகவும் அன்புடனும் ஆதரவுடனும் போற்றப் பட்டு வருகிறதென்ற விஷயம் உங்களுக்குத் தெரியாததன்று.

இவர் இயற்றிய "ஞானரதம்" என்ற கதையைப் பற்றி எழுதுகையில், மிகவும் கீர்த்தி பெற்ற ஆசிரியராகிய மஹேச குமார சர்மா, இதைப் போல் அற்புதமான கதை தமிழ் பாஷையில் வேறு கிடையாதென்று சொல்லுகிறார். அங்ஙனமே ஸ்ரீமான் பாரதி இயற்றிய "கண்ணன் பாட்டு" முதலிய நூல்களை அச்சிட்டு வெளிப் படுத்தியிருக்கும் "தேசபக்தன்" உதவிப் பத்திராதிபராகிய ஸ்ரீமான் நெல்லையப்பபிள்ளை தமது பாரதியாரைத் தெய்விகப் புலவரென்றும், தமிழ் நாட்டின் தவப் பயனென்றும், ஜீவன் முக்தரென்றும் கொண்டாடுகிறார். இவர் நூல்களில் ஏற்கெனவே வெளிப்பட்டிருக்கும் பகுதிகளைப் படித்தவர்களனைவரும் மேலே காட்டிய வியப்புரைகளை எளிதில் அங்கீகாரம் செய்வார்கள்.

### பூமண்டல நிறைந்த கீர்த்தி.

ஆனால் இவருடைய கீர்த்தி தமிழ் நாட்டில் மாத்திரமே பரவியிருப்பதாக நினைத்து விடக் கூடாது. இவருடைய பாட்டுக்கள் பல தெலுங்கு பாஷையில் மொழி பெயர்க்கப் பட்டு ஆந்திர தேசத்தாரால் கொண்டாடப் படுகின்றன. ஐர்லாந்து தேசத்து மஹா கவிகளில் ஒருவரும், ஜப்பான் தேசத்தின் ராஜதானியாகிய டோக்யோ நகரத்திலுள்ள 'Imperial University (இம்பீரியல் யூனிவர்ஸிடி) என்ற ஸாம்ராஜ்ய ஸர்வ கலா ஸங்கத்தில் இங்கிலீஷ் ஆசிரியராக விளங்கியவருமாகிய ஜேம்ஸ்-எச்-கஸின்ஸ் (James. H. Cousins) என்பவர் இவருடைய தமிழ்ப் பாட்டுக்கள் சிலவற்றை இங்கிலிஷில் மொழி பெயர்த்து மேல் நாட்டார் வியப்புறும்படி செய்திருக்கிறார். மேலும், ஷை கஸின்ஸ் என்ற வித்வான் 1916 டிஸம்பர் 8-ஆம் தேதியன்று பிரசுரமான "காமன்வீல்" பத்திரிகையில் வெர்ஹேரன் (Verhaeren) என்ற பெல்ஜியம் தேசத்துக் கவிச் சக்ரவர்த்தியைப் பற்றி எழுதியிருக்கும் நீண்ட வ்யாஸத்தினிடையே, ஷை வெர்ஹேரனையும் நம் இந்தியா தேசத்துப் புலவர் சிலரையும் சீர் தூக்கிப் பார்க்குமிடத்தே பின்வருமாறு சொல்லுகிறார்:—

[" The Seeing eye apprehends Beauty not only in the thing seen but through it; and the more faithfully the thing is seen as channel and symbol, the more certainly will both it and the seer be dignified, not degraded. Verhaeren came within sight of imaginative freedom; but it is in the poetry of Tagore and Naidu, Ghose and Bharati, and their spiritual comrades of the Irish School that the purest and truest expression of realised Beauty can be found":-] இதன் பொருள் பின்வருமாறு.

"ஒரு வஸ்துவின் புறத்தே காணப் படும் ஸௌந்தர்யத்தை மட்டுமன்றி அதனை ஊடுருவிப் பார்த்து (அதில் மறைந்து கிடக்கும்) உள் அழகையும் உணரும் சக்தி ஞான திருஷ்டிக்குரியதாகும். புறத் தோற்றம் வெறுமே வாய்க்கால் போன்றது; வெறும் அடையாள மென்பதை ஒரு புலவன் எத்தனைக்கெத்தனை தெளிவாகக் காணுகிறானோ, அத்தனைக்கத்தனை அந்த வஸ்துவுக்கும் அந்தப் புலவனுக்கும் அதிக மஹிமை யேற்படும். இங்ஙனம் விமோசனம் படைத்த ஞான திருஷ்டி யெய்தும் பருவத்தை வெர்ஹேரன் கிட்ட மிகவும் நெருங்கி வந்தார். ஆனால் ரவீந்த்ர நாத டாகுர், ஸரோஜினி நாயடு, அரவிந்த கோஷ், சுப்பிரமணிய பாரதி, இவர்களுடைய கவிதையிலும், இவர்களைப் போன்ற ஞானத் தெளிவு கொண்ட ஐரிஷ் கவிஞர் சிலரின் கவிதையிலேயுந்தான் ஸௌந்தர்ய தெய்வத்தை ப்ரத்தியக்ஷமாகக் கண்டு, அதை உண்மையாகவும் சுத்தமாகவும் உணர்த்தும் சக்தி காணப் படுகிறது" என்கிறார்.

இங்ஙனம் கீர்த்தி வாய்ந்த கவியரசர் ஒருவர் தமிழ் நாட்டில் இருப்பது நமக்கெல்லாம் சால மிகப் பெருமையன்றோ? இவர் தமிழ் நாட்டையும் தமிழ் பாஷையையும் மேம்படுத்தியதற்கு நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்? எனினும், இவருக்கு நாம் செலுத்த வேண்டிய கடமையில் ஒரு சிறிதளவு செலுத்துதற்குரிய சந்தர்ப்பம் இப்போது வாய்த்திருக்கிறது. அது யாதெனில் சொல்லுகிறேன்.

ஸ்ரீமான் பாரதியார் பன்னிரண்டு வருஷம் ப்ரிட்டிஷ் இந்தியாவை விட்டுப் புதுச்சேரியில் வனவாஸம் செய்து கொண்டிருந்தார். அந்தக் காலத்தையெல்லாம், அவர் அங்கு வீணே கழிக்கவில்லை. ஏராளமான நூல்களெழுதிக் குவித்துக் கொண்டிருந்தார்.

### பாரதியார் நூல்களை அச்சடிக்கிற மாதிரி.

அவற்றையெல்லாம் இப்போது அச்சிடப் போகிறார். அவற்றை 40 புஸ்தகங்களாகப் பிரித்து ஒவ்வொரு புஸ்தகத்திலும் 10000 பிரதிகள் அச்சிட உத்தேசிக்கிறார். 40 "X" 1000 (நாற்பதைப் பத்தாயிரத்தால் பெருக்கும் போது) 4 லக்ஷம் சுவடிகளாகின்றன. இந் நான்கு லக்ஷம் புஸ்தகங்களும் தமிழ் நாட்டில், மண்ணெண்ணெய்த் தீப்பெட்டிகளைக் காட்டிலும் அதிக

117. "பூமண்டல நிறைந்த கீர்த்தி": 1921-ல் சென்னையில் அமைக்கப்பெற்ற தமிழ் வளர்ப்புப் பண்ணை விடுத்த அச்சு நோட்டீஸ் பாரதி புகழைப் பாடுகிறது.

ஸாதாரண மாக வும், அதிக விரை வாக வும், விலைப் பட்டுப் போகு மென்பதில் சிறி தேனும் ஸந்தேஹத்துக் கிட மில்லை. இங்ஙனம் நிச்சய மாக அறிந்து கொள்ள எத்தனை யோ காரணங்களிருக்கின்றன. இவற்றுள் முக்ய மான சில காரணங்களை இங்கு குறிப் பிடுகிறேன்.

முதலாவது:—இந் நூல்களி லே பெரும் பகுதி வசன நூல்கள்; நேர்த்தி யான, ஆச்சர்யமான, ரஸமான, வாசிக்க வாசிக்கத் தெவிட்டாத கதைகளடங்கிய வசன கிரந்தங்கள்; மிகவும் தெளிவான, இனிய, எளிய, தமிழ் நடையில் குழந்தைகளுக்குக் கூட நன்றாக விளங்கும் படி எழுதப்பட்டன. எனவே இந் நூல்கள் லக்ஷக் கணக்காக விலையாகு மென்பதில் ஸந்தேஹமில்லை.

இரண்டாவது:—தமிழ் நாட்டிலும் தமிழர் சென்று குடி யேறி யிருக்கும் வெளித் தீவுகளி லும், தமிழ் வாசிப்பவரின் ஜனத் தொகை நாளுக்கு நாள் ஒன்று, பத்து, நூறு, ஆயிர மாகப் பெருகிக் கொண்டு வருகிறது.

மூன்றாவது:— இந்த நூல்கள் அச் சிடப் படும் மாதிரியே இவை ஏராளமாக விலைப்படுவதற் கொரு ஸாதன மாகும் அமெரிகா, ஐரோப்பா கண்டத்துப் பதிப்புகளைப் போல் நேர்த்தியாக வும் மனோரம்ய மாக வும் நல்ல காகிதத்தில், தெளி வான எழுத்துக்களில், தெளி வாகப்பதம் பிரித்து ஆச்சர்ய மான தகுந்த சித்திரங்கள் பதிப்பித்து வெளி யிடுவதால், இந் நூல்கள் ஜனங்களுக் குள் ளே மிகுந்த வியப்பை யும், பிரியத்தை யும், விளைவித்து லக்ஷக் கணக் காக விலை யாகு மென்பதில் ஸந்தேஹமில்லை.

நான்காவது:— ஏழை, எளியவர். உட்பட, ஸகல ஜனங்களும் வாங்கும்படி இவற்றின் விலை மிகவும் குறை வாக ஏற்படுத்தப் படும். சராசரி ஒரு புஸ்தகத்தின் விலை அரை ரூபாய்.

ஐந்தாவது:— "கீழ்த் திசை முன் னேற்றம் பெறக் கடவது. புனர் ஜன்மம் எய்தக் கடவது" என்று கால சக்தி விதித் திருக்கிறது. தமிழ் நாடும் ஆசியாவின் பகுதி யாதலால், இதற்கும் அந்தப் புனர் ஜன்மம் உண்டு. இப் புனர்ஜன்மத்தை ஏற்படுத்துவதற்கு ஸ்ரீமான்—சுப்பிரமணிய பாரதியின் நூல்க ளே தகுந்த கருவிக ளாவன. ஆதலால், தெய்வ பலத்தைக் கருதுமிடத் தே யும் இந் நூல்கள் லக்ஷக் கணக்காக விலை யாகு மென்பது தெளிவாக விளங்குகிறது.

ஆறாவது:—ஸ்ரீமான்—சுப்பிரமணிய பாரதியாருக்குத் தமிழ் நாட்டில் சிகரமுயர்ந்த கீர்த்தி ஏற்பட்டிருக்கிறது. இவர் நூல்களை வாங்காமல் ஜனங்கள் யாருடைய நூல்களை வாங்கப் போகிறார்கள்? இந்த நூல்கள் மிகவும் நீண்ட பக்ஷம் 2-வருஷங்களில் விலை யாகி விடும். அதற் குள்ளே யே இரண் டாம் பதிப்புக்களுக் கும் புதிய நூல்களுக் கும் வேண்டுதல் ஏற்படு மென்பது மிகவும் நிச்சயம்.

## வரவு செலவு கணக்கு.

இவற்றை இவர் விரும்புகிறபடி அச்சிட 20000 ரூபாய் பிடிக்கும். விளம்பரச்செலவு; 10000 ரூபாய். ஷை 30000 ரூபாய்க்கு மாஸம் 1-க்கு 2-ரூபாய் விதம் இரண்டு வருஷத்து வட்டி ரூபாய் 14,400. ஆக மொத்தம் செலவு ரூபாய் 44,000.

புஸ்தகம் ஒன்றுக்கு அரை ரூபாய் விதம் மொத்தப் புஸ்தகத்துக்கு வரவு ரூபாய் 2-லக்ஷம். ஆகவே, மிச்ச லாபம் ரூபாய் 156000. ஒன்றரை லக்ஷத் தாயிர ரூபாய் வித்தமாகக் கிடைக்கிறது. இத்தனை நல்ல லாபம் கிடைப்பதை உத்தேசித்தே ஸ்ரீமான்—பாரதியார் மாஸம் 1-க்கு ரூபாய் 2-விதம் வட்டி கொடுக்கத் துணிந்தார்.

## பிரார்த்தனை.

இதற்குத் தாங்க ளும் தங்கள் நண்பர்க ளும் தலைக்குக் குறைந்த பக்ஷம் ரூ 100-வீதம் இயன்ற தொகை கட னாக வேனும் இனா மாக வேனும் கொடுத்துதவும் படி பிரார்த்திக்கிறேன். இனா மாகக் கொடுப்போர் ஸ்ரீமான் பாரதியாரால் மேன் மேலும் நடத்தப் படும் தமிழ் வளர்த்தலாகிய மஹா புண்ணிய கர்மத்திற்குப் பொருள் கொடுத்து, எக்காலத்தி லும் அழியாத புண்ணிய மடைவார்கள். கடனாகக் கொடுப் போர்க்கு அங்ஙனமே உயர்ந்த புண்ணியம் கிடைப்பதுடன் மிக வும் லாபகர மான வட்டி யும் கிடைக்கிறது. கடன் கொடுப்போர்க்கு ஆறு மாஸங்கழிந்த வுடன் மாஸந் தோறும் வட்டி கொடுக்கப் படும். முதலும் வட்டியும் இரண்டு வருஷ காலத்தில் முழு தும் கொடுத்துக் கணக்குத் தீர்த்து விடப் படும். கீர்த்தியை விரும்பு வோருக்கு இதில் கீர்த்தி யும் கிடைக்கும். உத்தம கார்யம். எந்த வகையில் யோசித்தா லும் செய்யத் தக்கது.

தாங்களும் தங்கள் நண்பர்களும் அனுப்பக் கூடிய தொகையை உடனே மணியார்டர் செய் தனுப்புங்கள். கீழே ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியின் விலாஸம் குறிப் பிடப்பட்டிருக்கிறது. அவருடைய விலாஸத்திற்குப் பணம் அனுப்பினால் அவர் கட னாகக் கிடைக்குந் தொகைகளுக்கு ஓரணா ஸ்டாம்பு ஒட்டிக்கடன் பத்திர மெழுதிக் கையெழுத்துச் சாத்தி உங்களுக் கனுப்புவார். தகுந்த லாபம் கிடைக்கும். ஸமயத்தை மதி மயக்கத்தாலே தவற விட்டு விடாதீர்கள் !

அன்பர்களே, உடனே, உடனே, உடனே, தத் தம்மால் இயன்ற தொகைகளை அடியிற் கண்ட ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியாரின் விலாசத்துக் கனுப்புங்கள். உங்களுக்கு மஹாசக்தி அமர வாழ்க்கை தருக.

உங்களன்பு மிக்க

காரிய தரிசி

தமிழ் வளர்ப்புப் பண்ணை

சென்னை.

குறிப்பு.—பணம் அனுப்ப வேண்டிய

விலாசம்:—

ஸ்ரீமான். சி. சுப்பிரமணிய பாரதி,

"ஸுதேசமித்திரன் உதவிப் பத்திராதிபர்,

சென்னை.

The Swadesamitran Branch Press, Madras.

118. கணக்கு வழக்கு : தமது நூல்களைப் பிரசுரித்தால் ஏற்படக்கூடிய பெரும் லாபத்தின் கணக்கையும் கவிஞர் முன்கூட்டியே தீர்க்கதரிசனத்துடன் தெரிவிக்கிறார்!

# நோபல் பரிசுக்குப் போட்டி

"**மே**தை என்பது தொண்ணூற்றெென்பது சதவிகிதம் உழைப்பு; ஒரே ஒரு சதவிகிதம்தான் வரப் பிரசாதம்" என்று எடிஸன் என்ற அமெரிக்க மேதை கூறினன்.

பாரதி விஷயத்தில் இது மிகவும் பொருந்தும். தமக்கு அளவற்ற வரப் பிரஸாதம் இருந்தும், அவர் அதற்குமேல் உழைப்பும் உண்டென்று ஓயாமல் காட்டி வந்தார்.

தமது புத்தகங்களை வெளியிடத் தாம் வகுத்த திட்டத்துக்கு ஆதரவு கிடைக்கவில்லை யென்றதும், அவர், சளைக்காமல், "அமிர்தம்" என்ற பெயரில் புதிய பத்திரிகையொன்று ஆரம்பிக்க முயன்ருர். இந்தப் பத்திரிகை சம்பந்தமாக "சுதேசமித்திர"னில் 1920 ஆகஸ்ட் 2-ந்தேதி விளம்பரமும் செய்தார்.

தமது வாழ்நாளின் கடைசி வருஷங்களில் பாரதி சாகாமை என்ற விஷயத்தில் அளவு கடந்த கவனம் செலுத்தலானுர்.

1919-ம் வருஷம் டிஸம்பர் முடிவில், அதாவது தாம் இறப்பதற்கு ஒன்றேகால் வருஷத்துக்குமுன்பு வெளியான "சுதேசமித்திரன் ஆண்டு மல"ரில் "காலனுக் குரைத்தல்" என்ற பாடல் பிரசுரமாயிற்று. "காலா உன்னைச் சிறு புல்லென மதிக்கின்றேன்; சற்றே என் காலருகே வாடா, உனை மிதிக்கின்றேன்" என்று காலனைக் காறி உமிழ்கின்றது இப் பாட்டு. முன்பு மார்க்கண்டனைப் பிடிக்கப் போய் நீ பட்ட பாட்டை மறந்தனையோ என்றும் ஏளனம் செய்கிறது.

"ஏசு செத்தான்; கண்ணன் மாண்டான்; ராமன் இறந்தான்—'பார்மீது நான் சாகாதிருப்பேன் கண்டீர்'" என்று பாரதி அறுபத்தாறிலும் கவி வலியுறுத்துகிருர்; மரணத்தை வெல்ல உபாயமெல்லாம் சொல்கிருர்.

பாரதிக்கு தமது அந்திய காலம் நெருங்கி விட்டதெனத் தோன்றிற்ரு? மார்க்கண்டன் போலத் தாமும் என்றும் சிரஞ்சீவியாக வாழ விரும்பினரா?

1920 ஸெப்டம்பர் முதல் தேதியிலிருந்து "அமிர்தம்" பத்திரிகை ஆரம்பமாகுமென்று நண்பர் ஸ்ரீநிவாஸவரதனுக்கு ஆகஸ்ட் 6-ந் தேதி எழுதிய கடிதத்தில் பாரதி கூறுகிருர். "நன்கொடை, சந்தாக்கள், கையிலுள்ள பொருள் எல்லாவற்றையும் சேர்த்துக் கொண்டு" இரண்டு மூன்று தினங்களில் வந்து சேரும்படியும் கடிதம் துரிதப்படுத்துகிறது. "இயன்றவரை பணத்துடன் வாருங்கள்" என்று மீண்டும் கடித முடிவில் வற்புறுத்துகிருர் பாரதி.

இதையெல்லாம் கவனிக்கும்போது, தமது திட்டங்களுக்குப் போதிய செல்வமில்லாக் குறை அவரை வாட்டி வதைப்பதை ஒருவாறு அறிந்து கொள்கிறோம்.

* * *

புதிய பத்திரிகை முயற்சியின் நடுவே பாரதி அக்கம் பக்கத்திலுள்ள ஊர்களுக்கும் பிரசங்கம் செய்யப் போய் வருகிருர். 1920 ஜூன் மாதம் 20-ந் தேதி வாக்கில், ரவணசமுத்திரம், பொட்டல் புதூர் என்ற இரு ஊர்களுக்குச் சென்று, அங்கே முஸ்லிம் சகோதரர்களிடையே இஸ்லாம் மார்க்கத்தின் மகிமைபற்றி பாரதி பேசுகிருர். பொட்டல் புதூர் முஸ்லிம் வாலிப சபையில் நபிகள் நாயகம் பிறந்த தினத்தன்று "அல்லா, அல்லா, அல்லா!" என்று தாம் பாடியுள்ள பாட்டையும் பாரதி அரங்கேற்றுகிருர்.

* * *

பாரதி இந்த ஆண்டு இருந்த மனேநிலைக்கு உதாரணமாக இன்னெரு சம்பவமும் கூறப்படுகிறது. 1920-ல் ரவீந்திரநாத் டாகுர் மதுரைக்கு வந்திருந்தார். அப்போது பாரதி திருநெல்வேலி போயிருந்தார். ரவீந்திரர் தென்னுடு வந்திருக்கும் சேதி கேட்டு, அருகிலிருந்த நண்பரிடம், "மதுரைக்குப் புறப்பட வேண்டும். ரயிலில் சீட்டு வாங்கு" என்ருராம். நண்பர் எதற்கெனக் கேட்க, "நான் தாகூரோடு பேசி வென்று நோபல் பரிசைத் தமிழுக்குப் பெற்றுத் தரப்போகிறேன்" என்ருராம். எப்படி என்று நண்பர் கேட்டார். "மதுரை சென்று தாகூரிடம் போய், 'நீர் வங்கக் கவி, நான் தமிழ்க் கவி. விக்டோரியா ஹாலில் கூட்டம் போடுவோம். உமது நோபல் பரிசைச் சபை முன்பு வையும். இருவரும் பாடுவோம். ஜயித்தவர் பரிசை எடுத்துக்கொள்ளலாம். எனது பாடலையே ஜனங்கள் சிறந்ததென மதிப்பார்கள். உமது கையாலேயே அப் பரிசை எனக்குத் தர வேண்டும்' என்பேன்" என்ருராம் பாரதி.

நண்பருக்குநம்பிக்கைஏற்படவில்லை."தாகூர் வங்காளியில் பாடுவார்; நீங்களோ தமிழில் பாடுவீர்கள். எப்படிப் போட்டி நடத்த முடியும்?" என்ருராம். உடனே பாரதி, "அடசனியனே! கடவுள் தமிழனுக்கு எல்லாம் வைத்தான்; புத்தியை மட்டும் வைக்கவில்லையே! தமிழுக்கு ஏன் நோபல் பரிசு வரக்கூடாது? தமிழனே தமிழைத் தாழ்வாக மதிக்கலாமா?" என்று ஆத்திரத்துடன் பேசினராம். தமிழை உலகம் போற்றும்படி செய்ய வேண்டும் என்ற நினைப்பு பாரதிக்கு எப்போதும் மங்காச் சுடராக இருந்தது.

# கடயத்தில் ஒரு நாள்

மதுரை ரா. ஸ்ரீநிவாஸவரதய்யங்காருக்கு முதல் கடிதம் எழுதிய இருபது நாட்களில், 1920 ஆகஸ்ட் 20-ந் தேதி, இரண்டாவது கடிதம் ஒன்று பாரதி எழுதினர். ஸெப்டம்பர் மாதம் முதலாக வெளிவருவதாயிருந்த ''அமிர்தம்'' பத்திரிகை அடுத்த 1921 ஜனவரி முதலே ஆரம்பமாகுமென்று இக்கடிதத்தில் தெரிவிக்கிருர். பணத்துக்கு அவசியம் முன்னை விடக் கடுமையாக இருக்கிறது. ''தாங்கள் சொல்லியபடி சொத்தை விற்றேனும் கொண்டு வரக்கூடிய தொகையைக் கொண்டு இவ்விடத்திற்கு உடனே வந்து சேரும்படி'' பிரார்த்திக்கிருர் கவிஞர்.

1920-ம் ஆண்டில், திருநெல்வேலியில் தாமிரவருணி நதிக் கரையில் தமிழ் மாகாண அரசியல் மகாநாடு கூடியது. அப்போதுதான் அட்வகேட்-ஜெனரல் பதவியை உதறியெறிந்துவிட்டு வந்திருந்த எஸ். ஸ்ரீநிவாஸய்யங்கார் தலைமையில் இம் மகாநாடு மகாத்மா காந்தியின் ஒத்துழையாமை இயக்கத்தை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றியது.

மகாநாட்டுக்கு பாரதி வருவதாயிருந்தது; வரவில்லை. ஸ்ரீநிவாஸவரதய்யங்காரும், பாரதியின் மருமான் சங்கரனும் மற்றும் இருவரும் மகாநாட்டுக்குப் போய்விட்டு, பாரதியைக் காணக் கடயம் சென்ருர்கள்.

இரவு பத்து மணிக்கு பாரதியின் வீட்டை அடைந்தார்கள். செல்லம்மாளும் குழந்தை சகுந்தலாவும் உறங்குகின்றனர்; பாரதி படுக்கையை விரித்து, எதிரே ஒரு மரக் கைப் பெட்டியின் முன் உட்கார்ந்து ''சுதேசமித்திர''னுக்கு ஒரு வியாசம் எழுதிக்கொண்டிருந்தார். அருகே ஒரு முக்காலியில் ஹரிகேன் விளக்கு; பக்கத்தில் வெற்றிலைப் பெட்டி, கறுப்புக் கோட்டு, வால்விட்ட தலைப்பாகையுடன்தான் அந்த நேரத்திலும் விளங்குகிருர் பாரதி.

வந்தவர்கள் பாரதியை நமஸ்கரித்தனர்.

அரசியலைப் பற்றிப் பேச்சு ஆரம்பித்தது. ''நாடு எப்படியும் முன்னேறப் போகிறது. தீவிரமான தீர்மானங்கள் நிறைவேறியிருக்கின்றன: காந்தியடிகள் வழி காட்டப் போகிருர்கள். எல்லாரும் சுகமடைய வேண்டும்'' என்று பாரதி சொன்னர்.

பிறகு, பாரதி, தாம் புதிதாய்ப் புனைந்துள்ள சில பாடல்களைப் பாடினர். தம்மைப் போலவே உணர்ச்சியுடனும் கம்பீரத்துடனும் பாடக் கூடியவரான சங்கரனிடம் ''இதைக் கேட்டாயா?'' என்று பாடிக் காண்பித்தார். ''சந்திரமதி காதல்'' (பச்சைக் குழந்தையடி), ''வருவாய், வருவாய் கண்ணா'', ''காலா சற்றே என் காலருகே வாடா'' முதலிய பாடல்களைப் பாடியபின், ''ஆறு துணை'' யென்ற ஓம் சக்திப் பாட்டையும் பாடினர் கவிஞர். சமீபத்தில் பொட்டல்புதூரில் பாடிய ''அல்லா'' பாட்டையும் பாடிக் காட்டினர்.

பாட்டு முடிந்தது. மனிதன் அமரத்தன்மையடையும் விதத்தை விளக்க ஆரம்பித்தார் பாரதி. பயத்தை ஒழி, சாவுக்கு அஞ்சாதே, கவலையை விடு என்று கூறி, ''ஒவ்வொருவரும் அமரநிலை எய்தல் வேண்டும்'' என்று வற்புறுத்தினர்.

இரவு 12-30 மணிக்கு எல்லாரும் உறங்கப் போனர்கள். காலையில் நண்பர்களுக்குச் செல்லம்மாள் சிற்றுண்டி அளித்தார். பாரதி காலைப் பத்திரிகை ''மித்திர''னைப் பார்த்தார். அப்போது உள்ளூர் பிராமணரல்லாத அன்பர்கள் சிலர் வந்து பாரதியுடன் உரையாடினர்கள். ஆரியர்—திராவிடர் பற்றிப் பேச்சு. ''அன்பர்களே! ஆரியர்களுக்கு முன்னல் திராவிடர்கள், அவர்களுக்கு முன்னல் ஆதித் திராவிடர்கள், அதற்குமுன் இருந்தது மிருகங்கள், ஜீவராசிகள். அவைகள் வாழ்ந்த இடத்தை வெட்டித் திருத்தி வீடு கட்டி, பயிர் செய்து நாம் வாழுகின்ருேம். அவைகள் உரிமை கொண்டாடினல் நாம் அனைவரும் அவைகளிடம் விட்டுப் போக வேண்டியதுதான்'' என்று நகைத்தார் கவிஞர்.

பிறகு, ''அமிர்தம்'' பத்திரிகைத் திட்டத்தைப் பற்றியும், தமது நூல்கள் எப்படிப் பிரசுரமாக வேண்டுமென்பது பற்றியும் அவர் பேசினர். மணி 11. பாரதி ஸ்நானம் செய்து வந்தார். ஸ்நான அறைக்குக் கச்சம், கோட்டு தலைப்பாகையுடன் சென்றவர், ஸ்நானம் முடித்து, அதே போலத் திரும்பினர்.

பகல் உணவும் நடந்தது. மணி ஒன்று. பாரதி உள்ளே சென்று ஒரு சாக்கு மூட்டையைக் கொண்டு வந்து பிரித்தார். அருமையான காவியங்களின் எழுத்துப் பிரதிகள்! அவைகளை வைக்கப் பெட்டிகூட இல்லை!

''பாஞ்சாலி சபத''த்தை ஆரம்ப முதல் கடைசி வரை பாடிக் காட்டினர். எல்லாம் நேரில் நடப்பதுபோல் கேட்போருக்கும் உணர்ச்சி பொங்கியது. மாலை 5 மணியாகி விட்டது. 6 மணிக்கு ரயில். அன்பர்கள் பிரிய மனமின்றி விடை பெற்றனர். ''சென்று வாருங்கள். கடிதம் போடுங்கள்'' என்று விடை சொல்லி அனுப்பினர் பாரதி.

அவர் வாழ்க்கையில் அது ஒரு நாள்; மற்றவர்கள் வாழ்க்கையில் மறக்க முடியாததோர் சுதினம்.



**119. ஸ்ரீநிவாஸவரதன் :** மதுரை தேச பக்தர் ரா. ஸ்ரீநிவாஸவரதன், பாரதிக்காகப் பல தியாகங்கள் புரிந்துள்ள இப் பெரியாரது அறுபதாண்டு விழா சமீபத்தில் கொண்டாடப் பெற்றது. (1930-ல் எடுத்த படம்.)

ஓம் சக்தி

கடையம்
26 ஆகஸ்ட் 1920.

ஸ்ரீமான் - ஸ்ரீநிவாஸ வரதாசார்யனுக்கு நமஸ்காரம், மஹா சக்தி அமரத் தன்மை தருக.

"அமிர்தம்" பத்திரிகை 1921-ஆம் வருஷம், ஜனவரி மாஸம் முதல் தொடங்கும். மேலே தனத்துக்கு வேலை தீவிரமாக நடத்தி வருகிறேன். தயை செய்து தங்களால் இயன்ற தொகையை - தாங்கள் சொல்லிய படி, சொத்தை விற்றேனும் கொண்டு வரக் கூடிய தொகையைக் கொண்டு இவ் விடத்திற்கு உடனே வந்து சேரும் படி ப்ரார்த்திக்கிறேன்.

"தேசபக்தன்" வேலையை ராஜிநாமா கொடுக்க வேண்டாம். இங்கு நமது கார்யாலயத்தில் உத்யோகம் பார்த்துக் கொண்டே "தேசபக்த"னுக்கும் இருந்து தானாக ஏதேனும் பட உத்யோகம் வகிக்கலாம். தலைக் - கோடைய உத்தரவு நீங்கள் வந்த பிறகு தான் வாங்க வேண்டும். "தேசபக்தன்" விஷயத்திலே நீங்கள் அனுஷ்டிக்க வேண்டிய வழிகளை இங்கு வந்த பின் தங்களிடம் நேரில் தெரிவிக்கிறேன். உடனே புறப்பட்டு வாருங்கள்.

தங்கள் மெய் யன்பன்
சி. சுப்ரமணிய பாரதி.

**120, 121. "அமிர்தம்" பத்திரிகை முயற்சி :** மதுரை யன்பர் ஸ்ரீநிவாஸ வரதனுக்கு கவிஞர் எழுதிய இரு கடிதங்கள். மன்னரிடம் ஏமாற்றமுற்று, நூல் பிரசுரத் திட்டமும் கைகூடாமலிருக்க, புதுப் பத்திரிகையாவது ஆரம்பிக்கலாமென நினைத்து "சொத்தை விற்றேனும்" பணம் கொண்டுவரும்படி கடிதமெழுதுகிறார் பாரதி.



122. **"மித்திரன்" ஆசிரியர்**: 1920-ல் பாரதி மீண்டும் "மித்திர"னில் சேர்ந்த சமயம் அதன் ஆசிரியராயிருந்த ஏ. ரங்கஸ்வாமி அய்யங்கார். பாரதியை மிகவும் ஆதரித்தவர்.

123. **"மித்திரன்" நிர்வாகி**: பாரதி காலத்தில் "மித்திரன்" நிர்வாகக் குழுவிலும் தற்போது அதன் ஆசிரிய பீடத்திலும் இருக்கும் சி. ஆர். ஸ்ரீநிவாஸன். வசனத்தில் பாரதியின் நேர் நடையைக் கைக்கொண்டவர்.



124. **"மித்திரன்" அலுவலகம் 1921**: பாரதி காலத்தில் ஜார்ஜ் டவுனில் "மித்திரன்" இருந்த கட்டடம். எர பாலு செட்டி தெருவும் லிங்கண்ண நாய்க்கன் தெருவும் கூடுமிடத்தில்.



125. **மாடிப் படி**: "மித்திரன்" அலுவலகத்துக்குள் செல்லும் படி. முன்பு மரப்படியாக இருந்தது. பாரதி இரண்டு மூன்று படிகளைச் சேர்த்தே தாண்டுவாராம்.



# மீண்டும் சென்னை வாசம்

கடயத்திலிருக்கையில் பாரதி தம் உறவினர் வீட்டுக் கல்யாணம் ஒன்றுக்காகத் திருவனந்தபுரம் போயிருந்தார். திருவனந்தபுர விஜயத்தின்போது சில குறிப்பிடத்தக்க சம்பவங்கள் நடந்தன.

கல்யாண வீட்டில் பலர் புகழ் பெற்ற திருவனந்தபுர மிருகக் காட்சிசாலைக்குப் போயிருந்தார்கள். பாரதியும் செல்லம்மாளும் கூடப் போனார்கள். மிருகக் காட்சிசாலையில் ஒவ்வொரு மிருகத்தையும் அன்புடன் தடவிக் கொடுத்து வந்தார் பாரதி. குரங்குகள் கரடிகள் பாதகமில்லை; புலி சிங்கத்தை நம்ப முடியாது என்று காட்சிசாலைக் கிழவன் எச்சரிக்கை செய்தான். என்னை ஒன்றும் செய்யாது, சிங்கத்தைக் கூப்பிடு, தழுவிக்கொள்கிறேன் என்றார் பாரதி. அரை மனதுடன் கிழவன் சிங்கத்தை அழைத்தான். எதற்கும் முன் ஜாக்கிரதையாக அதன் வாலைப் பிடித்துக் கொண்டு, தொடச் சொன்னான்.

பாரதி பயமின்றி சிங்கத்தினருகே போனார். "மிருகராஜா! கவிராஜன் பாரதி வந்திருக்கிறேன். உன் சக்தியையும் வீரத்தையும் எனக்குக் கொடுக்க மாட்டாயா? நீ பொல்லாதவனென்று இவர்கள் பயப்படுகிறார்கள். உங்கள் இனம் மனிதரைப்போல் உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்யும் சுபாவம் இல்லாதது என்பதையும், அன்பு கொண்டோரை வருத்தாதது என்பதையும் இங்கிருப்போர் தெரிந்துகொள்ளும்படி உன் கர்ஜனையின்மூலம் தெரியப்படுத்து ராஜா" என்றார்.

உடனே சிங்கம் கம்பீரமாகப் பத்து நிமிஷம் கர்ஜித்தது. தமக்குத் திருப்தியாகும் வரை பாரதியும் சிங்கத்தின் தலை, பிடரி, காது எல்லாவற்றையும் தடவிக் கொடுத்தார். செல்லம்மாள் முதலியோர் மட்டும் தடுக்காமலிருந்தால், வாயிலும் கைவிட்டுப் பார்த்திருப்பாராம்!

திருவனந்தபுரத்தில் பிரபல வக்கீலாக விருந்த கே. ஜி. சேஷையர் வீட்டில் பாரதி இறங்கியிருந்தார். சேஷையர் நல்ல தமிழபிமானி. அவரது சகோதரர் கே. ஜி. சங்கரய்யரும், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும், அப்போது திருவனந்தபுரத்தில் வக்கீலாயிருந்த எஸ். வையாபுரி பிள்ளையும் சைவப் பிரசார சபை என்ற சங்கத்தில் மாலைதோறும் திருக்குறள் வகுப்பு நடத்தி வந்தனர். திருவனந்தபுரத்தில் தெருவழியே சென்ற பாரதி, மலையாள நகரில் தமிழ்ப் பெயர்ப் பலகை ஒன்றைக் கண்டார். குதூகலத்துடன் உள்ளே நுழைந்து, அங்கு பிறரை எதிர்பார்த்து நின்ற வையாபுரிப் பிள்ளையிடம் தாம் யாரென்று அறிவித்துக்கொண்டார். வையாபுரிப் பிள்ளை பாரதியை உள்ளேயழைத்துச் சென்று எல்லாருக்கும் அறிமுகப்படுத்தி வைத்தார், பாரதியைப் பாடும்படியும் வேண்டினார். "சின்னஞ் சிறு கிளியே", "வெடுபடி மண்டத் திடி பல தாளம் போட" என்ற பாடல்களை பாரதி பாடினார்.

பாரதி குடிக்க நீர் கேட்டார். பிள்ளையவர்கள் ஆரஞ்சு கிரஷ் கொண்டுவர ஆளை அனுப்பினார். "தண்ணீர் போதுமானது" என்றார் பாரதி. அக்கம் பக்கத்தில் பிராமணர் வீடுகள் இல்லையென்றார் பிள்ளை. எரித்து விடும் பார்வையுடன், தாம் அவ்வாறான ஜாதி வேறுபாடுகளைப் பாராட்டுவதில்லை என்று கடுமையாகவே பாரதி சொன்னாரென பிள்ளையவர்கள் குறித்திருக்கிறார்.

* * *

நாளாக ஆக, கடயம் வாசம் பாரதிக்கு அலுத்துவிட்டது. சிறிய கிராமம், முற்போக்கில்லாத மக்கள், தம் ஜீவனோபாயத்துக்கும் வசதி இல்லை. பாரதி மீண்டும் சென்னை செல்லத் தீர்மானித்துவிட்டார். இளமையில் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் சென்னையில் உல்லாசமாய்க் காலம் கழிந்ததும் அவருக்கு நினைவுத் திரையில் தோன்றியிருக்கக் கூடும்.

*1920*-ஆம் ஆண்டு முடிவில், அநேகமாக நவம்பர் மாதத் துவக்கமாயிருக்கலாம், பாரதி சென்னை வந்து சேர்ந்தார்.

பாரதி நேராகத் தம் பழைய நண்பர் வக்கீல் எஸ். துரைசாமி அய்யர் வீட்டுக்குச் சென்றார். ஜார்ஜ் டவுன், ராமசாமித் தெருவில் வசித்து வந்தார் துரைசாமி அய்யர். பாரதியின் விருப்பப்படி அவர் "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்காரிடம் போனார். தம் காரியாலயத்தில் பாரதிக்கு எப்போதும் வேலை உண்டென ரங்கஸ்வாமி அய்யங்கார் மலர்ச்சியுடன் தெரிவித்தார். *14* வருஷங்களுக்குப் பின் மீண்டும் "மித்திரன்" உதவி யாசிரியரானார் பாரதி.

*1920*, நவம்பர் *15*-ந் தேதி முதலாக பாரதியின் நானுவிதக் குறிப்புகள் அநேகமாய் தினந்தோறும் "மித்திர"னில் வெளிவரத் தொடங்கின. அவ்வப்போது வரும் செய்திகளை வியாஜமாகக் கொண்டு, அரசியல், சமூகம், கலைகள் முதலிய பற்பல விஷயங்களைப் பற்றித் தமது சிந்தனைச் சுடர்களை எழுதித் தள்ளினார் பாரதி.

# வேதனை வடிந்த கண்கள்

பாரதி மீண்டும் "மித்திர"னில் சேர்ந்த சமயம் அதன் காரியாலயம் ஜார்ஜ் டவுனில் எர்ரபாலு செட்டித் தெருவும் சிங்கண்ண நாய்க்கன் தெருவும் கூடுமிடத்திலுள்ள மூலைக் கட்டடத்தில் இருந்தது. பக்கத்தில், சிங்கண்ண நாய்க்கன் தெருவில், ஒரு மரப் படி. மாடியில் ஆசிரியர்கள் அறைக்கு இது வழியே தெருவிலிருந்தே ஏறலாம். பாரதி மரப் படிகளை அடிக்கு நாலு படியாகத் தாவி ஏறுவார், இறங்குவார்!

பாரதியைத் தாம் முதன் முதலாகச் சந்தித்த விவரத்தை "மித்திரன்" ஆசிரியர் சி. ஆர். ஸ்ரீநிவாஸன் சொற்சித்திரமாய் வரைந்து காட்டி யிருக்கிறார். 1920-ஆம் வருஷ இறுதி, ஸ்ரீநிவாஸன் அப்போது "மித்திரன்" நிர்வாகக் குழுவில் இருந்தார். அவர் கூறுகிறார்:

"ஒரு நாள் காலை 10 மணி இருக்கும். ஆபீஸில் தபால் பார்த்துக் கொண்டிருந்தேன். கனவேகமாய் ஒரு ஜட்கா வண்டி ஆபீஸை நோக்கி வந்தது. ஆபீஸ் பெயரைப் பார்த்ததும் 'நிறுத்து' என்று கூறினர் வண்டியிலிருந்தவர். நிற்கிற வரையில் தாங்கவில்லை. குறுக்குக் கம்பியைத் தள்ளிக்கொண்டு கீழே குதித்தார். தள்ளின கம்பி திரும்பி வந்து சொக்காயில் மாட்டிக் கொண்டது. அலக்ஷியமாகக் கையை உதறினர். சொக்காயின் கை கிழிந்து விட்டது. அதையும் கவனிக்கவில்லை. ஓடோடியும் உள்ளே வந்தார். நான் இருந்த அறைக்குக் குறுக்குக் கதவுகள் இருக்கக் கண்டு, சற்று தயங்கினர். மெள்ளக் கதவைத் தட்டினர். பதில் இல்லை. கதவுக்குமேல் தலையை நீட்டி உள்ளே பார்த்தார். என்னைக் கண்டதும் சிறிது லஜ்ஜைப்பட்டார். 'யார்?' என்று நான் கேட்டேன். 'நான்தான் சுப்பிரமணிய பாரதி' என்றார். 'வாருங்கள், உள்ளே வாருங்கள், உட்காருங்கள்' என்றேன்.

"அன்று கண்ட பாரதி இன்றளவும் என் அகக் கண்முன் நின்றுகொண்டே யிருக்கிறார். நடுத்தர உயரம்; ஒற்றை நாடி; மாநிறம் படைத்த மேனி; பிரிபிரியாய்ச் சுற்றிய தலைப் பாகை; அகன்ற நெற்றி; அதன் மத்தியில் காலணு அளவு குங்குமப் பொட்டு. அடர்ந்த புருவங்கள் உருண்ட கண்களைக் காத்து வந்தன. நிமிர்ந்த நாசி வாடிய கன்னங்களை விளக்கிக் காட்டியது. முறுக்கிய மீசை மேல் உதட்டை மறைத்தும், உறுதியிழந்த உயிர் நிலையைக் கீழ் உதடு காட்டி விட்டது. உடல் மீது பித்தான் இல்லாத ஷர்ட்டு; அதை மூட ஒரு அல்பகா கோட்டு; வண்டியிலிருந்து குதித்தபோது அதுவும் கிழிந்து விட்டது.

"நாற்காலியில் உட்கார்ந்தார். நாவெழவில்லை; கண்கள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன; அறையைச் சுற்றிப் பார்த்தன; என்னையும் ஏற இறங்கப் பார்த்தன. வெகுண்ட கண்கள்; வேதனை வடிந்த கண்கள்; சாந்தம் நிறைந்த கண்கள்; வசியம் மிகுந்த கண்கள். அவை என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விட்டன!"

இந்த சொற்சித்திரத்துடன் இன்னொரு சொற்சித்திரத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். புதுவையிலிருந்து கடயம் சென்ற பாரதி, 1919-ம் ஆண்டு மார்ச் மாதம் முதன் முதல் தடவையாக சென்னைக்குத் திரும்பி வந்தபோது துரைசாமி அய்யர், நெல்லையப்பர் சி. ராஜகோபாலாச்சாரியார் முதலிய நண்பர்கள் அவரை ரயிலடியில் சந்தித்து வரவேற்ருர்கள். அப்போது தாம் கண்ட காட்சியை ராஜாஜி விவரிக்கிறார்:

"பாரதியார் ரயிலிலிருந்து இறங்கினர். அவரைப் பார்த்ததும் எனக்கு ஒரே துக்கமாய்ப் போய்விட்டது. ஏற்கனவே நான் அவரைப் பார்த்தபோது அவருடைய முகம் பூரண சந்திரனைப் போன்ற தேஜஸ் பொருந்தியதாயிருந்தது. ஆனால், இப்போதோ களையிழந்து வற்றி உலர்ந்துபோயிருந்தது. 'ஐயோ! இவர் இப்படிப் போய்விட்டாரே!' என்று நான் வருத்தப்பட்டேன்."

1919 துவக்கத்தில் மலர்ச்சி யற்றிருந்த பாரதி 1920 முடிவில் "மித்திர"னில் சேர்ந்த சமயம் ஓரளவாவது அகமலர்ந்திருந்தாரா?

* * *

"சுதேசமித்திர"னில் மீண்டும் வேலை பார்க்கத் தொடங்கிய பாரதி, தமது பொது வாழ்வு அலுவல்களையும் ஓரளவு ஆரம்பித்தார். ஆனால் முன்போல அவர் அரசியலில் தீவிரமாக ஈடுபடவில்லை; அவரது கவனமெல்லாம் இலக்கிய, வேதாந்த விஷயங்களிலேயே இருந்தது.

1920-ல் பாரதிக்கு சுமார் நூறு ரூபாய் சம்பளம் கிடைத்து வந்த சமயம் "மித்திரன்" ஆசிரியருக்கு ஆயிரம் ரூபாய் சம்பளம் கிடைத்துவந்தது. இதில் பாரதிக்கு மட்டற்ற மகிழ்ச்சி. "தமிழ்ப் பத்திராதிபர் ஒருவருக்கு ஆயிரம் ரூபாய் சம்பளம் கிடைக்கும் காலம் வந்துவிட்டது பார்த்தாயா!" என்று குவளைக் கண்ணனிடம் சொல்லி மகிழ்ந்தாராம்.

பாரதியுடன் "மித்திர"னில் உழைத்து வந்த உதவியாசிரியர்களில் எம். எஸ். சுப்பிரமணிய அய்யரும், டி. எல். நடேசனும் இருவர். முதலவர் தேசிய வீரர் சரித்திர நூல்களை எழுதிப் புகழ் பெற்றுள்ளார்; மற்றவர் "மித்திர"னில் இன்றும் தொண்டுபுரிகிறார்.



126. **கவியரசர்:** கடைசி காலத்தில் பழுத்த வேதாந்தியாக இருந்த பாரதியின் தோற்றம். காரைக்குடியில் ஒரே நாளில் எடுக்கப்பெற்ற இரு படங்களில் முதலாவது. இரண்டாவது எடுத்த படம் இந்நூலில் 113-ம் பக்கத்தில் காண்க.

K.R. SARMA
-30

**127. குள்ளச்சாமிக்காகக் கடிதம்:** புதுவையில் தம்மால் பரமயோகி யெனக் கருதப்பெற்ற குள்ளச்சாமி யைச் சென்னைக்குத் தருவிக்க பாரதி அனுப்பிய கடிதத்தின் பகுதி. குள் ளச்சாமி சென்னை வந்தார், கூட்ட மும் உபசாரமும் நடந்தன,

**128. பாரதி குள்ளச்சாமி சந்திப்பு:** "அன்றொரு நாட் புதுவை நகர் தனிலே" இருவரும் சந்தித்ததை விளக்க ஓவியர் கே. ஆர். சர்மா 1930-ல் வரைந்த படம். அக்காலத் தில் "மித்திர"னில் தொடர்ச்சியாக வந்த பாரதி பாடல் சித்திரங்களில் இது ஒன்று. தலைப்பாகை யற்ற பாரதி இவ்வாறுதான் இருப்பார்.

# சென்னையில் குள்ளச்சாமி

**பு**துவையிலே பாரதிக்குப் பழக்கமான பரதேசிச் சாமியார்களில் குள்ளச்சாமி என்பார் ஒருவர். பாரதி கூறுகிறார் :

"அவருக்கு வயது ஐம்பதோ, அறுபதோ, எழுபதோ, எண்பதோ யாருக்கும் தெரியாது. அவருடைய உயரம் நாலரை அடியிருக்கும். கருநிறம். குண்டு சட்டியைப்போல் முகம். உடம்பெல்லாம் வயிரக்கட்டை போலே நல்ல உறுதியான பேர்வழி.

"அந்த மனுஷ்யன் ஜடபரதருடைய நிலைமையிலே இருப்பதாகச் சொல்லலாம். பேசினால் பயித்தியக்காரன் பேசுவது போலிருக்கும். இழுத்திழுத்து, திக்கித் திக்கி, முன்பின் சம்பந்தமில்லாமல் விழுங்கி விழுங்கிப் பேசுவார். தெருவிலே படுத்துக் கிடப்பார். பசித்த போது எங்கேனும் போய்ப் பிச்சை வாங்கிச் சாப்பிடுவார். கள் குடிப்பார். கஞ்சா தின்பார். மண்ணிலே புரளுவார். நாய்களுடன் சண்டை போடுவார்.

"வீதியிலே பெண் பிள்ளைகளுக்கெல்லாம் அவரைக் கண்டால் இரக்கமுண்டாகும். திடீரென்று ஒரு வீட்டிற்குள் நுழைந்து, அந்த வீட்டிலிருக்கும் குழந்தைகள் நெற்றியிலே திருநீற்றைப் பூசிவிட்டு ஓடிப் போவார். யாராவது திட்டினாலும் அடித்தாலும் பொறுத்துக்கொண்டு அவ்விடத்தை விட்டு ஓடிப் போய் விடுவார்......

"பின்னொரு நாள் அவரிடம் பரிகாசமாக நான்...'ஏதேனும் தொழில் செய்து பிழைக்கக்கூடாதா?' என்று கேட்டேன். அந்தப் பரதேசி சொல்கிறார் : 'தம்பி, நானும் தொழில் செய்துதான் பிழைக்கிறேன். எனக்கு வண்ணான் வேலை. ஐம்புலன்களாகிய கழுதைகளை மேய்க்கிறேன். அந்தக் கரணமான துணி மூட்டைகளை வெளுக்கிறேன்.' "

இந்தக் குள்ளச்சாமியை ஒரு நாள் நண்பர் ஒருவர் வீட்டில் சந்தித்து உலகில் உண்மை எது என்று கேட்டார் பாரதி. பிடித்த கையைத் திமிறிக்கொண்டு கொல்லைப் பக்கம் ஓடி, அங்கே ஒரு குட்டிச் சுவர் காட்டி, சூரியனைக் காட்டி, கிணற்றில் சூரிய பிம்பம் காட்டி, 'அறிந்தாயா?' என்று சைகையால் வினவினார் குள்ளச்சாமி. மனத்தைக் கட்டி, மண் போலே சுவர் போலே வாழ்ந்தால், கிணற்றுள் சூரிய பிம்பம் தெரிவது போல உனக்குள்ளே தெய்வ ஒளி காண்பாய் என்று பொருள் தெரிந்து கொண்டார் கவிஞர்.

குள்ளச்சாமி அஷ்டமா சித்திகள் பெற்றவரென்று பாரதி விவரித்திருக்கிறார். தமது யோக சித்தியாலும் காயகல்ப சிகிச்சையினாலும் வயதுரைக்க வழியில்லாமல் சாவைக் கடந்து விட்டவர் என்று பாடியிருக்கிறார். ஒரு சமயம் பாரதி தம் வீட்டு மேல் மாடியில் தனியே உலாவிக் கொண்டிருக்கையில் சாமியாரும் வேணு முதலி என்பவனும் வந்த போது, வேணு முதலியின் சுடு சொற்களை அடக்குவதற்காக சாமியார் விசுவ ரூப தரிசனம் காட்டிய அதிசயத்தை 'சும்மா' என்ற கட்டுரையில் பாரதி விவரித்திருக்கிறார்.

இத்தகைய மகிமை வாய்ந்த பெரியாரை சென்னைக்கு அழைத்து வர வேண்டுமென்று பாரதி தீர்மானித்தார். நண்பர் வக்கீல் துரைசாமி அய்யரிடம் சொல்லி ஏற்பாடு செய்து, சாமியாரைச் சென்னைக்கு அழைத்து வரும்படி புதுவையில் பொன்னு முருகேசம் பிள்ளையின் இளைய புதல்வர் கனகராஜாவுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

குள்ளச்சாமி சென்னைக்கு வந்தார். அவருக்கு கோகலே ஹாலில் ஒரு உபசாரம் நடந்தது. கூட்டத்தின் விவரமும் குள்ளச்சாமியின் படமும் அக்காலத்தில் "ஹிந்து" பத்திரிகையில் வெளி வந்தனவாம்.

குள்ளச்சாமியை பாரதி மிக உயர்வாகக் கருதிய போதிலும், அவ்வமயம் சென்னையிலிருந்த வ. உ. சிதம்பரம் பிள்ளை அவரை மிகத் தாழ்வாகவே மதிப்பிட்டிருக்கிறார். பாரதியும் குள்ளச்சாமியாரும் பெரம்பூரில் வ. உ. சி. வீட்டுக்கு வந்திருந்தனராம்.

வ. உ. சி. தமது பாரதி நினைவுக் குறிப்புகளில் கூறுகிறார்: "மூவரும் மத்தியானச் சாப்பாடு சாப்பிட்டோம். சிரம பரிகாரத்தின் பொருட்டு மூவரும் படுத்து உறங்கினோம். மாலை சுமார் மூன்று மணிக்கு அவர்களிருவரும் பேயிரைச்சலிட்டு வாதாடிக் கொண்டிருப்பதைக் கேட்டு நான் விழித்துக் கொண்டேன். ஒரு சிறு அமிர்தாஞ்சன் டப்பாவிலிருந்து ஏதோ ஒரு லேகியத்தை எடுத்து ஆளுக்கு ஒரு எலுமிச்சங்காய் அளவு வாயில் போட்டுக் கொண்டனர். அவர்கள் கொம்மாளம் அதிகமாயிற்று.

" 'அது என்ன மாமா?' எனக் கேட்டேன்.

" 'அதுவா, மோக்ஷ லோகத்திற்குக் கொண்டு போகும் ஜீவாம்ருதம்' என்றார் மாமா (பாரதி). எனக்கு விஷயம் விளங்கி விட்டது......மாமாவின் மாற்றத்திற்கு இம் மருந்துதான் காரணம் என்று நிச்சயமாய்த் தெரிந்துவிட்டது."

ஆனால், குள்ளச் சாமியாரை அறிந்த மற்றும் பலர் அவர் பரம யோகியென்றும், மகா புருஷர் என்றுமே வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள்.

# திருவல்லிக்கேணியில் பாரதி

குள்ளச்சாமியைத் தருவித்த பாரதி, தமது சாகாமை தத்துவத்தைப் பற்றியும் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார். "நித்திய வாழ்வு" (Life Eternal) என்ற தலைப்பில் அவர் ஆங்கிலத்தில் பேசிய இக்கூட்டத்துக்கு நீதிபதி மணி அய்யர் (ஸர். எஸ். சுப்பிரமணிய அய்யர்) தலைமை வகித்தார். கூட்டம் வி. பி. ஹாலில் நடந்தது.

கூட்டத்துக்கு இரண்டு நாள் முன்பு பாரதி பிராட்வேயில் இருந்த ரத்னு கம்பெனி என்ற போட்டோக் கடைக்குப் போனார். தாம் முக்கியமானதோர் பொதுக் கூட்டத்தை விளம்பரம் செய்யும் துண்டுப் பிரசுரம் வெளியிடப் போவதாயும், அதற்காகத் தம்மை நேர்த்தியான போட்டோ எடுக்க வேண்டும் என்றும் சொன்னார். அவர் வந்த சமயம் கடையில் முதலாளி இல்லை. வி. எஸ். ஸர்மா என்ற பையனே இருந்தான். இவன் அப்போது கடையில் "கத்துக்குட்டி". தம் புகைப்படம் எடுக்கும் வேலையை ஒரு சிறு பையனிடம் ஒப்படைக்க பாரதி தயங்கினார். அவசரம் ஒரு பக்கம்; பையனின் தெம்பான பேச்சு ஒரு பக்கம். பாரதி போட்டோவுக்கு உட்கார்ந்தார். நெகடிவ்வைக் கழுவிப் பார்த்துத் தம்மிடம் காட்டும்வரை பாரதி காத்திருந்தார். படம் அவருக்கு மிகவும் திருப்தியாகி விட்டது.

பாரதியால் புகழப் பெற்ற இந்தப் படம் இப்போது எங்கும் கிடைக்கவில்லை. இதே போல், குவளைக் கண்ணனுடன் சென்று இதே ரத்னு கம்பெனியில் எடுத்துக்கொண்ட மற்றொரு படமும் கிடைக்கவில்லை.

ரத்னு கம்பெனியில் பாரதியால் பாராட்டப்பெற்ற இளைஞன், தற்சமயம் மதுரையில் வாழும் பிரபல சித்திரக்காரரான வி. எஸ். ஸர்மா என்பவராகும்.

* * *

*1920-21*-ல் பாரதி சென்னையில் வாழ்ந்த சமயம், பாரதி முதலில் தம்புச்செட்டித் தெருவிலும், பிறகு திருவல்லிக்கேணியில் தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெருவிலும் குடியிருந்தார். தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெருவில் 67-ம் எண் வீடு, கிழக்குப் பார்த்த சிவப்புக் கட்டடம்; பழங்காலத்துப் பாணியில் மற்ற வீடுகளில் இல்லாதபடி அலங்கார முகப்புக்கொண்டது. இந்தப் பெரிய வீட்டின் பின்புறக் கட்டில், இருட்டான அறைகளில், அதற்கும் வாடகை கொடுக்க முடியாத நிலையில்தான் பாரதி வசித்தார்.

இக்காலத்திய பாரதி பற்றி அதே தெருவில் வசித்த கி. சடகோபன் விவரித்துள்ளார்.

திருவல்லிக்கேணி பார்த்தஸாரதி ஸ்வாமி வீதி பவனி வரும்போதும் உற்சவ காலங்களிலும் பாரதி தம்மை மறந்து விடுவார். அலுங்காமல் நலுங்காமல் இரண்டொரு வார்த்தைகளில் பிரார்த்தனை செய்து தெய்வ அருள் பெற்று விட்டதாக நம்பும் கோஷ்டிக்கும் பாரதிக்கும் வெகு தூரம். ஸ்வாமியின் வாகனம் தெருவில் தென்பட்டால் ஓடோடி வருவார் தரிசனத்துக்கு. ஆனால், தரிசனமென்றால் நின்று கும்பிடுவதல்ல. வியர்க்க விறுவிறுக்க வாகனம் தூக்கும் ஆட்களில் தாமும் சேர்ந்து கொண்டு ஒரு தெரு முழுவதும் தோள் போட்டுச் செல்வார்.

பாரதியார் தெருவில் நடந்து போகும் போதும் இவர்தான் பாரதி என்று சொல்லி விடலாம். தெருவில் நடக்கும்போது மார்பை முன்னே தள்ளி, தலையை உயர நிமிர்த்தி யார்க்கு மஞ்சாத பார்வையுடன் சிப்பாய் மாதிரி அடியெடுத்து வைப்பார் பாரதி. எதிரே எவராவது நமஸ்காரம் செய்தால், சட்டென்று நின்று, இரு பாதங்களையும் இணைத்து, அழகாகக் கையெடுத்துக் கும்பிடுவார்.

பெரியவர்களுக்கு பாரதி ஒரு அசட்டுப் பைத்தியம்; ஆனால் இளைஞர்களுக்கோ அவர் தீரமிக்க லட்சிய புருஷர். தம்மை அணுகியவர்கள் சிறுவர்களாக இருந்தாலும் பாரதி பிரியமாக அவர்கள் விருப்பத்தை நிறைவேற்ற முயல்வார். பாரதியை சந்தித்துப் பேசிவிட வேண்டும், பாடிக் கேட்க வேண்டும் என்று சடகோபன் விரும்பினார். தம் விருப்பத்தை சடகோபன் குவளைக் கண்ணனிடம் தெரிவித்தார். "அதற்கென்ன பிரமாதம், வா" என்று குவளைக் கண்ணன் சடகோபனை "மித்திரன்" காரியாலயத்துக்கு அழைத்துச் சென்று, பாரதியாருக்கு அறிமுகம் செய்து வைத்து, விருப்பத்தைச் சொன்னார்.

உடனே பாரதி மாடியை விட்டுக் கீழே இறங்கி வந்தார். கீழே பத்திரிகைக் காகிதம் அடுக்கி வைத்திருக்கும் கிடங்குக்கு அழைத்துச் சென்றார். அங்கே காகித 'பேல்' மூட்டைகளில் ஒன்றின் மேல் சடகோபனும் மற்றொன்றின் மேல் குவளைக் கண்ணனும் அமரும்படி செய்தார். மற்றொரு மூட்டையின்மேல் தாம் ஏறி உட்கார்ந்து கொண்டார். உடனே ஐந்தாறு பாட்டுக்களைப் பாடித் தீர்த்து விட்டார்! சிறுவனுயிற்றே பாடுவானேன் என்றோ, கேட்பவர்களிடமெல்லாம் பாடலாமோ என்றோ துளிக்கூட அகம்பாவம் அல்லது பிகு கிடையாது!



129. **மிக இயற்கையான படம்:** கவியரசரின் இயற்கையான பரபரப்புத் தன்மையை அற்புதமாய்க் காட்டும் புகைப்படம். இது 1920-ல் தமது உற்ற நண்பர் பாரதிதாசனுக்காக கவிஞர் சென்னையில் எடுத்துக்கொண்ட படம். மிகப் பிரபலமான பாரதி முகமும் இதுவே.





130, 131. **வி. பி. ஹால் கூட்டம்** : 'நித்திய வாழ்வு' என்ற பொருளில் பாரதியின் சொற்பொழிவு நடந்த சென்னை வி. பி. ஹாலும் [வலம்] கூட்டத்துக்குத் தலைமை வகித்த நீதிபதி மணி அய்யரும் [இடம்].

132. **கி. சடகோபன்** : திருவல்லிக்கேணியில் பாரதியின் கடைசி நாட்களில் அவரை நன்கறிந்தவர்.



133. **வி. ஹரிஹர சர்மா** : புதுவை "இந்தியா" பத்திரிகையின் உதவியாசிரியர், புரட்சி வீரர், காந்தி பக்தர், ஹிந்தி பிரசாரகர், பாரதி பிரசுராலயம் அமைத்து நடத்தியவர்களுள் ஒருவர்.




134. **குவளைக் கண்ணன்** : 1938-ல் கோபி என்ற சித்திரக்காரர் நேரில் பார்த்து எழுதிய படம்.



135. **ஆர். சின்னசாமி** பாரதியின் கடைசிக் காலத்தில் அவரை நன்கு அறிந்திருந்த தேசபக்தர், அறிவாளி, ரஸிகர்.



# யானை காலடியில்

**1921** ஆகஸ்ட் மாதம் முதல் இரண்டு தேதிகளில் பாரதி ஈரோட்டுக்குப் போய், அங்கே கருங்கல்பாளையத்திலிருந்த ஒரு வாசக சாலையின் ஆண்டு விழாவில் "மனிதனுக்கு மரணமில்லை" என்ற பொருள்பற்றிப் பிரசங்கம் செய்தார். மறுநாள் ஈரோட்டில் வாய்க்கால் கரையில் ஒரு பொதுக்கூட்டத்தில் "இந்தியாவின் எதிர்கால நிலை" என்பது பற்றிப் பேசினார். "எனது ஈரோடு யாத்திரை" என்றொரு கட்டுரையும் எழுதினார். இது "சுதேச மித்திர"னில் ஆகஸ்ட் 4-ந் தேதி வெளியாயிற்று.

இதற்குப் பின், ஆகஸ்ட் 11-ல், காந்தியடிகளின் ஒரு கோடி ரூபாய் திலகர் நிதி முயற்சி பற்றியும், ஆகஸ்ட் 25-ந்தேதி ரவீந்திரநாத் தாகூரின் ஐரோப்பா திக் விஜயம் பற்றியும் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். இவையே அவரது கடைசிக் கட்டுரைகளாக முடிந்தன.

திருவல்லிக்கேணியில் வசித்த பாரதி தினமும் பார்த்தஸாரதி கோயிலுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் செய்து வருவார். கோயிலுக்குப் போகும்போது கையில் பழமும் தேங்காயும் எடுத்துச் செல்வார். ஸ்வாமிக்கு நைவேத்தியம் செய்வதற்கல்ல; கோயில் யானைக்குக் கொடுப்பதற்காக.

*1921*-ம் ஆண்டில் பார்த்தஸாரதி கோயிலில் ஒரு பெரிய யானை இருந்தது. அதைக் கோவிலுக்கு வெளியே கட்டி வைத்திருப்பார்கள். சிங்கத்தையே சகோதரனாகத் தடவிக் கொடுத்த பாரதி யானையையும் சகோதரனாக பாவிப்பார். கையில் எடுத்துச் செல்லும் பழம் தேங்காயை யானையிடம் தாமே நீட்டி, அது உண்பதைக் கண்டு மகிழ்வார். நாளாக ஆக, பழக்கம் ஏற்பட ஏற்பட, யானையிடம் தங்கு தடையின்றிப் போவார், பழம் தேங்காயைக் கொடுப்பார், யானையின் துதிக்கையைத் தடவிக் கொடுப்பார்.

கோயில் யானைக்கு ஒரு நாள் திடீரென்று மதம் பிடித்துவிட்டது. அதைச் சங்கிலியால் பிணைத்து, கோயில் முன் கட்டிப் போட்டிருந்தார்கள். வழக்கம்போல் தேங்காய் பழத்துடன் யானையைத் தேடிக்கொண்டு வந்தார் பாரதி. யானைக்கு மதம்பிடித்திருக்கிறதென்று எச்சரித்தார்களோ இல்லையோ, பாரதி எதையும் கவனிக்கவில்லை. "சகோதரா! இந்தா பழம், தேங்காய்!" என்று அன்புடன் நெருங்கிக் கையை நீட்டினார். யானை அதை வாங்கத்தான் வந்ததோ, மதத் திமிரில் தட்டிவிடத்தான் செய்ததோ தெரியவில்லை, துதிக்கையை விசிறியது. அடுத்த க்ஷணம் பாரதி யானையின் காலடியில் மூர்ச்சித்துக் கிடந்தார்!

வெறி பிடித்த யானை, என்ன செய்யுமென்று தெரியாது. காலடியில் கிடக்கிறார் ஒரு மனிதர், கவிஞர் பிரான். மக்கள் இன்னது செய்வதென்று தெரியாமல் தவித்தனர்.

யானைக் காலடியில் பாரதி கிடக்கிறாரென்ற செய்தி திருவல்லிக்கேணி முழுதும் தீபோல் பரவியது. எங்கோ இருந்த குவளைக் கண்ணன் காதிலும் விழுந்தது. பறந்து வந்ததுபோல, தூக்கமுடியாத தமது சரீரத்தைத் தூக்கிக்கொண்டு, ஓடோடி வந்தார் குவளைக் கண்ணன். எவ்வித யோசனையுமின்றி, யானை இருந்த இரும்புக் கிராதிக் கோட்டத்துக்குள் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். ரத்தப் பிரவாஹத்தில் கிடந்த பாரதியை எடுத்து நிமிர்த்தி, தோளில் சார்த்திக் கொண்டு வெளியே கொண்டு வந்து சேர்த்தார். கண் நொடிக்குமுன் எல்லாம் நடந்துவிட்டது!

மனிதச் சிங்கம் குவளைக் கண்ணனது தீரத்தைக் கண்டு மலைத்ததுபோல, மத யானையும் பிரமித்துப் போயிருக்க வேண்டும்!

குவளைக் கண்ணனுடைய அன்பு வேறு யாருக்கும் இல்லை! அன்றொரு நாள் புதுவையில் தெய்வமே அனுப்பிய தூதனாய்த் தோன்றிக் கைகொடுத்துக் காத்த அதே குவளைக் கண்ணன் இன்று மீண்டும் தெய்வமே அனுப்பிய தூதனாய் யானையினின்றும் பாரதியைக் காத்தார். "மிகத் தானும் உயர்ந்த துணிவுடைய நெஞ்சின் வீரர் பிரான் குவளையூர்க் கண்ணனென்பான்" என்று ஏற்கனவே பாரதி பாடிய புகழ்மாலையும் பொய்க்கவில்லை!

பாரதியை மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரும் மற்றும் சிலரும் ஒரு மோட்டாரில்வைத்து ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்கள். பாரதிக்கு உடம்பெல்லாம் காயங்கள். ஏற்கனவே பூஞ்சையான உடலில் இக்காயங்கள் மரண வாதனையை உண்டாக்கின. பாரதி சில நாட்கள் வலியால் அவதிப்பட்டார். ஆனால் விரைவில் குணமாகிவிட்டார். குணமடைந்த பின் "மித்திர"னில் எழுதியதோர் கட்டுரையில், 'யானை இன்னாரென்று தெரியாமல் தள்ளிவிட்டது; தெரிந்திருந்தால் தள்ளியிருக்காது. துன்புறுத்தும் எண்ணமிருந்தால் கீழே விழுந்ததும் தூக்கி எறிந்திருக்காதா? அல்லது கால்களினால் துவைத்திராதா? அப்படியே நின்றதன் அர்த்தம் என்ன? என்னிடம் அதற்குள்ள அன்பே காரணம்' என்றாராம்.

# கடைசி நாள்

யானையிடமிருந்து பாரதி உயிர் தப்பிப் பிழைத்தாரென்றாலும், அந்தச் சம்பவத்துக்குப் பின் வெகுநாளாகவில்லை, அவரை யமன் வேறொரு வகையில் அழைத்துச் செல்ல வந்துவிட்டான். யானைச் சம்பவத்துக்குப் பின்னர் பாரதிக்கு வயிற்றுக் கடுப்பு நோய் கடுமையாய்ப் பிடித்துக்கொண்டது.

பாரதி உடல் நலமற்றிருந்தது அவரது நண்பர்கள் பலருக்கும் உடனே தெரியவில்லை. பரலி சு. நெல்லையப்ப பிள்ளைகூட, இவ்விஷயத்தை ஸெப்டம்பர் 11-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை பகலில்தான் அறிந்தார். லக்ஷ்மண அய்யர் என்ற ஒரு நண்பருடன் நெல்லையப்பர் பாரதியைப் பார்க்கச் சென்றார்.

அதற்கு முன்னதாக, அப்போது சென்னை "தேசபக்தன்" ஆசிரியராக இருந்து கைது செய்யப்பட்ட வ. வே. ஸு. அய்யர் பாரதியைப் பார்த்துச் செல்ல அநுமதி பெற்று வந்திருந்தார். "பாரதி, நீ நோய்க்கு மருந்து சாப்பிடமாட்டேனென்கிறாயாமே. சாப்பிட்டு உடம்பைத் தேற்றிக்கொள்ள வேண்டாமா?" என்று நல்ல வார்த்தை கூறிச் சென்றார் வ. வே. ஸு. அய்யர்.

நெல்லையப்பர் வந்து பார்த்தபோது பாரதியின் உடல் நிலை கவலைக்கிடமாயிருப்பதை உணர்ந்தார். நெல்லையப்பர் அந்த நாளும் இரவும் அங்கேயே இருந்தார். பாரதியின் கடைசி நாளை அவர் விவரிக்கிறார் :

"பாரதி மயக்க நிலையில் கிடந்தார். திருவல்லிக்கேணி மாடவீதியில் குடியிருந்த டாக்டர் ஜானகிராம் என்ற வைத்தியரை அழைத்துக் கொண்டு வந்து காட்டினோம். (இவர் ஆந்திர கேசரி ஸ்ரீமான் தங்குதூரி பிரகாசத்தின் தம்பியென்று எனது நினைவு.) அவர் பாரதியார் உடம்பைப் பரிசோதித்து, ஏதோ மருந்து கொடுக்க விரும்பினார். ஆனால் பாரதியார் மருந்தை அருந்துவதற்குப் பிடிவாதமாக மறுத்துவிட்டார். டாக்டர் அவரிடம் பேசி மருந்தை அருந்துமாறு வாதாடியபொழுது பாரதியார் தமக்கு எந்த மருந்தும் வேண்டாம் என்று கண்டிப்பாக மறுத்துவிட்டார். வைத்தியர் ஏமாற்றத்துடன் திரும்பினார். இரவெல்லாம் பாரதியார் மயக்க நிலையிலேயே கிடந்தார்.

"பாரதியார் நிலையை அறிந்த நானும் அன்பர் லக்ஷ்மண அய்யரும் இரவில் அங்கேயே தங்குவதென முடிவு செய்தோம். எங்களுக்குத் தூக்கம் வரவில்லை. அடிக்கடி எழுந்து, யமனுடன் போராடிக் கொண்டிருந்த பாரதியாரைக் கவனித்துக் கொண்டிருந்தோம். பின்னிரவில் சுமார் இரண்டு மணிக்கு பாரதியாரின் மூச்சு அடங்கிவிட்டது. உலகத்தாருக்கு அமரத்துவ உபதேசம் செய்த பாரதியார் மரணம் அடைந்தார்.

கரவினில் வந்து உயிர்க் குலத்தினை அழிக்கும்
காலன் நடுநடுங்க விழித்தோம்

என்றும்,

காலா உனைநான் சிறுபுல்லென மதிக்கின்
றேன்—என்றன்
காலருகே வாடா! சற்றே உனை மிதிக்கின்
றேன், அட (காலா)

என்றும் பாடிய பாரதியார் காலனுக்கு இரையானார்.

"பாரதியாரின் மரணச் செய்தியைப் பொழுது விடிந்தவுடன் நகரத்திலுள்ள நண்பர்களுக்குச் சொல்லி அனுப்பினோம். எங்களுக்கு நண்பர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் மிக மிகச் சிலரே. அப்பொழுது மண்ணடி ராமசாமித் தெருவில் குடியிருந்த வக்கீல் சா. துரைசாமி அய்யர், ஹிந்திப் பிரசாரகர் ஹரிஹர சர்மா, வி. சர்க்கரைச் செட்டியார், அப்பொழுது கிறிஸ்தவப் பாதிரியாகப் புரசைப்பாக்கத்தில் ஒரு பங்களாவில் குடியிருந்த எதிராஜ் சுரேந்திரநாத் ஆர்யா, மண்டயம் திருமலாச்சாரியார் ஐவரும் குறிப்பிடத் தக்கவர்கள். பாரதியார் குடும்பத்துக்கு எப்பொழுதும் ஆதரவு புரிந்து வந்த வக்கீல் துரைசாமி அய்யரே பாரதியாரின் கடைசி நாள் கிரியைகளுக்கும் உதவி புரிந்தார்.

"பாரதியார் உடலை காலை எட்டு மணிக்குத் திருவல்லிக்கேணி மயானத்திற்குக் கொண்டு போனோம். நானும் லக்ஷ்மண ஐயரும், குவளை கிருஷ்ணமாச்சாரியார், ஹரிஹர சர்மா, ஆர்யா முதலியவர்களும் பாரதியார் பொன்னுடலை இறுதியாகச் சுமந்து செல்லும் பாக்கியம் பெற்றோம். பாரதியார் உடல் மிகச் சிறிது. அன்று தீக்கிரையான அவர் உடல் நிறை சுமார் 100 பவுண்டுக்கும் குறைவாகவே யிருக்கும். இன்று உலகம் போற்றும் கவிச் சக்கரவர்த்தியுடன் அன்று அவரது கடைசிநாளில் திருவல்லிக்கேணி மயானத்துக்குச் சென்றவர்கள் சுமார் இருபது பேருக்கும் குறைவாகவே இருக்கலாம். பாரதியாரின் பொன்னுடலை அக்னி தேவரிடம் ஒப்புவிக்கும் முன்னர் நண்பர் சுரேந்திரநாத் ஆர்யா சிறியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினார்."

பாரதிக்கு அன்று கர்மம் செய்தவர் ஹரிஹர சர்மாவாகும்.

பல நூற்றாண்டுக்கோர் முறை தோன்றும் மகா மேதை ஒருவரின் வாழ்வு இவ்வாறு முடிவெய்தியது. தம்மிடையே ஒரு அதிசய புருஷர் வாழ்ந்தாரென அவர் காலத்திய தமிழுலகம் அறியவில்லை; நண்பர் சிலரே உணர்ந்திருந்தனர்.

தென் தமிழ் நாட்டில் எட்டயபுரத்தில் 1882-ம் ஆண்டு டிஸம்பர் மாதம் 11-ந் தேதி தோன்றிய அம் மேதை, சென்னை திருவல்லிக்கேணியில் 1921-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 12-ந் தேதி அதிகாலையில் சுமார் 2 மணிக்கு பூதவுடல் நீத்துப் புகழுடல் எய்தினார். அப்போது அவருக்கு 39 வயது நிறையவில்லை!



136. **கவிஞர் கடைசியாக இருந்த இல்லம்** : பல நூற்றுண்டுகளுக்கு ஒரு முறை தோன்றும் மகா மேதை பொன்னுடல் நீத்துப் புகழுடல் எய்திய திருவல்லிக்கேணி இல்லம். தெளிய சிங்கப் பெருமாள் கோயில் தெருவில் உள்ளது.

# "மனம் பதறுகிறது"

**1921**, செப்டம்பர் 12-ந் தேதி, திங்கட்கிழமை, (துன்மதி வருஷம் ஆவணி மாதம் 28ந்தேதி), "சுதேசமித்திர"னில், 6-ம் பக்கம், 'நகரச் செய்திகள்' பத்தியில் கடைசிச் செய்தியாக இது வெளிவந்தது:

### தென்னாட்டுக் கவிசிரேஷ்டர் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி மரணம்

ஒரு வாரமாக ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி தேக நோய் கொண்டு திருவல்லிக்கேணியில் அசௌக்கியமாயிருந்து திடீரென்று நேற்று இரவு 1 மணிக்கு இம்மண்ணுலகை விட்டு விண்ணுலக மடைந்தார். அவர் இறந்த செய்தி தெரிந்தவுடன் ஸ்ரீமான்களான புதுச்சேரி ஸ்ரீநிவாஸாச்சாரியார், திருமலாச்சாரியார், ஹரிஹர சர்மா, கிருஷ்ணசாமி சர்மா, சின்னஸ்வாமி, நெல்லையப்பர், நீலகண்டன் முதலான பலர் வந்தனர், செய்ய வேண்டிய காரியங்களுக்கு ஆரம்பஞ் செய்து தகனக்கிரியையும் நடந்தது. ஹரிஹர சர்மா, கிருஷ்ணசாமி சர்மா முதலானவர்கள் பிரேதத்தைத் தாங்கிக் கொண்டு சுடுகாடு சென்று, ஆங்கு, தகனத்திற்குச் சற்று முன்னர் ஸ்ரீமான் சக்கரைச் செட்டியார், கிருஷ்ணசாமி சர்மா, இராமச்சந்திர அய்யர் இவர்கள் தமிழில் பேசிய பிறகு, சுரேந்திர நாத ஆரியா தெலுங்கில் பேசினர். பாரதியார் இயற்றிய கீதங்கள் பாடின பிறகு தீ மூட்டப் பட்டது. பாரதியார் ஆவி நற்கதியடையும்படி எல்லோராலும் பிரார்த்திக்கப் பட்டது."

அன்றைய தினமே, "சுதேசமித்திரன்" இரண்டாவது தலையங்கம் பாரதியின் மரணத்தைப் பற்றிக் குறிப்பிட்டது:

### "காலஞ்சென்ற ஸ்ரீ சி. சுப்ரமணிய பாரதி

"மக்கள் வாழ்வு நீர்மேல் குமிழிபோலும்! தமிழ் நாடு போற்றும் ஸ்ரீ சுப்ரமணிய பாரதியார் இவ்வுலக வாழ்வை நேற்றிரவு துறந்து விண்ணவருக்கு விருந்தாகி விட்டார் என்ற செய்தியை அறிவிக்க நமது மனம் பதறுகிறது. சில தினங்களாக நோயினால் வருந்திக் கொண்டிருந்த அவரை மறுபடியும் ஸ்தூல சரீரத்தில் பார்க்கப் போகிறதில்லை என்று நாம் நினைக்கவில்லை. திங்கட்கிழமையன்று 'மித்திரன்' வேலைக்கு வந்து விடுவதாகச் சில தினங்களுக்கு முன் சொல்லியனுப்பிய அவர் திங்கட்கிழமையன்று சாம்பலாகி விட்டது என்ன கொடுமை! 39 வயதுக்குள் தமது கவித்திறமையாலும் தேசபக்தியாலும் தமிழ் நாட்டை வசப்படுத்தி விட்ட இச் சிறு பிள்ளையின் பிரிவை தமிழ் நாடு எப்படி சகிக்குமோ அறியோம். அன்பே உருவெடுத்தாற்போன்று விளங்கிய அவரைப் பிரிந்து அவரது மனைவியும் இரண்டு பெண் குழந்தைகளும் எப்படிப் பொறுத்திருப்பாரோ கொடிய எமனுக்குத்தான் தெரியும்.

"அவரது சரித்திரச் சுருக்கம் வேறிடத்தில் பிரசுரம் செய்யப்படுகிறது. பள்ளிக்கூடத்தை விட்டுக் கிளம்பியதும் ஸ்ரீமான் ஜீ. சுப்பிரமணிய அய்யரிடத்தில் மித்திரன் உதவி ஆசிரியராக அமர்ந்து வேலை செய்து வரும் நாளில் 'இந்தியா' என்ற வாரப் பத்திரிகை ஒன்றைத் தாமே நடத்தி வந்தார். அதன் மூலமாக ராஜாங்கத்தாருடைய கோபத்துக்கு ஆளாகி சுமார் 10 வருஷகாலம் பிரஞ்சு இந்தியாவில் வாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. பரபரப்பாக வேலை செய்யும் இயல்புடைய ஒருவர் சும்மா இருக்கும்படி நேர்ந்த காரணத்தால், அவருடைய தேகம் மெலிந்து போய் பழைய பாரதியின் சாயல் போல் இரண்டு வருஷங்களுக்கு முன் அவர் புதுச்சேரியிலிருந்து மீண்டு வந்தார். சிறிது காலம் தம்முடைய ஊராகிய கடயத்தில் இருந்து விட்டு தம் ஆசையைக் கவர்ந்த பத்திரிகை வேலைக்குத் திரும்பி வந்து மித்திரன் உதவியாசிரியர்களில் ஒருவராகி தேச ஊழியம் செய்துவரும் நாளில் திடீரென்று நம்மையெல்லாம் விட்டு மறைந்து போய்விட்டார். அவர் போய் விட்டாராயினும் அவருடைய அரிய பாட்டுகளும் அவருடைய கீர்த்தியும் எந்நாளும் பிரகாசிக்குமென்பதில் சந்தேகமில்லை. புதுச்சேரியில் வாழ்ந்து வந்த காலத்திலும் சக்திதாஸன் என்ற புனைப் பெயர்களுடன் அவர் மித்திரனுக்கு அடிக்கடி எழுதி வந்ததை இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிட விரும்புகிறோம். 'இந்தியா' என்ற வாரப் பத்திரிகையை அவர் நடத்தி வந்த காலத்தில் படித்தவர்கள் அவரது திறமையை நன்கு அறிந்திருப்பார்கள். அன்னமர்த்தனம் செய்து கொண்டு நூறு வயது வாழ்வதைவிட லோகோபகாரமாகச் சின்னாள் வாழ்வது சிறந்ததேயாகுமாயினும், தம்முடைய மனைவி மக்களுக்கு ஆதரவெதுவுமில்லாத நிலைமையில் பாரதியார் காலகதியடைந்து விட்டது மிகவும் பரிதாபகரமான விஷயம். 'வேதம் நிறைந்த தமிழ்நாடு, வீரம் செறிந்த தமிழ்நாடு' என்று தமிழ் நாட்டின் பெருமையைப் பாடின ஸ்ரீ சுப்ரமணிய பாரதியின் குடும்பத்தைக் காக்க தமிழ்நாடு முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். அவருடைய ஞாபகத்தைப் பாராட்டி பகல் இரண்டு மணியுடன் வேலை நிறுத்தப்படுகிறதால் ஏற்பட்ட சமாசாரங்கள் இன்று மித்திரனில் பிரசுரமாகமாட்டா."

1921 செப்டம்பர் 12-ந்தேதி "ஹிந்து" பத்திரிகையிலும் ஒரு உப தலையங்கம் வெளியாயிற்று; செய்தி தனியாகப் பிரசுரிக்கப் படவில்லை. "ஹிந்து" தலையங்கம் கூறியதாவது:

"We regret to learn of the death of Vara Kavi Subramaniya Bharati at his residence in Triplicane last night. The deceased was

an ardent nationalist, a great thinker, a shining speaker and a powerful writer. He is the author of a number of Tamil works including 'National Songs'. His recitation of his national Songs infused genuine Patriotism in the hearts of his listeners. He, like many other Patriots of India, was an exile in Pondicherry for some years, because his patriotic speeches did not please the Gods in power. He has for some time past been ailing and by his premature death the country has lost a born poet and a sincere patriot."

இதன் மொழி பெயர்ப்பு:

"வரகவி சுப்பிரமணிய பாரதி நேற்றிரவு திருவல்லிக்கேணியில் தமது இல்லத்தில் காலமானது கேட்டு வருந்துகிறோம். காலம் சென்ற பிரமுகர் தீவிர தேசியவாதி, கூர்ந்த சிந்தனையாளர், மனம் கவரும் பேச்சாளர், வலிமையான எழுத்தாளர். "தேசிய கீதங்கள்" உள்ளிட்ட பல நூல்களை அவர் செய்திருக்கிறார். தமது தேசியப் பாடல்களை அவர் பாடினால் கேட்போர் உள்ளத்தில் உண்மையான தேசபக்தி உண்டாகிவிடும். அவருடைய தேசபக்தி நிறைந்த பேச்சுகள் அதிகார தெய்வங்களுக்குப் பிடிக்கவில்லை யென்றதனால், அவர், மற்றும் பல இந்திய தேசபக்தர்களைப் போல, புதுச்சேரியில் சில ஆண்டுகள் அஞ்ஞாதவாசம் செய்ய வேண்டியிருந்தது. கொஞ்சகாலமாகவே அவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவருடைய அகால மரணத்தினால் நாடு ஒரு பிறவிக் கவியையும் மனப்பூர்வமான தேசபக்தரையும் இழந்து விட்டது."

---

# பாரதி இறந்த ஒரு வாரத்தில்

**பா**ரதியார் காலமான செய்தி தாங்கிய *1921* செப்டம்பர் *12*-ந் தேதி "சுதேச மித்திர"னிலேயே, தலையங்கத்துக்கு எதிர்ப் பக்கமான 5-ம் பக்கத்தில் பின்வரும் விளம்பரம் வெளியாயிற்று:

"காலஞ்சென்ற கவிராயர் சுப்பிரமணிய பாரதியார் எழுதிய அநேக விஷயங்கள்

நமது **கதா மாலிகா** என்னும் நூலில் வெளியிடப்பட்டிருக்கின்றன. சுமார் 33 பிரிவுகளுடன் கூடியது. கதைகளும் ரஸமான குறிப்புகளும் பொதிந்து கிடக்கின்றன. விலை ரூ 1.

மானேஜர்,
சுதேசமித்திரன் புத்தகசாலை,
சென்னை."

மறுநாள் செப்டம்பர் *13*ந் தேதி இதழில், பாரதியார் மரணத்தையொட்டிய முதல் அனுதாபக் கூட்டத்தைப்பற்றிச் செய்தி வெளியாயிற்று:

"ஓர் அனுதாபக் கூட்டம்

நேற்றிரவு தம்புச் செட்டி வீதி சாந்தாச்ரமத்தில் அமரகலா விலாஸினி ஸபையினதரவில் ஓர் கூட்டம் கூடி, ஸ்ரீ. வெ. சோமதேவ சர்மாவின் தலைமையின் கீழ் கீழ்க்கண்டபடி தீர்மானித்தது: 1. இச்சபையின் கௌரவ அங்கத்தினரும் தமிழ்க் கவிராயருமான ஸ்ரீ. சுப்பிரமணிய பாரதியாரின் அகால மரணத்திற்கு ஆழ்ந்துயரமடைவதுடன், அவரது குடும்பத்தாருக்கு அநுதாபத்தை அறிவிக்கிறது. 2. அடியிற் கண்ட நபர்களை கவிராயரின் சின்னத்திற்காக அவரது கவிகளை அச்சிட்டுப் பிரசுரித்து அதன் லாபத்தைக் கொண்டு அவர் குடும்பத்தை ஸம்ரக்ஷிக்க ஓர் தக்க கமிட்டி எற்படுத்தும்படி வேண்டுகின்றனர்:- தி. வெ. சோமதேவ சர்மா, ஏ. கிருஷ்ணசாமி அய்யர், கல்யாணசாமி அய்யங்கார், நாராயண ராவ், மணி பாகவதர், ஸாம்பய்யர்."

அடுத்தநாள், *14-9-1921* இதழில் 'நகரச் செய்திகள்' பத்தியின் கடைசியில் இக் நிருபம் வெளிவந்தது:

"எனது குருவையிழந்தேன்"

"சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவு 1 மணிக்கு எனது குருவாகிய ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியார் இம்மண்ணுலகைவிட்டு விண்ணுலகமடைந்தார் என்ற துக்கச் செய்தியைக் கேட்டு ஆற்றொணுத் துயரமடைந்தேன். அவர் புதுச்சேரியிலிருந்த காலத்தில் 'ஜாதி வித்தியாச'மென்னும் தொத்து வியாதியை இந்தியாவிலிருந்து ஓட்டினுல்தான் நம் பாரதமாதா விடுதலை பெறுவாளென்று என்னிடம் அடிக்கடி சொல்லி போதிப்பார். இவர் கவிசிரேஷ்டர் மாத்திரமல்ல. வேத வேதாங்க வேதாந்த, சாஸ்திரங்களிலும் நிகரில்லாத பாண்டித்யமுள்ளவர். இவர் தம்முடைய சக்தி முழுவதையும் மத விஷயங்களிலும் இராஜீய விஷயங்களிலும் ஜாதி விஷயங்களிலுமே உபயோகப்படுத்தி வந்தார், காளிதேவியின் சுயரூபத்தையே அவர் கண்ணுல் பார்த்ததாகச் சொல்லியிருக்கிருர். அவர் பயமென்பதே கிஞ்சிற்றுமில்லாத தீரபுருஷர். கவிசிரேஷ்டருக்குள் கவிசிரேஷ்டரென்றும், பேசும் திறமையுள்ளவர்களுக்குள் சிறந்தவரென்றும், இராஜ தந்திரியெனவும் இப்படிப் பலவிதங்களில் சிறந்த புகழ் பெற்ற இப் புண்ணிய புருஷர் நம்மெல்லோரையும் விட்டுப் பிரிந்து சென்றதானது பாரத புத்திரர்களெல்லோரையும் துக்கக் கடலில் அமிழ்த்தியது என்பதற்கு எம்மாத்திரமும் சந்தேகமில்லை. பகவத்கீதையில் பகவான் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஆத்மாவுக்குச் சாவு இல்லையென்று சொல்லியதைப்போல எனது குருவாகிய ஸ்ரீமான் பாரதியாரின் சரீரம் மறைந்து போனுலும் அவருடைய ஆத்மாவானது நம்மைச் சுற்றிக்கொண்டே இருக்கும். அவரைப் பிரிந்து தவிக்கும் அவரது மனைவியாருக்கும் இரு குழந்தைகளுக்கும்என் அநுதாபத்தைத்தெரிவிப்பதாக சீஷன் ஸ்ரீமான் ரா. க. லிங்கம் எழுதுகிருர்."

*14-9-1921* "சுதேசமித்திர"னிலேயே சில இரங்கற் பாக்களும் பிரசுரமாயின:

காலஞ்சென்ற ஸ்ரீமான் சுப்பிரமணிய
பாரதி கையறு நிலை

இடியேறு எதிர்ந்து படவர வென்னச்
செந்தமிழ் மாது நொந்து வருந்தவும்
இசைத் தமிழ்வாணர் அசையா தழுங்கவும்
நேற்று நின்னுடலுயிர் வேற்றுமை கண்ட

கூற்றுவ னென்னும் மாற்றலன் நின்னுயிர்
பருகின னன்றி யுருகின னின்றே
தமிழ்ச் சுவை யின்பஞ் சற்று மறியான்
அமிழ்தின் றேறல் அதுவென வறியான்

ஒப்பிலா பாரதி சுப்பிரமணிய நின்
நாட்டுப் பாட்டின் நலஞ் சிறிதுணரான்
கண்ணன் பாட்டின் கருத்தைத் தேருன்
வீரச் சுவையதில் விளங்குவ துணர்கிலன்

நேரமின்னும் நெருங்கிலை யுண்டான்
நினைக்க நினைக்க நெட்டுயிர்ப் பெடுக்கும்
வினை விளை காலம் வேறில்லை
பினையும் பிறப்பாய்ப் பெறுவாய் பணியே.

ஆர்வலன்
சு. அர்த்தநாரீச வர்மா.

"சுதேச மித்திரன்" *17-9-1921* இதழில் 'கடிதங்கள்' பகுதியில் பின்வரும் கடிதங்கள் பிரசுரமாயின :

## காலஞ்சென்ற ஸ்ரீமான் பாரதியார்

### I

ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியாரை இப் பாரத தேசத்தில் இன்னம் சில காலம் வைத்திருப்பதற்கு பாரத மாதாவிற்கு இஷ்டமில்லாதிருந்ததற்கு நாம் இங்கு மிகவும் வருத்தமடைகிறோம் என்று புதுச்சேரி ஸ்ரீமான் வெ. கிருஷ்ணசாமி செட்டியார் எழுதுகிறார்.

### II

உத்தம தேசாபிமானியும் தெய்வபக்தி நிறைந்தவரும், தேசீய கீதாமிருதத்தை இந்தியாவுக்கு அளித்தவருமாகிய ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதியார் தமது குடும்பத்தையும் இந்திய ஜனங்களையும் விட்டு விண்ணுலகமடைந்ததின் பொருட்டுக் கொண்டுள்ள அநுதாபத்தை "ஈரோடு செங்குந்த சன்மார்க்க பரிபாலனசபையார்" மேற்படி குடும்பத்திற்கு நேரே தெரிவித்திருப்பதோடு இதன் மூலமாகவும் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள் என்று காரியதரிசி எழுதுகிறார்.

### III

காரைக்குடியில் 15-ந் தேதி நடந்த ஓர் பொதுக் கூட்டத்தில், ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியாரின் மரணத்துக்காக அநுதாபம் தெரிவிக்கப் பட்டதோடு, ஸ்ரீமான் வ. வே. சு. அய்யரும் ஹநுமந்த ராவும் தேச சேவை செய்து அடக்கு முறைகளுக்கு ஆளாயிருப்பது பற்றி அவர்களைப் பாராட்டுவதாகவும் தீர்மானம் செய்யப்பட்டது. ஸ்ரீமான்கள் கோவிந்தராஜ ஐயங்காரும் சுப்பிரமணிய சிவாவும் மேற்படி விஷயமாகப் பாடுபட்டு வருகின்றனர். பாரத மாதா ஆலயத்துக்கு மகாத்மா காந்தி அஸ்திவாரக்கல் நாட்டுவாரென்றும் தெரிகிறது என்று ஸ்ரீமான் பசலா கிருஷ்ணய்யர் தந்திமூலம் அறிவிக்கிறார்.

அதே ஸெப்டம்பர் *17* ந்தேதி "மித்திரன்" இதழில் எஸ். ஸத்தியமூர்த்தியின் கடிதமொன்றும் வெளியாயிற்று :

## காலஞ்சென்ற ஸ்ரீமான் பாரதியார்

ஸ்ரீமான் எஸ். ஸத்தியமூர்த்தி ஐயர் பி. ஏ., பி. எல். பின் வருமாறு நமக்கு எழுதுகிறார்: ஒவ்வொரு தேசத்தின் சுதந்திர உணர்ச்சிக்கும் புனருத்தாரணப் பிரயத்தனங்களுக்கும் அனுகுணமான கவி சிரேஷ்டர்கள் அவ்வப்போது தோன்றி வந்திருக்கிறார்கள். ராஜ தந்திரிகளும் பட்டாளக்காரரும் ஒரு தேசத்துக்கு எவ்வளவு நலத்தைத் தந்தருளக் கூடுமோ, அந்த அளவுக்குக் கவிராயர்களும் நலந் தரக்கூடும். திருஷ்டாந்தமாக "மார்ஸல்லே" என்ற தேசகீதத்தைக் கேட்ட மாத்திரத்தில் பிரெஞ்சுக்காரர்களின் உணர்ச்சி எத்தகைத்தாயிருக்கிறதென்று நான் சொல்லவேண்டியதில்லை. அந்த கீதத்தை உச்சரித்தவுடனே பிரெஞ்சுக்காரர்களின் உடல் புளகாங்கிதமாகி, மகா உத்தமமான தீரச்செயல்களுக்கு அவர்களைத் தூண்டி விடுகின்றது. அப்படிப்பட்ட தேச மகா கவிகளில் எனது நண்பர் ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியும் ஒருவராகக் கொள்ளவேண்டும். கவிபாடும் திறமை அவருக்கு இயற்கையாகவே உண்டாகி, சிறு வயது முதற்கொண்டே தமது அபார புத்தியை தேசத்திற்காக அர்ப்பணஞ் செய்துவிட்டார். ஆங்கிலக் கவிகளான ஷெல்லியும் கீட்ஸும் இவரைப் போன்ற இளம் வயதில்தான் அற்புதமான கவிகளை இயற்றியபின் உலக வாழ்வை விட்டொழித்தனர். ஸ்ரீ பாரதியாரின் தமிழ்ப் பாடல்கள் எளிய நடையில் இயற்றப்பட்டு மனதை மிகவும் உருகச் செய்துவிடும் தன்மையுடையன. ஆயினும் எவ்வளவு பிராபல்யம் அடையவேண்டுமோ அந்த அளவுக்கு அவருடைய கவிகள் பிரசித்தியடையவில்லை. ஆனால் அக்கவிகளை எங்கு பாடிய போதிலும், ஒரு மாயசக்தி அதில் மறைந்து கிடத்தல் புலப்படாமற் போகாது. இதை நான் அனுபவத்திற் கண்டிருக்கிறேன். ஒரு கவியின் மனத்தே உதயமாகி வெளிவரும் விஷயம் எப்போதுமே ஸாமான்யமாயிராது. ஸ்ரீ பாரதியார் போன்றவர் இங்கிலாந்தில் பிறந்திருந்தால் அரண்மனைக் கவியாக அவர் கொண்டாடப்பட்டிருப்பார். சுயேச்சையடைந்த எந்த நாட்டிலாவது அவர் ஜனித்திருப்பாராகில், இவ்வளவு பால்யத்தில் மாண்டிருக்கமாட்டார்; தேசபாஷைக்கும் தாம் பிறந்த ஜாதிக்கும் ஒரு மஹத்தான செல்வத்தைச் சேர்த்து வைத்திருப்பார். வங்காள சிரேஷ்டர் ரவீந்திரநாதருக்கு அவர் சமமானவர். நான் மிகைபடப் பேசுவதாக நினைக்கக்கூடாது. ஸ்ரீ பாரதியாரை அறிந்தவர்களுக்கே நான் சொல்வதன் உண்மை செம்மையாகப் புலப்படும். தமது ஆயுள் காலத்தில் பெரும் பாகத்தை அவர் வன வாஸத்தில் செலவழித்துவிட்டார். தமிழ்நாட்டில் பிறந்து படாத கஷ்டங்கள் எல்லாம் பட்டு இளவயதிலேயே அவர் இறந்துபோய் விட்டார். ஆயினும் கடுகளவாவது இத்தமிழ் நாட்டுக்கு தேசாபிமானம் இருக்குமளவும், தமிழ் பாஷை இந்நாட்டைவிட்டு மறையாதிருக்கும்வரையிலும், ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியின் ஞாபகம் இருந்து கொண்டேதானிருக்கும். அவருடைய கவிகளை நான் பூராவும் நேரில் பாடிக் கேட்டிருக்கிறேன். ஆகையால் எனது மரியாதையை இச் சந்தர்ப்பத்தில் தெரிவிக்க நான் கடமைப்பட்டிருக்கிறேன். அவருடைய குடும்பம் நிர்க்கதியாயிருப்பது பலருக்குத் தெரியும். தமிழ்நாடு அதைச் சகித்திருக்கக்கூடாது. அவருடைய கவிகளை அச்சிட்டு விற்று, பெரிய நிதி சேர்த்து, அவரது மனைவி மக்களைக் காப்பாற்ற நாம் கடமைப் பட்டிருக்கிறோம். பண உதவி செய்வோரும் செய்க.

''சுதேசமித்திரன்'' அதே இதழில், செப்டம்பர் 17 ந்தேதி சனிக்கிழமையன்று, வார அநுபந்தத்தில் ''பிரஜாநுகூலன்'' ஆசிரியரும் பாரதியை நன்கறிந்தவருமான பிரபல எழுத்தாளர் எஸ். ஜி. ராமாநுஜலு நாயுடு பாரதி பற்றித் தம் நினைவுகள் சிலவற்றை விவரிக்கிறார். பாரதியார் பற்றிய முதல் கட்டுரை இதுவென்றே சொல்லலாம். இக்கட்டுரை யாவது:

### ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதி சில குறிப்புகள்

ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியார் ஆதியில் சுதேசமித்திரன் உதவி ஆசிரியராக இருந்து கொண்டே ''சக்கரவர்த்தினி'' என்ற தமிழ் மாதப் பத்திரிகைக்கும் ஆசிரியராக இருந்து அதை நடத்தி வந்தார். அதன் பின்னர் ''இந்தியா'' பத்திரிகையுடன் ''பால பாரதம்'' என்ற ஆங்கில வாரப் பத்திரிகையையும் நடத்தினர். ''இந்தியா'' பத்திரிகை 4000 காபிகள் வரைபோல் பிரசுரமாகிக் கொண்டிருந்தது. பிறகு புதுச்சேரிக்குச் சென்ருர். அந்த சமயம் ஸ்ரீ அரவிந்த கோஷ் ''கர்மயோகின்'' என்ற பத்திரிகையை நடத்துவதைப் பார்த்து, அதன் கருத்துக்களைத் தமிழில் தெரிவிக்க ''கர்மயோகி'' என்ற மாதப் பத்திரிகையை பாரதியார் ஆரம்பித்தார். மிக்க நன்ருக நடந்தது. அதன் பின் ''விஜயா'' என்ற தினசரித் தமிழ் பத்திரிகையைத் தொடங்கினர். அப் பத்திரிகை முற்றும் சித்திரங்கள் நிறைந்திருந்தன. அதுவும் எங்கும் வியாபகமாயிற்று. அதன் பின் படங்களைப் பிரசுரித்து அதன் விளக்கம் வரைந்து அவ்விதமாக ஒரு மாத சஞ்சிகையை வெளியிடுவதென்று ஏற்பாடு செய்தார். அந்த சமயத்தில் ''இந்தியா'' பத்திரிகை பறிமுதலாகி விடவே, அவரது பத்திரிகை முயற்சிகளும் நின்று போயின.

★

சென்னையில் ''இந்தியா'' பத்திரிகையை நடத்தும்போது அதில் சுதேச கீதங்கள் அடிக்கடி பிரசுரித்து வந்தார். அக்கீதங்களையெல்லாம் ஒன்று சேர்த்து ''ஸ்வதேச கீதங்கள்'' என்ற பெயருடன் ஸ்வல்ப கிரயமாகிய அணு 2 விலை வைத்து வெளியிட்டார். அக்காலை ஸ்ரீ திலகரின் புதிய கக்ஷியின் வியாபகம் எங்கும் பரவுவதாயிற்று. ஸ்ரீ திலகர் 'புதிய கட்சியின் கோட்பாடுகள்' என்று ஒரு அரிய பிரசங்கத்தைச் செய்ய, அதை அப்பெயருடனேயே தமிழில் வெளியிட்டு ஒரு அணு கிரயத்துக்கு எல்லோருக்கும் வழங்கினர். சூரத்தில் நடந்த காங்கிரஸுக்கு ஸ்ரீ. ஜி. சுப்பிரமணிய ஐயரவர்கள் சென்றபோது, இவரும் சென்றிருந்தார். சூரத்தில் காங்கிரஸ் பிளவுபட்டது. ஸ்ரீ பாரதியார் சென்னையிலிருந்து பிரயாணப் பட்டது முதல் மறுபடியும் சென்னை வந்து சேர்ந்த வரையில் நடந்த விஷயங்களைக் கோவையாகத் தொகுத்து ''எங்கள் காங்கிரஸ் யாத்திரை'' என்று வெளியிட்டார். அதன் கிரயமும் இரண்டணுதான். நூல்கள் யாவும் சொற்ப விலைக்கே உதவப்பட்டன.

★

சென்னையில் ''இந்தியா'' பத்திரிகை நடத்திய போது ''ஞானரதம்'' ஏன்ற தலைப்பின் கீழ் இயற்கை யனுபவங்களையும் தேசச் செயல்களையும் கலந்துகொண்டு அற்புதமான கற்பனைகளோடும் ஒரு அரிய ஞானப் பிரபந்தம் எழுதி வந்தார். இறுதியில் அவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து ''ஞானரதம்'' என்று வெளியிட்டார். அதற்கு இணையான நூல் தமிழ்மொழியில் இல்லை. சொற் சுவையும் பொருட் சுவையும் நிரம்பியது. பாச்சுவை பரவிய நடையாகவமைந்தது. அதன் பின் புதுச்சேரியிலிருந்து ''ஸ்வதேச கீதங்''களின் இரண்டாம் பாகமாக ''ஜன்மபூமி'' யென்ற நூலை வெளியிட்டார். ஆதியில் வந்தே மாதர கீதத்துக்கு ஸ்ரீ பாரதிதான் ''இனிய நீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை'' என்று தமிழ் மொழிபெயர்ப்பு வெளியிட்டுதவினர். இந்த மொழி பெயர்ப்பு, அத்தனை தெளிவாயில்லை என்று, ''நளிர்மணி நீரும், நயம்படு கனிகளும், குளிர்பூந் தென்றலும்'' என்று வேருெரு மொழிபெயர்ப்பும் பிரசுரம் புரிந்தார். பின் சொல்லிய ப்ாவுடன் வேறு பலவும் சேர்த்து ''மாதா மணி வாசகம்'' என்ற பெயருடன் ஒரு நூலை வெளியிட்டார். இது மூன்ருவது கீத நூலாகும்.

★

அதன் பின்னர் ''பாஞ்சாலி சபதம்'' என்ற அரிய நூலை வெளியிட்டார். அதிலுள்ள சுவையை என்னதென்று புகழ்வோம்? அதற்கு அதுவே நிகர். அதை முதற் பாகமாகத்தான் வெளியிட்டார். இரண்டாம் பாகம் பார்க்கத் தமிழ் நாட்டிற்கு பாக்கியமில்லை. ஸ்ரீ பாரதியார் பாலகர்களுக்கென ''முரசு'', ''பாப்பா பாட்டு'' என்று சிறு நூல்களை எழுதினர். அவை இரண்டும் இரண்டு தங்க விக்கிரகங்கள்தாம். அதற்கடுத்ததாக ''கண்ணன் பாட்டு'' என்ற அரிய பிரபந்தத்தைத் தமிழகத்திற்கு உதவினர். அதன் அற்புதத்தைப் பேச நமக்கு சக்தியில்லை.

★

காங்கிரஸ் மகா சபையின் ஆரம்பகால முதற் கொண்டு, ஒவ்வொரு காங்கிரஸ் சபையின் நடவடிக்கைகளையும் விளக்கி ''பாரத ஜனசபை'' என்று தொடர்ந்த நூல்களாக எழுதினர். அவை நம் ''மித்திரன்'' அச்சுக்கூடத்தில் அழகாய்ப் பதிக்கப்பட்டு வெளியாயின. வங்காள வரகவியாகிய ஸ்ரீ ரவீந்திரநாத் டாகூரின் பிரசங்கங்களைத் தமிழில் மொழிபெயர்க்க முன் வந்து தமது வித்வத் திறனையெல்லாம் உணர்த்தி, அவரது ஐந்து உபந்யாசங்களையும் வெளியிட்டார். இதுவும் நம் ''மித்திரன்'' காரியாலயத்தில் பதிப்பிக்கப்பட்டது. அவர் புதுச்சேரியில் இருந்த போது ''ஸக்திதாஸன்'' ''காளிதாஸன்'' என்ற புனைப்பெயருடன் ''மித்திர'' னில் எழுதி வந்த பல அரிய கதைகளையும் இயற்கைச் சம்பவங்

களையும் ஒரு சேரத் திரட்டி சென்ற வருஷத்தில் "கதா மாலிகா'' என்று ஒரு நூல் "மித்திரன்'' புஸ்தகசாலையினின்றும் வெளியேறிற்று. இன்னும் அவரால் "மித்திர''னுக்கு எழுதப்பட்ட எத்தனையோ விஷயங்கள் புஸ்தக உருவம் பெறுமல் உள்ளன. அவற்றையெல்லாம் ஆராய்ந்தெடுத்து வெளியிடுவது தமிழ் நாட்டிற்குப் பெரிய உபகாரமாகும்.

★

ஸ்ரீ பாரதியார் தாம் இதுவரையில் எழுதிய விஷயங்களையெல்லாம் ஒன்ருகச் சேர்த்து, "தமிழ் வளர்ப்புப் பண்ணை'' என்ற பெயரின் கீழ் நூலுருவமாக வெளியிடக் கருதி, அதற்காக பகீரதப் பிரயத்தனங்கள் செய்துகொண்டிருந்தார். இன்னும் எத்தனையோ ஆசைகளையெல்லாம் வைத்துக்கொண்டு தமிழ்நாட்டை அலங்கரிக்க எண்ணியிருந்தார். அதற்கு நாம் கொடுத்து வைக்கவில்லை.

★

காதல் முறையில் நவீனமாகக் கவிதை இயற்ற வேண்டுமென்றும், பச்சைப் பச்சையாக எழுதும் வழக்கம் தவிர்க்கப்படவேண்டும் என்றும் தெரிவித்து, அதற்கு உதாரணமாக "வள்ளிப் பாட்டு'' என்ற சிங்கார ரஸக் கீர்த்தனை சென்ற 1920-ம் வருஷ "மித்திரன்'' அநுபந்தத்தில் வெளியிட்டார். இன்னும் அநேக பாடல்கள் இயற்றி வைத்திருப்பதாக முகவுரையில் கூறியிருக்கிருர். இனி இயற்றலாம் எனக் கருதினுரோ, இயற்றித்தான் வைத்துள்ளாரோ அறியோம்.

★

ஸ்ரீ பாரதியார் புதுச்சேரியினின்றும் வந்த பின்பு பழைய பாரதியின் உருவமே இல்லை. ஒரு வங்காளி போன்ற உருவுடனும் காணப்பட்டார். அதற்கானபடி தலைப்பாகையும் பிளவும் பொருந்தியிருந்தது. அவரது நடையும் கோலமும் யாவுமே மாறின. எல்லாம் புதுவிதமாக இருந்தது. ஒரு பிரம்மக் ஞானி போன்றும் காணப்பட்டார். அவரைப் பார்த்தாலே உற்சாகம் தோன்றிவிடும். எவ்வித கர்வமும் இல்லை. அவர் படிப்பை அவர் அறியார். சிறு குழந்தை போன்றும் இருப்பார். தமக்கென்று ஒரு பெருமையை அவர் வைத்துக்கொள்ளவில்லை. எந்த இடத்தில் அவரை உட்காரவைத்துப் பாடச் சொன்னுலும் உடனே ஆனந்தத்துடன் பாட ஆரம்பித்துவிடுவார். அவர் பாடுங்கால் கூட இருந்து கேட்ட பாக்கியம் நமக்கு உண்டு. அவர் பாடுகையில் அந்தப் பாட்டின் அத்தனை ரசங்களும் அவரது வதனத்தில் தத்ரூபமாய்த் தோன்றும், ஜ்வலிக்கும். எவரையும் லக்ஷியம் பண்ணுகிற சிந்தை அவருக்கில்லை. எல்லோருக்கும் வணங்கிய உடம்பாகத் தாழ்ந்து பணிந்து நடந்து கொள்வார். ஏதேனும் நெஞ்சில் எண்ணம் குடி கொண்டுவிட்டால் ராஜபுத்திர வீரனுய்விடுவார். விரிக்கிற் பெருகும்.

★

ஸ்ரீ பாரதியார் வெளியிட்ட கீதங்களை காலத்திற்கேற்றபடி ஒழுங்குபடுத்தி அவரது நண்பர் ஸ்ரீமான் பரலி சு. நெல்லையப்ப பிள்ளை "நாட்டுப் பாட்டு'' என்று வெளியிட்டார். அது இப்பொழுது விலைக்குக் கிடைக்கும். அவரது நூல்களில் பலவற்றை "மித்திரன்'' புஸ்தகசாலையில் பெறலாம்.

★

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி போய்விட்டார். இனி அவர் பெயரால் புதிய கவிதைகள் வெளிவரப் போவதில்லை. 1921-ம் வருஷத்து "மித்திரன்'' அநுபந்தத்திற்கு விஷயங்கள் எழுத அவர் இப்போது இல்லை. ஔவை வாக்கைப் போன்ற சிறு சிறு முடிவுகளில் அழகாக இயற்றும் பாக்களும் வசனுமிர்தங்களும் இனிக் காணப்போவதில்லை. அவரது வாக்கே ஒரு தனி வாக்கு. அந்த வாக்குக்கே ஒரு தனிச் சுவை.

அவர் வாழ்த்திச் சென்ற தமிழ்நாடு அவருக்குப் பின் அவர் குடும்ப சம்ரக்ஷணைக்கான திரவிய சகாயம் செய்வித்துக் கொடுத்துத் தன் கடமையைச் செலுத்துமென்று எதிர்பார்க்கிருேம். "தோன்றிற் புகழொடு தோன்றுக.''

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு,
ஸ்ரீரங்கம்.

---

அனுபந்தம் - 2:

# பாரதிக்குப் பின் பாரதி எழுத்துகள்

பாரதி எழுதிய எல்லா நூல்களுமே அவர் இருந்த காலத்தில் பிரசுரமாகவில்லை. ஆனால் அவர் இறந்து 36 வருஷங்களுக்குப் பின் இன்றுகூட பாரதி எழுதிய பல பாடல்களும் கதைகளும் கட்டுரைகளும் குறிப்புகளும் புத்தக உருவம் பெறாமலே இருப்பது தான் விந்தை. பாரதியின் கவிதைகளுக்கு அத்தாட்சிபெற்ற "முத்திரைப்" பதிப்பாக சென்னை அரசாங்கத்தின் பாரதி பதிப்புக் குழு வெளியிட்டுள்ள பெருநூலில்கூட பல பாரதி பாடல்கள் சேர்க்கப்படாமல் விடுபட்டுப் போயிருக்கின்றன.

என்றுதான் முடிவான, எல்லா பாரதி எழுத்துகளும் கொண்ட பாரதி நூல் தொகுதிகள் வருமோ, நாம் சொல்ல இயலவில்லை. ஆனால், ஒன்று நிச்சயம். காலம் மேன்மேலும் அதிகமாகி, பழம் பத்திரிகைகளும் சுவடிகளும் நசித்துப் போகுமுன் பாரதி எழுத்துகள் என்னென்ன இருக்கின்றன என்று பாரதியன்பர்கள் தேடுவது அத்தியாவசியமாகும். இக்காரியத்தை அரசாங்கமோ குறிப்பட்ட குழுக்களோதான் செய்யவேண்டும், செய்ய இயலும் என்பதில்லை. ஆங்காங்குள்ள தனிப்பட்ட பாரதி அன்பர்கள்கூட முயன்று பாரதி எழுத்துகளைக் காக்கமுடியும். ஏனெனில் ஏற்கனவே அச்சேறியுள்ள பாரதி எழுத்துகளில் பெரும்பாலானவை தனிப்பட்டவர் முயற்சியினால் தேடிக் காக்கப் பட்டவையே.

## பாரதி காலத்தில் வெளிவந்த நூல்கள்

பாரதி வாழ்ந்த காலத்தில் அவரது நூல்களில் புத்தகமாக அல்லது சிறு பிரசுரமாக வெளிவந்தவை வருமாறு:

தேசிய கீதங்கள் (பெரும் பகுதி), தோத்திரப் பாடல்கள் (பெரும் பகுதி), வேதாந்தப் பாடல்கள் (ஒரு பகுதி), 'கனவு' என்ற ஸ்வசரிதை, 'முரசு', 'பாப்பா பாட்டு', 'புதிய ஆத்திசூடி', 'பாஞ்சாலி சபதம்' (முதல் பாகம் மட்டும்), 'கண்ணன் பாட்டு', 'ஞான ரதம்' முதலிய நூல்களும், தற்போது கிடைக்காதவைகளான 'பாரத ஜன சபை' (காங்கிரஸ் சரிதம்), 'எங்கள் காங்கிரஸ் யாத்திரை', 'புதிய கட்சியின் கொள்கைகள்' (திலகர்கட்சியின் கொள்கைகள் பற்றி), 'திலகர் பிரசங்கங்கள்', 'விவேகானந்தர் பிரசங்கங்கள்', 'ஜீவ வாக்கு' (ஜகதீச சந்திர வஸுவின் ஆராய்ச்சி பற்றிய கட்டுரை), 'பொன்வால் நரி' (ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிய கேலிக்கதை) முதலிய நூல்களுமேயாகும்.

'ஞானரதம்' பாரதியின் 'இந்தியா'வில் தொடர்கதையாக வந்து, பிறகு தனி நூலாக வெளியிடப் பெற்றது.

பாரதி காலமாகுமுன் 'சுதேச மித்திரன்' காரியாலயம் வெளியிட்ட நூலான 'கதாமாலிகா'வில் பெரும் பகுதி பாரதியின் கதை, கட்டுரைகளே. இவைகளில் பெரும் பகுதி இன்றளவும் பாரதி நூல் தொகுதிகளில் இடம் பெறவில்லை.

பாரதி தாம் இருந்த காலத்திலேயே தமது நூல்களை நாற்பது தனிப் புத்தகங்களாக வெளியிட்டு, பல்லாயிரக் கணக்கான பிரதிகள் அச்சடித்து, கவிதைகளை பிரதி நாலணு விலையிலும் வசனங்களை பிரதி எட்டணு விலையிலும் விற்கவேண்டுமென்று கனவு கண்டார். "மண்ணெண்ணெய் தீப்பெட்டியிலும் ஸாதாரணமாக" தம் நூல்கள் பரவ வேண்டும் என்று அவர் கொண்ட அவா, அந்த 1920—21-ம் ஆண்டில் மட்டுமல்ல, இன்றுகூடப் பூர்த்தியாகவில்லை.

## 'பாரதி ஆசிரமம்'

பாரதி நூல்களையெல்லாம் பிரசுரிக்க வேண்டும், அதற்கு மக்கள் நிறைய ஆதரவு தரவேண்டும் என்ற முறையீடு பாரதி காலமானவுடனேயே எழுந்தது. இந்நூல்களின் விற்பனை மூலம் பாரதி குடும்பத்துக்கு உதவ வேண்டும் என்பதே முதலில் தோன்றிய எண்ணம். பாரதி காலமானவுடன் எஸ். ஸத்தியமூர்த்தி விடுத்ததோர் அறிக்கையில் அவர் இதை வற்புறுத்தியுள்ளார். சென்னையில் கூடிய பாரதி நண்பர்கள் சிலர் பாரதி நூல் பிரசுரத்துக்கென சோமதேவ சர்மா உள்ளிட்டதொரு கமிட்டியையும் நிறுவினர்கள். இது 1921, ஸெப்டம்பரில்.

இதன்பின், அதே ஆண்டில், நண்பர்கள் உதவிய தொகை கொண்டும், தமிழ் மக்கள் 12 ரூபாய் வீதம் அனுப்பிய முன்பணம் கொண்டும், திலகர் ஸ்வராஜ்ய நிதியிலிருந்து கிடைத்த ஆயிரம் ரூபாய் கொண்டும், ரங்கூன் தமிழன்பர்கள் அனுப்பிய நிதிகொண்டும் பாரதியின் மனைவி செல்லம்மாளும் மைத்துனர் க. ரா. அப்பாதுரையும் திருவல்லிக்கேணி பெரிய தெருவில் 'பாரதி ஆசிரமம்' என்ற ஸ்தாபனத்தை அமைத்து, 12 பாரதி நூல்களை வெளியிடுவதென முடிவு செய்தார்கள்.

1922-ம் ஆண்டுக்குள் 'தேசிய கீதங்கள்' இரு பாகங்களும், 'குயில்', 'கண்ணன் பாட்டு',

'பாரதி அறுபத்தாறு' மூன்று மடங்கிய ஒரு நூலும் வெளியாயின. அதன்பின் வர விருந்த நூல்கள் வெளிவரவில்லை. நூல்களின் விற்பனையும் சுமாராகவே இருந்தது.

பாரதி இருந்த காலத்தில் அவருக்குப் பொருளுதவி செய்தவரும், கவிஞரை கானுடு காத்தானுக்கு அழைத்துச் சென்று போஷித்து, அங்கேயே குடும்ப சகிதம் நிரந்தரமாய் வசிக்கும்படி வேண்டிக் கொண்டவருமான வை. சு. சண்முகம், 1923-ல், பாரதி குடும்பத்தின் சிரமத்தைப் போக்கும் கருத்துடன், பாரதி நூல்களின் உரிமைகளுக்கு 10,000 ரூபாய் கொடுக்கவும் அவைகளை ஒழுங்காய்ப் பிரசுரிக்கவும் முன் வந்தார். இதற்குச் செல்லம்மா சம்மதித்தாரெனினும், அவரது தமையனர் ஆர்வம் காட்டாததால் ஏற்பாடு முற்றுப் பெருமலே போயிற்று.

1923-ம் ஆண்டு முடிவுக்குள் 'பாரதி ஆசிரமம்' நூல் பதிப்புவேலை நின்றுபோய், பிரசுரமாயிருந்த நூல்களின் விற்பனையும் ஒடுங்கிப் போயிற்று.

### 'பாரதி பிரசுராலயம்'

மறு வருஷம், 1924-ல், விற்பனையாகாமல் முடங்கிக் கிடந்த நூல்களின் பிரதிகளை பாரதி குடும்பத்தினர் தங்களுக்கு நெருங்கிய நண்பரும் தூர பந்துவும் பாரதியின் 'இந்தியா' பத்திரிகையில் உழைத்தவருமான ஹிந்தி பிரசாரகர் வி. ஹரிஹர சர்மாவிடம் ஒப்படைத்தார்கள். நூல்களை விரைவில் விற்று பாரதி குடும்பத்தின் சம்ரட்சணைக்கு மாதம் ஒரு குறிப்பிட்ட தொகை தருவதாக ஏற்பாடாயிற்று.

இச் சமயம், பாரதி நூல்களின் உரிமைகளை விற்பதுபற்றி மறுபடி பேச்சு வந்தது. ஆனல், இவ்வமயம் யாரும் 3,500 ரூபாய்க்கு மேல் தர முன் வரவில்லை. அதையும் தவணைகளாய்க் கொடுக்கவே முன் வந்தனர்.

இதே 1924-ம் வருஷம் பாரதியின் இளைய புதல்வி சகுந்தலாவின் திருமணத்துக்காக ஹரிஹர சர்மாவும், பாரதியின் தம்பி சி. விசுவநாதனும் பாரதி நூல்களை வைத்து 2,000 ரூபாய் கடன் வாங்கிக் கொடுத்தார்கள்; பூ. சுப்புராஜா என்ற அன்பர் 2,000 ரூபாய் நன்கொடையளித்தார்.

இதன்பின் அதே ஆண்டில், ஹரிஹர சர்மா, சி. விசுவநாதன், சகுந்தலாவின் கணவர் நடராஜன் மூவரும் சேர்ந்து 'பாரதி பிரசுராலயம்' என்ற ஸ்தாபனத்தை அமைத்தனர். பாரதி நூல்களின் உரிமை பாரதி குடும்பத்தாரிடமே இருக்க, பாரதி நூல்களைக் கிரமப்படுத்தி வெளியிடும் பணியை பாரதி பிரசுராலயம் மேற்கொண்டது. பாரதி நூல்கள் ஒன்றன்பின் ஒன்ருய் வெளிவரத் தொடங்கின. சிதிலமான கையெழுத்துப் பிரதிகளிலிருந்தும் பத்திரிகை விள்ளல்களிலிருந்தும் பாரதி எழுத்துக்களைத்தேடிப் பிடித்து, ஒழுங்குபடுத்தி வெளியிட்டு பாரதி தினக் கொண்டாட்டங்களிலும் பாட்டுப் போட்டிகள் மூலமாகவும், கதர்க் கடைகளில் விற்பனை மூலமாகவும், இதர வகைகளிலும் பாரதி நூல்களைப் பரப்பிய பெருமை பாரதி பிரசுராலயத்தையும், முக்கியமாக வி. ஹரிஹர சர்மாவையும் சார்ந்ததாகும். அலட்சியமாயிருந்த தமிழ் மக்கள் பாரதியின் மேதையை உணரச் செய்யும் கடினமான ஆரம்ப வேலையை பாரதி பிரசுராலயம் செய்தது.

பாரதியின் பாடல்கள் சிலவற்றை ஆங்கிலப்படுத்தி, மகாத்மா காந்தியின் 'யங் இந்தியா'வில் வெளியிடச் செய்து கவிஞரை பாரத தேசத்துக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் சி. ராஜகோபாலாச்சாரியார். இதன் பின், பாரதியின் கீதை மொழிபெயர்ப்பு வெளியானபோது அதற்கு காந்தியடிகள் ஒரு முகவுரை வழங்கினர்.

### பாரதி பாடல்களுக்குத் தடை!

பாரதி பாடல்களைப் பரப்புவதில் சமீப காலத்திய சென்னை அரசாங்கங்கள்தாம் தொண்டு புரிந்துள்ளன என்று நினைப்பது தவறு. சுதந்திரத்துக்கு முன்பிருந்த சென்னை அரசாங்கம் ஒன்றுகூட இவ்வழியில் பெருந் தொண்டு புரிந்தது!

1928-ம் ஆண்டு, ஆகஸ்ட் 7-ந் தேதி பர்மா கவர்னர், திருவல்லிக்கேணி பாரதி ஆசிரமம் வெளியிட்டுள்ள பாரதி 'தேசிய கீதங்கள்' இரண்டு பாகங்களும் பர்மா மாகாண எல்லையில் நுழையக்கூடாதெனத் தடையுத்தரவு பிறப்பித்தார். ராஜத்துவேஷமான நூலெனக் கருதி இந்நூலின் பிரதிகளையெல்லாம் பறிமுதலும் செய்ய உத்தர விட்டார் அவர்.

இந்தச் சமயம் பர்மா இந்தியாவில் ஒரு மாகாணமாக இருந்தது. பர்மா அரசாங்க உத்தரவு 1928, ஸெப்டம்பர் 11-ஆந் தேதி (பாரதி தினம்!) சென்னை அரசாங்க கெஜட்டில் வெளியிடப் பெற்றது. அதைத் தொடர்ந்து, சென்னைப் போலீஸ் துப்பறியும் இலாகாவினர் பிரதம மாகாண மாஜிஸ்ட்ரேட்டிடம் விண்ணப்பித்து, திருவல்லிக்கேணி தலையாரி தெருவிலிருந்த 'பாரதி ஆசிரம'த்தையும், பாரதி நூல்கள் அச்சடிக்கப் பெற்ற ஹிந்தி பிரசார் பிரஸ்ஸையும், பாரதி நூல்களை விற்று வந்த ஓ. என். தண்டபாணி கம்பெனி யென்ற புத்தகக் கடையையும் சோதனை போட்டு தேசிய கீத நூல் பிரதிகளைப் பறிமுதல் செய்ய உத்தரவு பெற்ருர்

கள். இந்த சோதனையில் பாரதி தேசிய கீத நூல்களின் 2,000 பிரதிகளைப் போலீஸார் பறிமுதல் செய்து எடுத்துச் சென்றார்கள். கி. டி. கோ. 99 ஸெக்ஷன் ஏ பிரிவின்படி கோர்ட் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தது. இந்த உத்தரவு நியாயமானதல்ல என்று பாரதி ஆசிரமத்தார் உடனே ஹைக்கோர்ட்டில் விண்ணப்பித்தார்கள்.

### ஒத்திவைப்புப் பிரேரணை

இதன் பின், எஸ். சத்தியமூர்த்தி சென்னை சட்டசபையில் இவ்விஷயத்தை அக்டோபர் 8-ந் தேதி கிளப்பினார். போலீஸின் நடவடிக்கையைக் கண்டிப்பதாக அவர் கொண்டு வந்த ஒத்திவைப்புப் பிரேரணையை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளலாமா கூடாதா என்ற சட்ட நுணுக்கப் பிரச்னை எழுந்தது. பாரதி பாடல்கள் ராஜத்துவேஷமானவையா அல்லவா என்ற பிரச்னை ஹைக்கோர்ட் முன் இருப்பதால் அந்தப் பிரச்னையைப் பற்றிப் பேசலாகாதென்றும், பர்மா அரசாங்கம் ஏதோ உத்தரவு பிறப்பித்ததென்பதற்காக சென்னைப் போலீஸ் நடவடிக்கை யெடுத்தது சரியா தவறா என்ற விஷயத்தைப்பற்றி மட்டும் பேசுவதானால் ஒத்திவைப்புப் பிரேரணையை விவாதத்துக்கு அனுமதிப்பதாகவும் சட்டசபை சபாநாயகர் ராவ் பகதூர் ஸி. வி. எஸ். நரசிம்மராஜு கூறினார். ஸத்தியமூர்த்தி இதற்கிணங்கவே, மறுநாள் —1928, அக்டோபர், 9-ந் தேதி—பிற்பகல் 2-30 மணிக்கு ஒத்திவைப்புப் பிரேரணை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

நூல்களின் அரசியல் தன்மையைப்பற்றிப் பேசக்கூடாதென்று சபாநாயகர் தீர்ப்பளித்துவிட்டதால், சத்தியமூர்த்தியும் அவரை ஆதரித்துப் பேசியவர்களெல்லாரும் பாரதிபாடல்களின் மேன்மையையும், அவற்றை அரசாங்கம் பறிமுதல் செய்தது முட்டாள்தனம் என்றும் பேசினார்கள். சில மாதங்களுக்கு முன்தான் பாரதி பாடல்களை அரசாங்கப் பள்ளிக்கூடங்கள் உட்பட எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் போதிப்பதில் சர்க்காருக்கு ஆட்சேபணையில்லை என்று கல்வி மந்திரி டாக்டர் சுப்பராயன் சட்டசபையில் பதிலளித்திருக்க, அதே மந்திரிசபையின் போலீஸ் இப்போது இவ்வாறு செய்திருப்பது அர்த்தமற்றது என்று ஸத்தியமூர்த்தி வாதித்தார். பாரதி பாடல் நூல் ஒன்று தம் கையில் இருக்கிறது என்று காட்டி, அதிலிருந்து 'வந்தே மாதரமென்போம்', 'செந்தமிழ் நாடெனும் போதினிலே', 'வீர சுதந்திரம் வேண்டி நின்றார்', 'யாமறிந்த மொழிகளிலே' முதலிய பாக்களைப் படித்துக் காட்டி, "இவற்றில் என்ன தவறு இருக்கிறது? தேசபக்தி பரிமளிக்கச் செய்வதுகூடக் குற்றமா? டென்னிஸன், ப்ளேக், கீட்ஸ் பாடல்களில் இருப்பதுபோல் தானே பாரதி பாடலிலும் இந்த தேசபக்தி உணர்ச்சி இருக்கிறது? அவர்களாவது தங்கள் தேசம் மட்டும் வாழ வேண்டுமென்றார்கள்; பாரதியோ உலகமே செழிக்க வேண்டுமென்கிறார். இத்தகைய பாடல்களைப் போலீஸார் பறிமுதல் செய்தது தமிழ் இலக்கியத்துக்கு சவால், தமிழைத் தாய் மொழியாய்க் கொண்டோர்க்கெல்லாம் சவால், சிந்தனா சுதந்திரத்தையும் தேச பக்தியையும் போற்றுவோருக்கெல்லாம் சவால். அரசாங்கம் தன் பறிமுதல் கோரிக்கையை உடனே ரத்து செய்துவிட வேண்டும்'' என்றார் ஸத்தியமூர்த்தி.

### சட்டசபையில் பாரதி பாட்டு

பாரிஸ்டர் ஆதிநாராயண செட்டி, ஜி. ஹரி ஸர்வோத்தம ராவ், டி. ஸி. ஸ்ரீநிவாஸய்யங்கார், டி. கே. சிதம்பரநாத முதலியார், எல். கே. துளசிராம், ராமநாத் கோயங்கா முதலிய பல தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களும், என். சிவராஜ், ஷாம்நுடு சாயபு, டேனியல் தாமஸ் முதலிய நியமன அங்கத்தினர்களும், ஜே. ஏ. டேவிஸ் என்ற வெள்ளையருங்கூட ஆதரிக்க, தீர்மானம் நிறைவேறியது. "புத்தகங்களைப் பறிமுதல் செய்து விட்டீர்கள். மக்கள் மனதில் மனப்பாடமாகிவிட்டதை என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று குத்தலாகக் கேட்டு விட்டு, எல். கே. துளசிராம், 'செந்தமிழ் நாடு', 'விடுதலை' ஆகிய இரண்டு பாடல்களையும் சங்கீதச் சுவையுடன் ரசித்துப் பாடினார். "பிரிட்டிஷ் சாம்ராஜ்யமா, ஷேக்ஸ்பியர் இலக்கியங்களா இரண்டில் ஒன்றுதான் கிடைக்குமென்றால், எது வேண்டும் என்று கேட்கப்பட்டால், ஷேக்ஸ்பியரே வேண்டுமென்பேன் என்றான் கார்லைல். அதேபோல பாரதி இலக்கியமும் மக்கள் மனதைக் கவர்ந்ததாகும்'' என்று டி. ஸி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் சொன்னார்.

சட்ட மெம்பர் எம். கிருஷ்ணன் நாயர், போலீஸ் நடவடிக்கை மாமூல் நடவடிக்கையென்றும், ஹைக்கோர்ட் என்ன செய்கிறது என்று அரசாங்கம் காத்திருக்கும் என்றும் விவாதத்துக்கு பதிலளித்தார். ஒத்திவைப்புத் தீர்மானத்தை எதிர்த்துப் பேசியவர் அவர் ஒருவரே!

தீர்மானம் வோட்டுக்கு விடப்பட்டபோது, 79 அங்கத்தினர்கள் அதை ஆதரித்தனர்; ஸர் மகமது உஸ்மான், எம். கிருஷ்ணன் நாயர் ஆகிய மந்திரிகளும், சி.வி. அனந்தகிருஷ்ணய்யர், ராவ் பகதூர் ஆர். ஸ்ரீநிவாஸன் என்ற இரு அங்கத்தினர்களும், எட்டு வெள்ளையரும், மொத்தம் 12 பேர் தீர்மானத்தை எதிர்த்தனர். கல்வி மந்திரி டாக்டர்

சுப்பராயனும், சுகாதார மந்திரி எஸ். முத்தையா முதலியாரும், மற்றும் பதின்மூன்று பேரும், மொத்தம் 15 பேர் வோட்டளிப்பில் கலக்காமல் நடுநிலைமை வகித்தனர். மந்திரிகளே சர்க்கார் நடவடிக்கையை ஆதரிக்காமல் நடுநிலைமை வகித்தது அக்காலத்தில் மிக அபூர்வமானதொரு விஷயமாகும்.

சென்னை சட்டசபை விவாதத்துக்குப் பின், ஹைகோர்ட்டில் அப்பீல் விசாரணை நடந்தது. முடிவில், பாரதி தேசியப் பாடல்களில் ராஜத் துவேஷமாக ஏதும் இல்லை என்று கோர்ட் உத்தரவிட்டது. இதனால், சென்னை அரசாங்கம் தான் பறிமுதல் செய்த பாரதி தேசியப் பாடல் பிரதிகளை பாரதி ஆசிரமத்துக்குத் திருப்பிக் கொடுத்தது. இது, *1929*-ம் ஆண்டு பெப்ருவரி மாதம் நடந்தது. அரசாங்கம் இந்நூல்களைத் திருப்பித் தருமாறு நேர்ந்தது பாரதி நூல்கள் விற்பனைக்கு நல்ல விளம்பரமாயிற்று. "இந்நூல் சர்க்காரால் பறிமுதல் செய்யப்பட்டுத் திருப்பித் தரப்பட்டது" என்று பாரதி தேசிய கீதங்கள் பிரதிகள் ஒவ்வொன்றிலும் ரப்பர் ஸ்டாம்பு முத்திரை யடித்து, மேலும் உற்சாகத்துடன் விற்றது பாரதி பிரசுராலயம்.

## மக்கள் நாவில்

அரசாங்கத் தடையினால் மக்களுக்கு பாரதி பாடல்களில் பற்றுதல் அதிகரிப்பதற்கு முன்பே, பல தனிப்பட்ட பாரதியன்பர்கள் தங்கள் தேசபக்திப் பிரசாரத்திற்கு பாரதி பாடல்களை ஊன்று கோலாய்க் கொண்டு நாடெங்கும் பாரதி பாடல்களைப் பாடிப் பரப்பி வந்தார்கள். தேசபக்த சிங்கம் சுப்பிரமணிய சிவா திருநெல்வேலி சுதேசிக் கலகத்தின்போது சிறை புகுந்து வெளியே வந்ததும் தேசபக்த சமாஜம் என்ற தொண்டர் படையை ஆரம்பித்தார். இப்படையைச் சேர்ந்த இளைஞர்கள் தமிழ் நாடெங்கும் ஏழு மாதம் ஊர் ஊராய்ச் சென்று தமது தேசாவேசப் பேச்சுக்களுடன் பாரதி பாடல்களையும் பாடி வந்தனர். 'கல்கி' தி. சதாசிவம், மதுரை ரா. சிதம்பர பாரதி, ரா. ஸ்ரீநிவாஸ வரதன், தியாகராஜ சிவம், தூத்துக்குடி ந. சோமயாஜுலு, சென்னை எவரெஸ்ட் ஹோட்டல் ஸ்தாபகர் சுந்தரம், திருமயம்கிருஷ்ணமூர்த்தி, மதுரை கிருஷ்ண குந்து முதலியோர் சிவாவின் சிஷ்யர்களாவர்.

சிவாவைப் பின்பற்றி அவரது சிஷ்யர் ஸ்ரீநிவாஸவரதனும் தமது வீர பத்தினி பத்மாஸனி அம்மாளுடன் பாரதி பாடல்களைத் தமிழ்நாடெங்கும் பரப்பும் பணியில் ஈடுபட்டார். "நம் நாட்டு முன்னேற்றத்தைக் கருதி, காலம் சென்ற கவிச் சக்ரவர்த்தி சுப்பிரமணிய பாரதியார் கீதங்களைப் பரப்புவதற்காக"வென்று 'பாரதி பஜனை சமாஜம்' மதுரையில் *1933*-ல் ஸ்ரீநிவாஸவரதனால் ஆரம்பிக்கப்பட்டது. தினந்தோறும் காலையிலும் மாலையிலும் பாரதி கீதங்களைப் பாடிக் கொண்டு வீதி பஜனை வருவது சமாஜத்தின் முக்கிய வேலையாக நடந்தது. ஸ்ரீநிவாஸவரதனது பாட்டில் சங்கீதத்தைவிட உணர்ச்சியே முக்கியமானதாக விளங்கியதாலும், 'ஜய பேரிகை கொட்டடா' என்ற பாட்டை இவர் விரும்பிப் பாடி வந்ததாலும் இவரது ஊராகிய சோழவந்தான் மக்கள் இவரை 'கொட்டடா அய்யங்கார்' என்று அழைத்து வந்தார்களாம்!

*1922*-ஆம் ஆண்டிலேயே பாரதி பாடல்கள் நாடகமேடை யேறத் தொடங்கிவிட்டன. பெண் வேஷத்துக்குப் பெயர் போன கே. எஸ். அனந்தநாராயணனும், சங்கித மேதை எஸ். ஜீ. கிட்டப்பாவும் நாடக மேடையில் பாரதி பாடல்களைப் பாடித் தமிழ் மக்களைப் பரவசப் படுத்தினார்கள். தமது நண்பர் ஆக்கூர் அனந்தாச்சாரி கொடுத்த 'தேசீய கீதங்கள்' நூலிலிருந்து 'முன்னையிலங்கை' பாட்டை மனனம் செய்து தம் நாடகங்களில் அதை உற்சாகமாகப் பாடி வந்தார் கிட்டப்பா.

*1932*-ஆம் ஆண்டு உப்பு சத்தியாக்கிரக காலத்தில் பாரதி பாடல்களைப் பாடக்கூடாதென்ற தடையை மீறி நாடக மேடையில் பாரதி பாடல்களைப் பாடி வந்தார் கிட்டப்பா.

## மந்திரக் கவிகள்

உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தின்போது பாரதியின் மந்திரக் கவிகள் தமிழ் நாட்டில் சாதித்த அற்புதம் சொல்லி மாளாது. சோர்ந்து கிடந்த மக்களைத் தட்டியெழுப்பி, அவர்கள் நரம்பில் முறுக்கேறச் செய்து, தேசத்துக்காக எண்ணற்ற பேர்கள் தங்களைத் தியாகம் செய்துகொள்ளத் தூண்டியதற்கு பாரதி பாடல்கள் பொறுப்பாக இருந்தன. இந்தக் காலத்தில், 'சங்கு' சுப்பிரமணியம், ஈ. கிருஷ்ணய்யர், கே. எஸ். கோபாலகிருஷ்ணன், 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி முதலியோர் பாரதி பாடல்களை இசையழகும் உணர்ச்சி வேகமும் சேர்த்துப் பாடிப் புகழெய்தினார்கள். பாரதியின் மருமான் சங்கரன் என்பவரும், தம்பி சி. விசுவநாதனும் பாரதி பாடல்களை இசையழகுடன் பாரதியைப் போலவே பாடுவார்கள். சங்கீதமறியாத மற்றும் எண்ணற்ற தொண்டர்கள், உணர்ச்சியே பிரதானமாய் பாரதி பாடல்களைப் பாடி மக்களைத் தேசப் பணிக்குத் தயாராக்கினார்கள். கவிதைமூலம் புதிய மானுட ஜாதியை உண்டாக்க முடியும் என்பதைத் தமிழகம் கண்ணெதிரே கண்டது.

## பத்திரிகைகளின் தொண்டு

மக்கள் நாவில் பரவியது போலவே, தமிழ்ப் பத்திரிகை உலகின் மூலமாகவும் பாரதி எழுத்துகள் பரவத் தொடங்கின. பிரசுரமாகாத பாரதி எழுத்துகளை தேடிக்கண்டு பிடித்து வெளியிடும் பணியிலும் தமிழ்ப் பத்திரிகைகள் பெருந்தொண்டு புரிந்துள்ளன.

பாரதியின் நண்பரும் அவர் காலத்தில் 'கண்ணன் பாட்'டையும், 'நாட்டுப் பாட்டு' என்ற பெயரில் பாரதியின் தேசிய கீதங்களையும் பிரசுரித்தவருமான பரலி. சு. நெல்லையப்பர், பாரதி காலமான பின் தமது 'லோகோபகாரி' வாரப் பத்திரிகையில் அநேகமாய் வாரந்தோறும் ஏதாவதொரு பாரதி கட்டுரை அல்லது கவிதையை வெளியிட்டு வந்தார். 'இனி' 'ஜாதிபேத விநோதங்கள்', 'தமிழருக்கு' முதலிய கட்டுரைகளை ஒரு முறையல்ல இருமுறையல்ல, பன்முறை வெளியிட்டது 'லோகோபகாரி.'

அ. மாதவய்யா தமது 'பஞ்சாமிர்தம்' மாதப் பத்திரிகையில் பாரதி பாடல்களின் இலக்கிய மேன்மையை இலக்கிய விமர்சனம் மூலம் வெளியிட்டார்; மாதவய்யாவின் புதல்வர் மா. அனந்த நாராயணன் இவ் விமரிசனத்தை எழுதினர்.

பழம் பெரும் பத்திரிகையாளர் எஸ். ஜீ. ராமாநுஜுலு நாயுடுவின் 'பிரஜாநுகூலன்', பிற்காலத்தில் அவரை ஆசிரியராகக்கொண்ட 'அமிர்த குண போதினி', தஞ்சையில் வ. ரா. நடத்திய 'சுதந்திரம்', ச. து. சுப்பிரமணிய யோகி, பெரியசாமித் தூரன் முதலியோர் நடத்திய 'பித்தன்', வ. ரா. வை ஆசிரியராகக் கொண்ட 'மணிக் கொடி' வாரப் பதிப்பு, பாரதிதாசனை ஆசிரியராகக் கொண்டு புதுவையிலிருந்து வந்த 'பாரதி கவிதா மண்டலம்' என்ற முற்றிலும் கவிதையாலான அதிசய மாதப் பத்திரிகை, சங்கு சுப்பிரமணியனை ஆசிரியராகக் கொண்ட 'சுதந்திரச் சங்கு', தெ. ச. சொக்கலிங்கத்தின் 'காந்தி', ரா. நாராயணசாமியின் 'பாரதி', ரா. நாராயணனை ஆசிரியராகக் கொண்ட 'ஜெய பாரதி', சங்கு சுப்பிரமணியம், 'ரூலி' என்ற எம். ஜே. ராமலிங்கம் ஆகியோரை ஆசிரியராகக் கொண்ட 'ஹநுமான்', கி. வா. ஜகந்நாதனை ஆசிரியராகக் கொண்ட 'கலைமகள்', ஈ. ஆர். கோவிந்தனையும் ரா. நாராயணனையும் ஆசிரியர்களாகக் கொண்ட 'ஹிந்துஸ்தா'னில் இந்நூலாசிரியர் பதிப்பித்த 'பாரதி மலர்'கள், ஏ. என். சிவராமனை ஆசிரியராகக் கொண்ட 'தினமணி'யின் ஆண்டு மலர்கள், கே. அருணுசலத்தை ஆசிரியராய்க் கொண்ட 'பாரததேவி' முதலிய பழங்கால, தற்காலத் தமிழ்ப் பத்திரிகைகள் ஏற்கனவே நூல் வடிவம் பெருத பற்பல பாரதி கவிதைகளையும் கதைகளையும் கட்டுரைகளையும் வெளியிட்டன.

'சுதேசமித்திர'னில் 1930-ம் ஆண்டிலேயே, பாரதி தனிப் பாடல்கள் பலவும் 'பாஞ்சாலி சபத'மும் கே. ஆர். சர்மா என்ற பிரபல ஓவியரின் சித்திரங்களுடன் வெளியிடப் பெற்றன. இதே போல, சி. வி. மார்கன், சேகர் முதலியோரது அழகான சித்திரங்களுடன் பல பாரதி பாடல்களை 'ஆனந்த விகடன்' 1933 முதலாக வெளியிட வாரம்பித்தது.

## சிறு பிரசுரங்கள்

தமிழ்ப் பத்திரிகைகள் தவிர தனிப்பட்ட பாரதி தொண்டர்களும் தத்தமக்குக் கிடைத்த பாரதி பாடல்களைச் சிறு பிரசுரங்களாக வெளியிட்டு உதவினுர்கள்- புதுவையில் பணிப் பெண் அம்மாக் கண்ணுவின் புதல்வர்களில் ஒருவரும் பாரதியின் சிஷ்யகோடிகளில் ஒருவரும் 'தாய்நாடு' என்ற பத்திரிகையின் ஆசிரியருமான வ. வேணுகோபால் நாயக்கர் 'உயிர் பெற்ற தமிழன்' என்ற இதுவரை பாரதி தொகுப்புகளில் சேராத பாட்டை 1936-ல் சிறு பிரசுரமாக வெளியிட்டார். புதுவை தேசிய வாலிபர் சங்கம், மதுரை பாரதி ஆசிரமம் முதலிய ஸ்தாபனங்கள் 'சத்ரபதி சிவாஜி தன் சைனியத்துக்குக் கூறியது', 'குரு கோவிந்தன்' முதலிய பாடல்களைத் தனிப் பிரசுரங்களாக வெளியிட்டன.

தஞ்சை ஜில்லா குடவாசல் புதுக்குடியைச் சேர்ந்த சாமி உடையார் என்ற அன்பர் தினமும் கையெழுத்தில் ஒரு பாரதி பாட்டை எழுதி, இவ்வாறு பாரதி பாட்டு எழுதிய காகிதங்களின் பின்புறத்தை நண்பர்களுக்கு கடிதமெழுத உபயோகித்து வந்தார். தமது கடிதங்களின் முடிவில், பரம பக்தியுடன், "சுப்பிரமணிய பாரதி திருவடிகள் வெல்க!" என்றும் இவர் எழுதுவாராம். இவ்வாறு கையெழுத்தில்,கடிதங்களின் பின்புறத்தில்பாரதி பாடல்களை எழுதிப் பரப்பிய தனிப் பெருமை இவரைச் சேர்ந்தது. இவ்வாறு இவரிடமிருந்து கிடைத்த கடிதத்தின் பின்புறம் இருந்த பாட்டைப் படித்துத்தான் தாம் 'விண்ணும் மண்ணும் தனியாளும்' என்ற பாரதி பாட்டை அறிந்து மனனம் செய்ததாக சங்கு சுப்பிரமணியம் கூறுகிறுர்.

## ' மகாகவி அல்ல !'

இவ்வாருக, பற்பல அன்பர்களின் பலவித முயற்சிகளினுல் பாரதி பாடல்கள் தமிழ் மக்களுக்கு அறிமுகமாயின. ஆனுல், பாரதியின் வீராவேச தேசியப் பாடல்களினுலும் ஒருசில வேதாந்தப் பாடல்களினுலும் கவர்ச்சியுற்ற தமிழகம் அவரை ஒரு தேசியக் கவி என்று மட்டுமே ஒப்புக் கொண்டிருந்தது, பாரதி ஓர்

இலக்கிய மேதை என்ருே மகாகவி என்ருே ஒப்புக்கொள்ளத் தமிழ் அறிவாளிகள் தயா ராயில்லை: 1935-ல் கூட, சிறந்த தமிழ்ப் புலமை கொண்ட இலக்கிய விமர்சகரான பி. ஸ்ரீ. ஆச்சாரியார், "பாரதி மகாகவி அல்ல; ஒரு நல்ல கவி" என்று சொல்லிவிட்டு, இளம் எழுத்தாளர்களின் தாக்குதலுக்கு இலக் கானுர். அக்காலப் பத்திரிகைகளில் இந்த இலக்கிய விவாதம் காரசாரமாக நடந்தது. பாரதியின் சிறப்பை எடுத்துக் காட்டும் நோக்கத்துடன் கு.ப. ராஜகோபாலன் 'பாரதி யின் இலக்கிய பீடம்' என்ருெரு நூலும், பெ. கொ. சுந்தரராஜன் ('சிட்டி') 'கண் ணன் என் கவி' என்ருெரு நூலும் எழுதி, தற்கால மேனுட்டு இலக்கிய விமர்சன முறை யில், பாரதி மகாகவி என்று வாதித்தார்கள்.

1938-ம் ஆண்டில், வ. ரா. வின் ஊக்கத் திலுைம், பாரதி நண்பர் சா. துரைசாமி அய்யரின் ஆதரவினுலும் பாரதி சங்கம் என்ற சங்கம் தோன்றியது. இதில் பாரதி பற்றிச் சில விவாதங்கள் நடந்தன. ஆனல் இச் சங்கம் அதிக காலம் நடக்கவில்லை.

### நூல் உரிமை மாற்றம்

1931-ல் பாரதி குடும்பத்தார் பாரதி நூல் களின் உரிமைகளை 4,000 ரூபாய்க்கு பாரதி பிரசுராலயத்துக்கு விற்றனர். ஏற்கனவே சகுந்தலாவின் கல்யாணச் செலவுக்காக வாங் கப்பெற்ற கடனைத் தீர்த்து, பாக்கியை தவணைகளில் செல்லம்மாவிடம் தருவதாக ஒப்பமாயிற்று.

இந்தச் சமயத்தில், பாரதி பாடல்களை ஒலிப்பதிவு செய்யும் உரிமை ஸரஸ்வதி ஸ்டோர்ஸ் வெளியிட்டு வந்த 'பிராட்காஸ்ட்' ரிகார்டுகளுக்காக ஏ. வி. மெய்யப்ப செட்டி யாரால் 400 ரூபாய்க்கு வாங்கப் பெற்றது.

இதற்கிடையே, 1929-ல், பாரதியின் தேசியப் பாடல்களை ஒரு தனி நூலாகவும், 'விநாயகர் நான்மணி மாலை'யைத் தனி நூலா கவும் பாரதி பிரசுராலயம் வெளியிட்டது. 1930-ல் 'தோத்திரப் பாடல்கள்', 'வேதாந் தப் பாடல்கள்' என்ற பாடல் தொகுதி கள் வெளிவந்தன. இதுவரை பாரதி கவிதைகளை மட்டுமே வெளியிட்டு வந்த பாரதி பிரசுராலயம், 1930-ல், பாரதியின் வசன நூல்களையும் தனித் தனிப் புத்தகங் களாக வெளியிட ஆரம்பித்தது. இதன்பின், 'பாரதி நூல்கள்—கவிதை', 'பாரதி நூல்கள் —வசனங்கள்' என்ற இரு பெருந் தொகுதி களையும் வெளியிட்டது.

1935-ம் ஆண்டில், பாரதி நூல்கள் விற் பனையினுல் பாரதியின் மனைவிக்குத் தக்க லாபம் கிடைக்கவில்லை என்று ஒரு புகார் எழுந்தது; தாம் வறுமையால் வாடுவதாயும், பாரதி பிரசுராலயம் குறித்த தவணைகளில் பணம் அனுப்பவில்லை என்றும், விவ ரம் தெரியாமல் நூல்களின் உரிமைகளைக் கொடுத்து விட்டதாயும், நூல்களின் விற் பனையால் கிடைக்கும் லாபத்தில் பங்கு வேண்டும் என்றும் செல்லம்மா பாரதி கூறி ஞர். இவருக்கு ஆதரவாக ஆக்கூர் அனந் தாச்சாரி முதலிய இளைஞர்கள் பத்திரி கைகளில் கிளர்ச்சி செய்தார்கள். பாரதி பிரசுராலயத்தினர், இப்புகார்கள் உண்மை யல்ல வென்று மறுத்து, பாரதி பிரசுராலயம் நிறைய லாபம் சம்பாதிப்பதாய்க் கூறுவது அபாண்டமென்று பதிலளித்தார்கள்.

### பாரதியின் ஆங்கில நூல்கள்

இந்தச் சமயத்திலும் பிரசுரமாகாத பாரதி நூல்களை ஒழுங்கு செய்து பிரசுரிக்கும் வேலை தொடர்ந்து நடந்தது. செல்லரித்துப்போன பழைய கையெழுத்து ஏடுகளினின்று சேர்க் கப்பட்ட பாரதி கவிதைகளைப் பரிசோதித்து சரிவர வெளியிடும் பணியில் பாரதி பிர சுராலயத்துக்கு தமிழ் லெக்ஸிகன் காரியாலய வி. நாராயணன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, எஸ். வையாபுரிப் பிள்ளை, சுத்தா னந்த பாரதி ஆகியோர் உதவிபுரிந்தனர்.

1937-ல் முதன் முதல் தடவையாக, பாரதி எழுதிய ஆங்கில நூல்கள் இரண்டு பாரதி பிரசுராலயத்தால் பிரசுரிக்கப் பெற்றன. அன்னி பெஸண்டின் 'காமன்வீல்' பத்திரி கையிலும், அரவிந்தரின் 'ஆரியா' பத்திரிகை யிலும் பாரதி காலத்தில் வெளிவந்த அவரது ஆங்கிலக் கவிதைகளும் கட்டுரைகளும் 'அக்னி அண்டு அதர் பொயம்ஸ்' 'எஸ்ஸேஸ் அண்டு அதர் ப்ரோஸ் ப்ராக்மெண்ட்ஸ்' ('Agni and Other Poems', 'Essays and Other Prose Fragments') என்ற நூல் களாக வெளியாயின. இவைகளைத் தொகுத்து வெளியிடுவதில் புரொபஸர் கே. ஸ்வாமிநாத னும், ஆசிரியர் கே. எஸ். வெங்கடரமணியும் உதவி செய்தார்கள்.

அடுத்த 1938-ம் ஆண்டில், 'ஸ்வசரிதையும் பிற பாடல்களும்' என்ற தொகுதி வெளி வந் தது. அத்துடன், ஏற்கனவே 'சுதேசமித்திர னிலும்' 'இந்தியா'விலும் பாரதி காலத்தில் வெளியான பல கட்டுரைகள் தொகுக்கப் பட்டு, 'தத்துவம்', 'மாதர்', 'கலைகள்', 'சமூ கம்' என்ற நான்கு பிரிவுகளாகவும், 'பாரதி நூல்கள்-கட்டுரைகள்' என்ற தொகுதியாய்த் தனி நூலாகவும் வெளியிடப் பெற்றன.

### பாரதி சரிதங்கள்

பாரதியைத் தமிழ் மக்கள் சரிவரப் புரிந்து கொள்ளுமுறையில் முதல் பாரதி சரிதம் கவி ஞர் மறைந்த வருஷமே வெளியாயிற்று.

ஆனால், இதை உருவான பாரதி சரிதம் என்பதைவிட பாரதியை நேரில் அறிந்த மூன்று அறிஞர்களின் நினைவுக் குறிப்புகள் என்பதே பொருத்தமாகும். 'பாரதியார் சரித்திரம்' என்ற இச் சிறு நூலை பாரதி பிரசுராலயம் வெளியிட்டது. இதில் சோமசுந்தர பாரதி, பரலி சு. நெல்லையப்பர், வி. சக்கரை ஆகிய மூவரும் தனித்தனியே ஓரொரு கட்டுரை எழுதியிருந்தார்கள்.

இதற்குப் பல வருஷங்களுக்குப் பின், 1929-ல், பாரதியின் தம்பி சி. விசுவநாதன் எழுதிய 'பாரதியும் அவரது நூல்களும்' (Bharati and His Works) என்ற சிறு ஆங்கில நூலை பாரதி பிரசுராலயம் வெளியிட்டது. பாரதியின் வாழ்க்கை விவரங்களில் முக்கியமானவைகளைக் கொடுத்து, பாரதி பாடல்களின் உயர்வை விமர்சித்தது இந்நூல்.

ஆனால், முதன் முதல் தடவையாக, ஆதியோடந்தமான விரிவான பாரதி சரிதம் எழுதியவர் வ. ரா. தான். 'சுப்பிரமணிய பாரதியார்' என்ற தலைப்பில் அவர் 'காந்தி' பத்திரிகையில் 1935-36-ல் எழுதிய தொடர்ச்சியான கட்டுரைகளே, பின்னர், 1944-ல் 'மகா கவி பாரதியார்' என்ற நூலாக உருப் பெற்றன.

1936-ம் ஆண்டு ஆக்கூர் அனந்தாச்சாரியார் 'கவிச் சக்கரவர்த்தி சுப்பிரமணிய பாரதி சரித்திரம்' என்ற நூலைப் பிரசுரித்தார். புத்தக வடிவில் வெளிவந்த முதல் பாரதி சரிதம் இதுவாகும்.

1938-ல் சக்திதாஸன் சுப்பிரமணியம் பாரதியார் வாழ்க்கைச் சம்பவங்கள் கொண்ட "பாரதிலீலை" என்ற சிறியதோர் நூலை வெளிக்கொணர்ந்தார். இதே ஆண்டு, "ஹிந்துஸ்தான்" பத்திரிகையில் இந்நூலாசிரியர் பதிப்பித்த பாரதி மலர்களில் முதல் மலர் பிரசுரமாயிற்று. இம் மலர்களில் வெளியிடப்பெற்ற அதுவரை வெளிவராத பல தகவல்கள் பாரதி வாழ்க்கைச் சரிதம் விரிவானதாக வெளிவர ஊக்கமளித்தன. 1941-ம் ஆண்டு பாரதியின் மனைவி செல்லம்மா எழுதிய 'சுப்பிரமணிய பாரதியார்' என்ற நூல் அச்சிடப்பட்டது. இதன்பின், ரா. கனகலிங்கத்தின் 'என் குருநாதர் பாரதி', 'வ. உ. சி. கண்ட பாரதி', தங்கம்மா பாரதியின் 'பாரதியின் கவிதை', சுத்தானந்த பாரதியின் 'கவிக்குயில் பாரதியார்', யதுகிரியம்மாளின் 'பாரதி நினைவுகள்', பாரதி பற்றி பாரதிதாசன் பாடியுள்ள பாடல்கள் முதலிய மற்றும் பல பாரதி சரிதங்கள் வெளியாயின.

### யுத்த காலத்தில்

1938-ல் சகுந்தலாவின் கணவர் நடராஜன் பாரதி பிரசுராலயத்திலிருந்து விலகிக் கொண்டார். 1941-ல் ஹரிஹர சர்மாவும் சொந்தக் காரணங்களால் விலகிக் கொண்டார். பாரதி பிரசுராலயம் பாரதியின் தம்பி விசுவநாதனின் தனிப் பொறுப்பாயிற்று.

யுத்த காலத்தில் காகிதப் பஞ்சம் பாரதி நூல்களையும் பாதித்தது. பழுப்பு நிறக் காகிதத்தில் பாரதி நூல்கள் காட்சி யளித்தன. ஆனால், முதன் முறையாக உள்ளே பாடல்களுக்கேற்ற படங்கள் சேர்க்கப் பெற்ற பதிப்புகளும் தலைகாட்டலாயின. பாரதி நூல்கள் சிறப்பான கண்கவர் பதிப்புகளாக வெளிவராததற்கு நூல்களின் உரிமை தனிப்பட்டவர்களிடம் இருப்பதுதான் காரணம் என்று சிலரும், பாரதி பாடல்களைத் தேசத்தின் பொது சொத்தாக்கிவிட்டால் பல பேர் பல்லாயிரக் கணக்கில் பிரதிகள் வெளியிட இடமுண்டாகிப் பாடல்கள் விரைவில் பரவும் என்று சிலரும் குறைபட்டு வந்தார்கள். இதே சமயம், பாரதி நூல்கள் விற்பனையால் வரும் லாபத்தில் அதிகப் பங்கு பாரதி குடும்பத்துக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும் என்று வற்புறுத்திய சிலரும் இருந்தனர்.

### எட்டயபுரம் பாரதி மண்டபம்

1945-ம் ஆண்டு ஸெப்டம்பர் 11-ந் தேதி, எட்டயபுரத்தில் பாரதி நினைவுச் சின்னம் ஒன்று அமைக்க சி. ராஜகோபாலாச்சாரியார் அஸ்திவாரக்கல் நாட்டினர். பாரதி பிறந்த ஊரில் அவர் நினைவாக ஒரு மணி மண்டபம் வேண்டுமென 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி தம் பத்திரிகையில் விடுத்த வேண்டுகோள் தமிழ் மக்களின் உற்சாகமான ஆதரவைப் பெற்றது. ஆயிரக்கணக்கான தமிழ் மக்கள் அளித்த நன்கொடையினால் அழகான பாரதி மணி மண்டபம் எட்டயபுரத்தில் கட்டப்பெற்றது. 1948-ம் ஆண்டில், அப்போது மேற்கு வங்காள கவர்னராகவிருந்த சி. ராஜகோபாலாச்சாரியார் மண்டபத்தைத் திறந்து வைத்தார். திறப்பு விழாவில் கலந்து கொள்ளச் சென்னையிலிருந்து சென்ற பிரதிநிதிகள் பாரதி படத்துடன் விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட எஞ்சின் பூட்டிய தனி ரயிலில் எட்டயபுரம் சென்று கூடினார்கள். அரசியலில் அபிப்பிராய பேதமுள்ள பல கட்சியினரும் ஒருங்கே கூடியிருக்க, மிகுந்த கோலாகலத்துடன் மண்டபத் திறப்பு விழா நடந்தேறியது. திறப்புவிழாவை முன்னிட்டு, ஒரே ரூபாய் விலையில், உயர்ந்த காகிதத்தில், வர்ணச் சித்திரங்கள் நிறைந்த பாரதி பாடல் நூலொன்றும் வெளியிடப்பட்டது.

எட்டயபுரம் பாரதி மணி மண்டபத்தில், வங்காளி ஓவியர் ஹரிபாத ராய் எழுதிய பாரதி படமொன்றும், 'பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா', 'காணி நிலம் வேண்டும் பராசக்தி', 'ஜயமுண்டு பயமில்லை,

மனமே', 'பறையருக்குமிங்கு தீயர் புலையருக்கும் விடுதலை' என்று துவங்கும் பாரதி பாடல்களின் பாரதி கையெழுத்துப் பிரதியின் புகைப்படங்களும், பாரதி சிலையொன்றும் திறந்து வைக்கப்பட்டன.

பாரதி மண்டபத்தை நிர்வகித்து நடத்த ஒரு 'ட்ரஸ்ட்டும்', பாரதியார் ஞாபகார்த்த சங்கம் என்ற சங்கம் ஒன்றும் இச்சமயம் அமைக்கப்பட்டன. ஆண்டு தோறும் பாரதி தினத்தைப் பெருங் கொண்டாட்டத் திருவிழாவாக நடத்திவரும் பணியில் ஈடுபட்டிருக்கிறது பாரதியார் சங்கம்.

## அரசாங்கம் மேற்கொள்கிறது

பாரதி நூல்களைப் பொது சொத்தாக்க வேண்டும் என்ற கிளர்ச்சி நாளுக்குநாள் வலுக்கவே, ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியாரை முதன் மந்திரியாய்க் கொண்ட சென்னை மந்திரி சபை இது சம்பந்தமாக நடவடிக்கை மேற்கொண்டது. இதன் பலனாக 1949-ம் ஆண்டில், பாரதி பிரசுராலயத்திடமிருந்த பதிப்புரிமையை சி. விசுவநாதனிடமிருந்து அரசாங்கம் விலைக்கு வாங்கிற்று. பாரதி பாடல்களின் ஒலிப் பதிவு உரிமையை ஏ. வி. மெய்யப்ப செட்டியார் இலவசமாக வழங்கினார். பாரதியின் மனைவி செல்லம்மாவுக்கு 5,000 ரூபாயும், புதல்வியர் தங்கம்மா, சகுந்தலா இருவருக்கும் தலைக்கு 5,000 ரூபாயும் நிதியளித்து, பாரதி குடும்பத்தாரின் சம்மதமும் பெற்று அரசாங்கம் பாரதி நூல்களின் உரிமைகளை ஏற்றுக்கொண்டது. பாரதி பிரசுராலயம் தவிர்த்த பிற ஸ்தாபனங்களிடமிருந்த பாரதி நூல்களின் உரிமைகளை அரசாங்கம் வாங்கவில்லை; அவைகளின் உரிமைகள் நிலைமை முன்போலவே இருந்து வருகிறது.

பாரதி பிரசுராலயத்திடமிருந்து உரிமையை வாங்கிக் கொண்டபோது, அவர்களிடம் கைவசம் பாக்கி நின்ற பாரதி நூல் பிரதிகளையும் அரசாங்கம் எடுத்துக் கொண்டது. இவை சென்னை அரசாங்க நூல் விற்பனை நிலையத்திடம் ஒப்படைக்கப் பெற்றன.

1950-ம் ஆண்டு முதலாகவே பாரதி நூல்களுக்கு 'அத்தாட்சி பெற்ற' பதிப்பொன்று வெளியிடும் வேலையிலும் அரசாங்கம் கவனம் செலுத்திற்று. பாரதி நூல்களைப் பரிசோதித்துப் பதிப்பிக்க உதவுமாறு, 'பாரதி நூல்கள் பதிப்புக் குழு' ஒன்றும் அரசாங்கம் அமைத்தது. இக் குழுவில், ரா. பி. சேதுப்பிள்ளை, சி. விசுவநாதன், கி. ஸ்வாமிநாதன், ரா. கிருஷ்ணமூர்த்தி ('கல்கி') ஆகிய நால்வர் அங்கம் வகித்தனர். இவர்களுக்கு ஆலோசனை சொல்ல 'கவிதைப் பதிப்பு ஆலோசனைக் குழு'வாக பரலி சு. நெல்லையப்பர், கி. வா. ஜகந்நாதன், மு. வரதராசன், ரா. பி. சேதுப்பிள்ளை ஆகிய நால்வரும் நியமிக்கப்பட்டார்கள். சி. விசுவநாதன், ஆலோசனைக் குழுவினர் குறிப்பிட்டபடி கவிதைகளை வரிசைப்படுத்திக் கொடுத்தார். மு. சண்முகம் பிள்ளை பதிப்புக் குழுவினர் விருப்பப்படி பாடல்களை முற்பதிப்புகளோடு ஒப்பிட்டு, பிழையற எழுதி, அச்சடிக்கத் தகுந்தபடி பிரதி தயாரித்தும் அநுபந்தங்கள் வகுத்துக் கொடுத்தும் உதவி புரிந்தார். முடிவாக, 1954-ம் ஆண்டு இறுதியில் அரசாங்கப் பதிப்பின் கவிதைத் தொகுதி வெளி வந்தது. இது 'தேசீய கீதங்கள்', 'தெய்வப் பாடல்கள்', 'பல்வகைப் பாடல்கள்', 'முப்பெரும் பாடல்கள்' என்ற நான்கு பிரிவுகளைக் கொண்டிருந்தது. ஏற்கனவே நூல் வடிவில் வழங்கி வந்த பாடல்களைத் தவிர மூன்றே பாடல்கள் புதிதாக இப் பதிப்பில் சேர்க்கப்பட்டன. ஏற்கனவே பாரதி பாடலெனப் பிரசுரிக்கப்பட்ட நான்காவது பாடலொன்று, பாரதி பாடலாக இல்லாதிருந்தும் பாரதி கவிதைத் தொகுதியில் இடம் பெற்றுவிட்டது! சைவ எல்லப்ப நாவலரின் செவ்வந்திப் புராணப் பாடல் அது! அதை பாரதி தம் கைப்பட எழுதி வைத்திருந்ததனால் பாரதி பதிப்புக் குழுவினர் கூட அது பாரதி பாடலெனக் கருதி விட்டனர்!

சென்னை அரசாங்கப் பதிப்பில் பயனுள்ள பல அனுபந்தங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆராய்ச்சியாளர்களுக்கும் பாரதியன்பர்களுக்கும் இப்பதிப்பின் அனுபந்தங்களில் தரப்பட்டுள்ள விரிவான விவரங்கள் மிகவும் உபயோகமாக இருக்கும். ஆனல், இப் பதிப்பில் பாடல்களுக்குக் கவிஞர் கொடுத்த தலைப்புகள் பலவிடங்களில் பதிப்புக் குழுவினரால் மாற்றப்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டில் தற்போது நிலவும் கருத்துப்படி தனித் தமிழ்த் தலைப்புகளாக இவை மாற்றப்பட்டிருப்பினும், கவிதைகளுக்குக் கவிஞர் கொடுத்த தலைப்புகளை இவ்வாறு அவரவர் இஷ்டப்படி மாற்றுவது முறையா என்பது சிந்தனைக்குரிய விஷயம்.

## மியூஸியத்தில் கையெழுத்துப் பிரதிகள்

பாரதி பிரசுராலயத்திடமிருந்து அரசாங்கம் பெற்ற பாரதி கையெழுத்துப் பிரதிகளும் பழம் பதிப்புப் பிரதிகளும், 1949-ம் ஆண்டு ஆகஸ்ட் 6-ந் தேதி சென்னை அரசாங்கப் பொருட்காட்சிசாலையிடம் (எழும்பூர் மியூஸியம்) ஒப்படைக்கப்பட்டன. இவை இப்போது, அங்கே மிக பத்திரமாக, தக்க முறையில், எழுத்தை மறைக்காத மிக மெல்லிய

துணியில் ஒட்டப் பெற்று, பைண்டு செய்யப்பட்டு நீண்டகாலம் இருக்குமாறு பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஆனால், இவைகளில் எதையும் பொதுஜனப் பார்வைக்கு வைக்கவில்லை. இவைகளைப் பார்க்க விரும்புவோர் பொருட்காட்சிச்சாலை அதிகாரிகளிடம் தனி அனுமதி பெற்றுப் பார்க்கலாம்.

### எவரும் வெளியிடலாம் !

பாரதி பிரசுராலயம் வெளியிட்ட பாரதி நூல்களை சென்னை அரசாங்கம் வாங்கி விற்கிறதென்றாலும், அரசாங்க இலாகாவின் சிவப்பு நாடாவின் முறைகளால் நூல் பிரதிகள் இருப்பதும் இல்லாததும் தெரியாமல் சில வருஷங்கள் பொதுமக்கள் கஷ்டப்பட்டார்கள். நூல் இருப்பதுதெரிந்தவர்கள்கூட இவைகளை வெளியூர்களிலிருந்து தருவிப்பது, சிவப்பு நாடா தொல்லையால், அநேகமாய் சாதிக்க முடியாத காரியமாகவே இருந்து வருகிறது.

ஆனால், நல்லவேளையாக, பாரதி கவிதைத் தொகுதி யொன்றை வெளியிட்ட கொஞ்ச நாட்களுக்கெல்லாம், பாரதி கவிதைகளை இனி எவர் வேண்டுமானாலும் பிரசுரிக்கலாம் என்று அரசாங்கம் அனுமதி கொடுத்துவிட்டது. அதாவது, அத்தாட்சி பெற்ற பதிப்பாகிய தன் பதிப்பில் வெளியான பாடல்களை எவர் வேண்டுமானாலும் பிரசுரிக்கலாம் என்று பாரதி கவிதைப் பதிப்புரிமையைப் பொது சொத்தாக்கினார்கள். இப்போது இதைப் பயன்படுத்திக் கொண்டு பல பிரசுரகர்த்தர்கள் பாரதி கவிதைகளுக்குத் தத்தம் பதிப்புகளைக் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், அரசாங்கம் வாங்கிக் கொள்ளாத பல பாரதி பாடல்களின் உரிமை நிலையோ முன்போலவே தனிப்பட்டவர்களிடமே இருக்கின்றது. அப் பாடல்கள் அரசாங்கப் பதிப்பில் இடம் பெறாமல் நிற்கின்றன. மேலும், பாரதியின் வசனங்களை வெளியிடும் உரிமையைப்பற்றி அரசாங்கம் ஒன்றும் சொல்லவில்லை. பாரதி நூல் பதிப்புக் குழு வசனங்களுக்கு அரசாங்கப் பதிப்பு வெளியிட்டு விட்டால், பிறகு அந்த உரிமையையும் அரசாங்கம் அதிகாரபூர்வமாக பொதுமக்கள் சொத்தாக்கி விடும்போலும். பாரதி நூல் பதிப்புக் குழு இப்போது வசனங்களைப் பதிப்பதுபற்றி ஆராய்ந்து வருகிறது. காலம் சென்ற 'கல்கி' கிருஷ்ணமூர்த்திக்கு பதிலாக ம. ப. பெரியசாமித் தூரன் பதிப்புக் குழுவில் இடம்பெற்றுள்ளார்.

### 'பாரதி தமிழ்'

பாரதி நூல்கள் பிரசுரத்தில் முக்கியமானதோர் சம்பவம் 1953-ல் நடந்தது. 1905 முதல் பாரதியின் கடைசிக்காலம் வரை 'சுதேசமித்திர'னில் வெளியான பாரதி கவிதைகளையும் கதை, கட்டுரை, குறிப்புகளையும் பெரியசாமித் தூரன் தொகுத்து, "பாரதி தமிழ்" என்ற நூலாக 1953-ம் ஆண்டு அக்டோபர் மாதம் வெளிக் கொணர்ந்தார். இது அமுத நிலைய வெளியீடாகப் பிரசுரமாயிற்று.

பதினாறு வருஷத்து தினசரிப் பத்திரிகை இதழ்களைப் பக்கம் பக்கமாய்ப் புரட்டிப் பார்த்து, புத்தக வடிவில் பிரசுரமாகாத கவிதை, கதை, கட்டுரை, குறிப்புகளைப் பிரதியெடுத்து, புத்தக வடிவில் வந்துள்ள கவிதை, கதை முதலியவைகளைப் பத்திரிகையில் வந்துள்ள கவிதை, கதை முதலியவைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து, பாடபேதங்களையும் விட்டுப் போன பகுதிகளையும் 'சுதேசமித்திர'னில் பிரசுரமான தேதிகளையும் கிரமமாய் எழுதி, மிகுந்த ஆராய்ச்சியுடன் ஒரு நூலாக வெளியிட்டிருக்கிறார் தூரன். தூரன் தந்துள்ள இந்த விவரங்களும், இதுவரை புத்தக வடிவில் கிடைக்காதிருந்த ஏராளமான பாரதி கவிதை, கதை, கட்டுரை, குறிப்புகள் இந்நூலில் வெளியாகியிருப்பதும் இதை பாரதி பக்தர்களுக்குப் பெருவிருந்து ஆக்குகின்றன. அவர்கள் இதற்கு பெரியசாமித் தூரனுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

### மேலும் தேடவேண்டும்

இதே போல, பாரதி காலத்திய இதர பத்திரிகைகளையும் தேடிப் பிடித்து ஆராய்ந்தால் இன்னும் பல பாரதி எழுத்துகள் கிடைக்கும். மேலும், 'சுதேசமித்திரன்' பழம் பிரதிகளை மீண்டும் ஒரு முறை சோதித்துப் பார்த்தால், தூரன் கண்களுக்கும் படாமல் போன சிற்சில கதை, கட்டுரைகள் கிடைக்கும். இவ்வாறு இரண்டொரு பாரதி கதைகள் இரண்டு ஆண்டுகளுக்குமுன் யான் தேடியபோது கிடைத்தன. ஒருவரே எவ்வளவுதான் கண்ணில் விளக்கெண்ணெய் போட்டுத் தேடினாலும் அவர் கண்ணில் சில விஷயங்கள் படாமல் தப்பிப் போவது இயற்கையே.

முடிவான பாரதி நூல் தொகுதிகள் வெளியிடுவதற்காக, குறைந்த பட்சம் பின் வரும் பழம் பத்திரிகைகளைக் கண்டுபிடித்து, பக்கம் பக்கமாய் ஆராய்வது அவசியமாகும்:

1. 'சுதேசமித்திரன்' (தினசரி, வாரப் பதிப்பு, ஆண்டு மலர்கள்) 1905 முதல் 1921 ஸெப்டம்பர் முடிய.
2. 'சக்கரவர்த்தினி' மாதப் பத்திரிகை, 1905 முதல் 1921 முடிய.
3. 'பால பாரதா' (Bala Bharata): ஆங்கில வாரப் பத்திரிகை, பாரதி நடத்தியது. சென்னை, புதுவை, 1906-1910.

4. 'இந்தியா' வாரப் பதிப்பு. சென்னை, புதுவை, 1906—1910,

5. 'விஜயா', சென்னை, புதுவை, 1908-1910.

6. 'சூர்யோதயம்', வாரப் பதிப்பு, புதுவை, 1910.

7. 'கர்ம யோகி', மாதப் பதிப்பு, புதுவை, 1909—10.

8. 'சித்ராவளி', மாதப் பதிப்பு. புதுவையில் ஆரம்பிக்கப் போவதாய் அறிவிக்கப் பெற்ற ஆங்கில—தமிழ் கார்ட்டூன் பத்திரிகை.

9. 'ஞானபாநு', சென்னை. 1912—1919 (?)

10. 'மெட்ராஸ் ஸ்டாண்டர்டு'—சென்னை ஆங்கில தினசரி. (பாரதி—சுந்தர ராமன் கீதா விவாதத்துக்காக.)

11. 'நியூ இந்தியா,' 'காமன்வீல்', 'ஆர்யா' முதலிய ஆங்கிலப் பத்திரிகைகள். (இவைகளில் பாரதியின் ஆங்கிலக் கட்டுரைகள், கவிதைகள் வெளி வந்துள் ளன.)

12. "தேசபக்தன்" தினசரி, (வ. வே. சு. அய்யர், திரு. வி. க., பரலி சு. நெல்லையப்பர், வெ. சாமிநாத சர்மா முதலியோர் ஆசிரியர்களாக இருந்த பத்திரிகை): ஆரம்பம் முதல் கிடைத்த வரை.

13 "ஹிந்து" தினசரி. (கீதை பற்றிய விவாதத்துக்கும், குள்ளச்சாமி படத்துக்கும் சென்னையில் 1921-ல் நீதிபதி மணி அய்யர் தலைமையில் பாரதி செய்த "நித்திய வாழ்வு' (Life Eternal) என்ற பேச்சின் விவரத்துக்கும், இதர செய்திகளுக்கும்.)

தேடுவதென்று ஆரம்பித்தோமானால், இன்னும் இதர பத்திரிகைகளிலும் எதிர்பாராத படி பல பாரதி எழுத்துகள் கிடைக்கும். பிற்காலத்தில் வந்த தமிழ்ப் பத்திரிகைகளிலும் பல பாரதி கதை, கட்டுரைகள் வெளியாகியிருப்பதால், அவைகளையும் பார்ப்பது பலனளிக்கும். தமிழ்நாடெங்கும் உற்சாகமான தேடுதல் முயற்சி ஆரம்பிக்கப்பெற்றால், ஆங்காங்குள்ள தனி அன்பர்களிடமும் நூல் நிலையங்களிலும் இருக்கும் பழைய தமிழ்ப் பத்திரிகைகளைப் புரட்டிப் பார்த்துத் தேடினோமானால், மேலும் பல புதிய பாரதி கவிதைகளும் கதைகளும் கட்டுரைகளும் கிடைக்குமென்பதில் ஐயமில்லை. இந்த முயற்சிக்கு ஏதாவதொரு தமிழ்ப் பத்திரிகை முன் வந்து ஊக்கமளிக்க வேண்டும். இவ்வாறு செய்தால், பரிபூரணமாக பாரதி நூல் பதிப்பு ஒன்று விரைவில் வெளிவரச் செய்த புண்ணியம் தமிழ் மக்களைச் சாரும்.

—

அனுபந்தம் – 3

# "பூமண்டல நிறைந்த கீர்த்தி"

திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும் என்று பாடிய கவிஞனது கவிதைகளை இன்று பாரதப் புலவோரும் பிறநாட்டுப் புலவோரும் போற்றுகிறார்கள். பாரதி எழுத்துக்களைப் பிறமொழிகளில் அளிக்க வேண்டும் என்ற ஆர்வமும் இன்று காண்கிறோம்.

ஆனால், இது இன்றுதான் ஏற்பட்டது என்று நினைக்கவேண்டாம்.

பாரதி இருந்த காலத்திலேயே அவரது கவிதைகளைப் பிறமொழி அறிஞர்கள் போற்றியிருக்கிறார்கள்.

புதுவையிலிருந்து திரும்பி வந்தபின் மீண்டும் சென்னையில் "சுதேசமித்திர"னில் வேலை பார்த்து வந்த பாரதி, தமது நூல்களை ஒழுங்காய்ப் பிரசுரிப்பதற்காக 'தமிழ் வளர்ப்புப் பண்ணை' என்ற ஸ்தாபனம் அமைத்து அதன் பெயரில் விடுத்த வேண்டுகோள் ஒன்றில் தமது கீர்த்தி "பூமண்டல நிறைந்த கீர்த்தி" என்று சொல்லி, மேலும் கூறுகிறார் :

"ஆனால் இவருடைய கீர்த்தி தமிழ்நாட்டில் மாத்திரமே பரவியிருப்பதாக நினைத்துவிடக் கூடாது. இவருடைய பாட்டுக்கள் பல தெலுங்கு பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டு ஆந்திர தேசத்தாரால் கொண்டாடப்படுகின்றன. ஐயர்லந்து தேசத்து மஹா கவிகளில் ஒருவரும் ஜப்பான் தேசத்தின் ராஜதானியாகிய டோக்யோ நகரத்திலுள்ள 'இம்பீரியல் யுனிவர்ஸிடி' என்ற ஸாம்ராஜ்ய ஸர்வ கலா சங்கத்தில் இங்கிலீஷ் ஆசிரியராக விளங்கியவருமாகிய ஜேம்ஸ் எச். கஸின்ஸ் என்பவர் இவருடைய தமிழ்ப் பாட்டுக்கள் சிலவற்றை இங்கிலீஷில் மொழிபெயர்த்து மேல்நாட்டார் வியப்புறும்படி செய்திருக்கிறார்."

## தெலுங்கில் பாரதி பாடல்

பாரதி பாடல்களை இவ்வாறு தெலுங்கில் மொழி பெயர்த்துப் போற்றியது யாரென்று தெரியவில்லை. துக்கிரியால கோபால கிருஷ்ணய்யா என்ற ஆந்திரத் தலைவர், 1921ல் சீமையிலிருந்து சென்னை திரும்பி வந்தபோது சென்னையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசினார். அதே கூட்டத்தில் பாரதி முதலில் பாடினார். பாரதியின் பாட்டில் மயங்கிப் போன கோபாலகிருஷ்ணய்யா தமது பேச்சுக்குப்பின் பாரதியை மீண்டும் பாடும்படி செய்தாராம். பாரதி இரண்டாம் தடவை பாடி முடித்ததும் அவரை இறுகக் கட்டித் தழுவிக் கொண்டாராம் அந்த ஆந்திரத் தலைவர். மேலும், கூட்டம் முடிந்ததும் பாரதியும் துக்கிரியால கோபாலகிருஷ்ணய்யாவும் கடல் மணலில் நான்கு மணி நேரம் அளவளாவிக் கொண்டிருந்தனராம். பாரதி தமது தமிழ்ப் பாடல்களைப் பாடச் சொல்லி, அவைகளின் அர்த்தத்தைக் கேட்டு ரஸித்தார் ஆந்திர நண்பர்; தமது ஆந்திர ரஸிகருக்குத் தமது பாடல்களின் அர்த்தத்தை ஆங்கிலம் கலந்த தெலுங்கில் விளக்கிவந்தார் பாரதி.

பாரதி பாடல்களை துக்கிரியால கோபால கிருஷ்ணய்யாதான் தெலுங்கில் மொழிபெயர்த்துள்ளாரோ என்னவோ, தெரியவில்லை.

## பிரெஞ்சிலும் ஆங்கிலத்திலும்

பாரதி 1919-ல் எட்டயபுர மன்னருக்கு அனுப்பிய இரண்டாவது சீட்டுக் கவியில்,

> "பிரான் ஸென்னும் சிறந்தபுகழ் நாட்டினுயர்
> புலவோரும் பிறருமாங்கே
> விராவு புகழ்ஆங்கிலத்தீங் கவியரசர்
> தாமுமிக வியந்து கூறிப்
> பராவி யென்றன் தமிழ்க்கவியை மொழி
> பெயர்த்துப்
> போற்றுகின்றார்..."

என்று கூறியிருக்கிறார். பிரெஞ்சு மொழியில் யார் எப்பாடலை எப்பொழுது மொழி பெயர்த்தனர் என்ற விவரம் தெரியவில்லை. ஆனால், புதுவையன்பர் ஒருவர், பாரதி தம் பாடல்கள் சிலவற்றை பிரெஞ்சு மொழியில் பெயர்த்து பாரிஸ் நகரிலுள்ள ஒரு பத்திரிகைக்கு அனுப்பியதாகவும், அவை பிரசுரிக்கப்பட்டு நூறு பவுன் சன்மானம் கிடைத்ததாகவும் கூறுகிறார்.

பாரதி தம் பாடல்கள் சிலவற்றைத் தாமே ஆங்கிலப் படுத்தி அன்னி பெஸண்டின் 'காமன்வீல்'. 'நியூ இந்தியா' பத்திரிகைகளிலும், அரவிந்தரின் 'ஆர்யா'விலும் தம் காலத்தில் வெளியிட்டிருந்தார். இவைபற்றி ஏற்கனவே இந் நூலின் 91-ம் பக்கத்தில் குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

பாரதியின் காலத்துக்குப் பிறகு பல தமிழறிஞர்கள் அவரது கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். ராஜாஜி பாரதி பாடல்கள் சிலவற்றை மொழி பெயர்த்து 'யங் இந்தியா' பத்திரிகையில் வெளியிடச் செய்தார். புரொபஸர் கே. ஸ்வாமிநாதன், பெ. நா. அப்புஸ்வாமி, புரொபஸர் ஏ. ஸ்ரீநிவாஸ ராகவன், மிஸஸ் ஹெப்ஸிபா ஜேசுதாஸன் முதலியோர் செய்துள்ள பாரதி பாடல் மொழிபெயர்ப்புகளை 'கவிக் குரல்' (Voice of a Poet) என்ற ஆங்கில நூலாக கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம் 1951-ல் வெளியிட்டிருக்கிறது.

### ஹிந்தியில் மொழிபெயர்ப்பு

பாரதி நூல்களில் மூன்று 1940-ம் வருஷத்திலேயே ஹிந்தியில் மொழிபெயர்க்கப்பட்டு, சிறு புத்தகங்களாக பாரதி பிரசுராலயத்தால் வெளியிடப் பெற்றன. பண்டித கே. எம். சிவராம் 'ஞானரதம்' என்ற வசன நூலையும், ஸ்ரீநிவாஸாசார்ய பாரத்வாஜீய என்பவர் 'தராசு' நூலையும், பெயர் தெரியாத ஒருவர் 'ஆறில் ஒரு பங்கு' என்ற ஹரிஜன முன்னேற்றக் கதையையும் மொழி பெயர்த்திருக்கிறார்கள். இந்நூல்களுக்கு முறையே 'ஞானரத்', 'தராசு', 'ஷஷ்டாம்ச' என்று ஹிந்தியில் பெயர்கள். இவற்றின் பிரதிகள் இன்றளவும் சென்னை மவுண்ட் ரோடிலுள்ள சர்க்கார் நூல் விற்பனை நிலையத்தில் கிடைக்கின்றன.

சென்ற சில ஆண்டுகளில், 'பாரதி பக்த்' என்ற புனைபெயர் கொண்ட மஹேஷ் நாராயண் என்ற ஹிந்தி கவிஞர் பாரதியிடம் மோஹம் கொண்டு பல பாரதி பாடல்களை ஹிந்தியில் மொழிபெயர்த்து வருகிறார். சென்னை ஹிந்தி பிரசார சபையில் ஊழியம் புரிந்துவரும் இவர், தாம் செய்துள்ள மொழி பெயர்ப்புகளை 'தக்ஷிண் பாரத்', 'ஹிந்தி பிரசார் பத்திரிகா' முதலியவற்றில் வெளியிட்டிருக்கிறார்.

வட இந்தியப் பத்திரிகைகளில் சிறந்த தோன்றும், ஹிந்தி 'டைஜஸ்ட்' என்று பெயர் பெற்றதுமான 'நவநீத்' என்ற பத்திரிகையில் 'தாய்', 'பாரத தேசம்' என்ற பல பாரதி பாடல்கள் மொழிபெயர்த்து வெளியிடப் பெற்றுள்ளன. ஆர். ஸௌரிராஜன் என்ற தமிழன்பர் இம்மொழிபெயர்ப்புகளைச் செய்திருக்கிறார்.

பூர்ணம் சோமசுந்தரம் என்ற தமிழன்பரும் பாரதியை வட இந்தியாவுக்கு அறிமுகம் செய்து வைத்திருக்கிறார். தற்சமயம் மாஸ்கோவில், தமிழ் நூல்களை ரஷ்ய மொழியில் மொழிபெயர்க்க உதவும் பணியில் இருக்கும் அன்பர் சோமசுந்தரம், பாரதியை ரஷ்ய மொழியில் கொடுக்கவும் உதவுவார் என்று சொல்லத் தேவையில்லை.

### செக் முதலிய மொழிகளில் பாரதி

ஆங்கிலம், பிரெஞ்சு முதலியவை தவிர பிற ஐரோப்பிய மொழிகளிலும் பாரதி பாடல்கள் பரவும் காலம் இப்போது ஏற்பட்டிருக்கிறது. செக்கோஸ்லாவாகியாவில் ஓர் அறிஞர் இத் துறையில் செய்துவரும் பணி குறிப்பிடத்தக்கது.

செக்கோஸ்லாவாகியத் தலைநகரான ப்ராஹாவில் 'கீழ்த் திசைக் கலைகள் கழகம்' (ஓரியண்டல் இன்ஸ்டிட்யூட்) ஒன்று இருக்கிறது. இக் கழகத்தில் தொழில்புரியும் டாக்டர் காமீல் ஸ்வலேபில் என்ற செக் அறிஞர், தமிழ் கற்று, தமிழில் பாரதியைப் படித்துச் சுவைத்து, பாரதி பாடல்களை செக் பாஷையில் மொழிபெயர்த்து வருகிறார். 'பாரத சமுதாயம்', 'பறையருக்கு மிங்கு தீயர் புலையருக்கும் விடுதலை' முதலிய சில பாடல்களை இவர் மொழி பெயர்த்திருக்கிறார். மேலும், பாரதி வாழ்க்கை பற்றியும் பாரதியின் கவிதை பற்றியும் விரிவானதோர் ஆராய்ச்சி நடத்தி வருகிறார். இவர் செக் மொழியில் செய்துள்ள மொழிபெயர்ப்புகளும் பாரதி பற்றி செக் மொழியில் எழுதியுள்ள கட்டுரைகளும் 'கீழ்த் திசைக் கலைகள் கழகத்'தின் பத்திரிகையான 'நோவீ ஓரியண்டில்' பிரசுரமாகி யிருக்கின்றன. இவர் ஆங்கிலத்தில் பாரதியைப்பற்றி எழுதியுள்ள இரண்டு கட்டுரைகள் சென்னையிலிருந்துவரும் 'தமிழ்ப் பண்பாடு' (Tamil Culture) என்ற பத்திரிகையில் வெளியாகியுள்ளன.

பாரதி பாடல்களையும் சரிதத்தையும் தமது செக் மொழியில் மட்டுமன்றி, போலிஷ், ஜெர்மன், ரஷ்யன் ஆகிய மொழிகளிலும் மொழி பெயர்த்து வெளியிடச் செய்திருப்பதாக இவ்வறிஞர் தெரிவித்துள்ளார்.

சமீபத்தில் நடந்த ஆசிய எழுத்தாளர் மகாநாட்டின்போது, ரஷ்ய எழுத்தாளர்களில் சிலர் பாரதியின் பெயரை—அவர் பெரும் புரட்சிக் கவிஞர் என்ற வகையில்—உணர்ந்திருக்கிறார்கள் என்றறிந்தோம்.

### உலக நூல் நிலையங்களில்

லண்டனில் உள்ள பிரபல நூல் நிலையமான பிரிட்டிஷ் மியூஸியம், உலகத்தில் மிகப் பெரிய நூல் நிலையம் எனப்படும் வாஷிங்டன் 'லைப்ரரி ஆவ் காங்கிரஸ்' இரண்டிலும் இப்போது பாரதி நூல்கள் இருக்கின்றன.

மூன்றாண்டுகளுக்குமுன் லண்டன் சென்ற நண்பரொருவர் மூலம் சென்னை அரசாங்கம் வெளியிட்டுள்ள பாரதி கவிதைகள் நூலின் பிரதியொன்றை இந் நூலாசிரியர் லண்டன் பிரிட்டிஷ் மியூஸியத்துக்கு அனுப்பி வைத்தார். அப்போது, பிரிட்டிஷ் மியூஸியத்தின் இந்திய மொழிகள் பகுதித் தலைவர் லெவின் என்பார், அதிகார பூர்வமான ஏற்புக் கடிதம் அனுப்புவதற்கு முன்பே சொந்த முறையில் உற்சாக மிகுந்ததோர் நன்றிக் கடிதம் அனுப்பி யிருந்தார். "பிரிட்டிஷ் மியூஸியத்தில் இதை யார் படிக்கப் போகிறார்கள் என்று நினைத்துவிட வேண்டாம். இங்கே இத்தகைய நூல் நன்கு பயன்படும். மிக நன்றி" என்று அவர் எழுதியிருந்தார்.

இரண்டரை வருஷங்களுக்குமுன் இந் நூலாசிரியர் அமெரிக்கா செல்ல வாய்ப்பு

நேர்ந்தபோது, வாஷிங்டனில் உள்ள 'லைப்ரரி ஆவ் காங்கிரஸ்'ஸுக்கு பாரதியின் 'அக்னி முதலிய கவிதைகள்; கட்டுரைகளும் குறிப்பு களும்' என்ற ஆங்கில நூலையும் தமிழ் வேத மாகிய திருக்குறளுக்கு வ. வே. சு. அய்யர் செய்துள்ள சிறந்த மொழி பெயர்ப்பையும் அளித்தார். 'லைப்ரரி ஆவ் காங்கிரஸ்' நிர்வாகி களும் இதற்கு உற்சாகத்துடன் நன்றி தெரி வித்திருக்கிறார்கள்.

இதேபோல உலகிலுள்ள இதர முக்கிய மான நூல் நிலையங்களிலும் பாரதி நூல்கள் சேரும்படி செய்தோமானால், ஆங்காங்குள்ள அறிஞர்கள் பாரதியின் மேதையை உணரும் படி உதவியவராவோம்.

'மனித சமூகமனைத்திற்கும் உரியவர்'

பாரதி தமிழனுக்கு மட்டும்தான் சொந்தம் என்ற காலம் மலையேறி விட்டது. 'பாரதி மொழியின் எல்லையைக் கடந்தவர்: மனித சமூக மனைத்திற்கும் உரியவர்' என்று கவிக் குயில் ஸரோஜனி நாயுடு போற்றியிருப்பது உண்மையாகி வருகிறது. நமது அண்டை அயல் மொழிகளிலும், நாடெங்கும் பரவிய மொழியான ஹிந்தியிலும் பாரதி மேன் மேலும் அதிகமாய் மொழி பெயர்க்கப்படப் போவது உறுதி. வங்க கவர்னராகவிருந்த டாக்டர் கைலாஸ் நாத் காட்ஜு, பாரதியை இந்தியாவெங்கும் பரப்பச் சிறந்த உபாயம் பாரதி எழுத்துக்களை ஸமஸ்கிருத்தில் மொழி பெயர்ப்பதாகும் என்று கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார். ஹிந்தியிலும் ஸம்ஸ்கிருதத்திலும் பாரதி மொழி பெயர்க்கப்பட்டு, அவரது எழுத்தின் கருத்துக்கள் நாடெங்கும் பரவுவது உறுதி.

ஆனால், உலகமே பாரதியைப் போற்று வதற்கு முதற் படி தமிழர் பாரதியை நன்கு, ஆழமாகவும் விரிவாகவும், அறிவதாகும். நாம் பாரதியை நன்றாக அறிந்தாலொழிய உலகமே அவரைப் போற்றியும் பயனிராது. ஆதலால், பாரதியை—பாரதி கவிதைகளை, பாரதி கட்டுரைகளை, பாரதி கதைகளை, பாரதி குறிப்புகளை—நாம் நன்கு படித்துப் பய னெய்துவோமானால், உலகமே பாரதியைக் கொண்டாடும்போது நாமும் அர்த்த புஷ்டி யுடன் அதில் களிப்பெய்தலாம். இது தமிழர் கையிலன்றி வேறெவர் கையிலுமில்லை.

## நாமறிந்த பாரதி படங்கள்

**பா**ரதியார் புகைப் படமெடுத்துக்கொள்வதில் பிரியம் கொண்டவரென்றாலும் இன்றுவரை நமக்குக் கிடைத்துள்ள அவரது புகைப் படங்கள் ஐந்தே ஐந்து தான். அவை யாவும் அவருக்கு முப்பது வயதிலிருந்து முப்பத்தொன்பது வயதாவதற்குள் எடுக்கப் பெற்றவையே. புதுவையில் இரண்டு, காரைக்குடியில் இரண்டு, சென்னையில் ஒன்று. இவையே இன்று கிடைத்துள்ள படங்கள்.

இளமையில் ஒரு படம் எடுக்கப்பட்டதாகச் சொல் கிறார்கள், கிடைக்கவில்லை. சென்னையில் மேலும் இரண்டு மூன்று படங்கள் எடுக்கப்பட்டதாயும் சொல் கிறார்கள். அவையும் இதுவரை கிடைக்கவில்லை.

எதிரே உள்ள பக்கத்தில் இவ்வைந்து படங்களும், இவற்றில் கடைசிப் படத்திலிருந்து எடுக்கப்பட்ட தான மிகப் பிரபல பாரதி படமும் தரப்பெற்றுள்ளன.



139. புதுவை, 1917



140. புதுவை, 1917



141. காரைக்குடி, 1920



142. காரைக்குடி, 1920



143. 1921-ம் ஆண்டு, 39-வது வயதில் எடுக்கப் பெற்ற படம். கவிஞரின் கடைசிப் படமெனலாம். ஒளி படைத்த கண்ணினராக மிடுக்குடன் காட்சியளிக்கும் இச் சிறு படத்தின் முழு அளவு அசல் படம் அடுத்தாற்போலிருக்கிறது.



144. சென்னை, 1921







பாரதி குடும்பத்தினர்

**145-150:** (மேலேஇடம்)மாமா சாம்பசிவய்யர் (1957); தம்பி சி. விசுவநாதன் (1957); மனைவி செல்லம்மாளும் இரு புதல்வியரும் பேரக் குழந்தைகளும் (1954); மூத்த மாப்பிள்ளை ஸ்தாணு அய்யரும் மூத்த பெண் தங்கம்மாளும் (1934); புதல்வியர் இருவரும் (1922?); இளைய பெண் சகுந்தலாவும் இளைய மாப்பிள்ளை நடராஜனும் (1934?)















**பாரதி நண்பர்**

**(சில சமீபகாலப் படங்கள்)**

151—156. (மேலே, இடமிருந்து): ச. சோமசுந்தர பாரதி, நூலாசிரியருடன்; மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார், டெல்லி. ராஜாஜி, சாமி வெங்கடாசலம் செட்டியார், டாக்டர் ராஜன்; வி. சக்கரை செட்டியார். (கீழே, இடமிருந்து): ப. ரா. அய்யாசாமி அய்யர், மதுரை; டி. விஜயராகவாச்சாரியார், திருப்பாதிரிப்புலியூர்; ஆக்கூர் அனந்தாச்சாரியார், பரலி சு. நெல்லையப்பர், சென்னை.







157. ஆறுமுகம் செட்டியார், புதுவை.





158. வி. ஹரிஹர ஸர்மா, கிருஷ்ணபுரம்.



159. நாகசாமி, புதுவை.



160. ரா. கனகலிங்கம், புதுவை.

161. பாரதிதாசன், புதுவை.



சில சமீபகாலப் படங்கள்

162. வை. சு. சண்முகம் செட்டியார், கானாடுகாத்தான்.

163. சி. ஆர். ஸ்ரீனிவாஸன், சென்னை

164. வி. எஸ் ஸர்மா, மதுரை

165. ரா. ஸ்ரீநிவாஸவரதன், சோழவந்தான் (இடப்புறம் நிற்பவர்) சோமசுந்தர பாரதி, வி. ஜி. சீனிவாஸனுடன்.

166. பால பாரதி ச. து. சுப்பிர மணிய யோகி, சென்னை



## எட்டயபுரம் பாரதி மண்டபம்

167. 1954-ல் இந் நூலாசிரியர் சென்ற சமயம் அளித்த தோற்றம். (இடப்புறம்.) மண்டபத்தைக் காட்டிய பாரதியின் மாமா சாம்பசிவய்யரையும் படத்தில் காணலாம்.





## பாரதி மண்டபத் திறப்பு விழா

168, 169. 1947-ல் எட்டயபுரம் பாரதி மண்டபத் திறப்பு விழா நடந்தபோது எடுத்த இரு படங்கள். கோலாகலமான அத் திருவிழாவில் தமிழ்நாடே குழுமியிருந்தது! மக்களும் தலைவர்களும் வேற்றுமையின்றிக் கலந்திருந்த அரிய காட்சியைப் படம் காட்டுகிறது.





**பாரதி**
**பொருட்காட்சி**
**வரிசை**

170—174. (மேலே) முதல்காட்சி, 1953 ஸெப்டம்பர், பாரதி விழா, சென்னை; (வலம்) 1953-காங்கிரஸ் கண்காட்சியில், சென்னை; (இடமும் கீழேயும்) 1954 ஸெப்டம்பர் பாரதி தினம், சென்னை யூ. எஸ். ஐ. எஸ். அமெரிக்க நூல் நிலையத்தில்; (கீழ் வலம்) 1957 பாரதி தினம், புதுவை பாரதி விழா, பாரதி மன்றத்தில்.









175. கலவை சங்கர செட்டியாரின் பெண் பத்மா வதியுடன் சகுந்தலா பாரதியும் பாரதியின் பேத்தி விஜயா பாரதியும், புதுவை, 1957.

176. இளம் பாரதியின் போஷகர்: கணேஷ் அண்டு கம்பெனி ஸ்தாபகர் எம். ராமசேஷய்யர் (20 பக்கம் பார்க்க)

177. அச்சில் இல்லாத சில பழைய பாரதி நூல்கள் (மேலே). இவற்றில் 'பாரதியார் சரித்திரம்' மட்டும் சமீபத்தில் மதுரையில் வெளியாகியிருக்கிறது. 178. 'குயில் சிவா' என்று பாரதியால் அழைக்கப் பெற்ற புதுவை நாடகாசிரியர் சிவக்கொழுந்து நாயகர் (கீழே வலம்)










179. 'தராசுக் கடை' என்று 'தராசு' நூலில் விவரிக்கப் படும் மிகப் பழைய பெஞ்சு. புதுவை ஆறுமுகம் செட்டியார் வீட்டில் இன்றும் உள்ளது. படத்தில்: பாரதிதாசன், சகுந்தலா பாரதி, இந் நூலாசிரியர், ரா. கனகலிங்கம், விஜயா பாரதி. (புதுவை, 1957)

## கடைசியாகக் கிடைத்த படங்கள்

180. தேசியத் தலைமைக் காரியாலயம்: திருவல்லிக்கேணி பேயாழ்வார் கோயில் தெருவில் மண்டயத்தார் வீடு, "கௌதமாசிரமம்". 1904—8-ல் பாரதி, வ. உ. சி. முதலிய தலைவர்கள் வெள்ளையனை விரட்டப் பல திட்டங்கள் உருவாக்கி நடத்திய இடம்.



# பின்னர் கிடைத்த தகவல்கள்

[இந் நூல் தயாரிப்பில் மூன்ருண்டுகளுக்கு மேல் கழிந்ததனுல், நூல் அச்சாகிக் கொண்டிருந்தபோதே பல புதிய விவரங்களும், அச்சிடப் பெற்றுள்ள பக்கங்களில் பிழைகளும் தெரிய வந்தன. அவைகளில் முக்கியமானவற்றை இங்கே குறிப்பிடுகிறேன்.—ரா. அ. ப.]

| பக்கம் | பத்தி | வரி | பழைய விவரம் அல்லது பிழை | திருத்தமான புதுத் தகவல் |
|---|---|---|---|---|
| 27 | 1 | 1 | " பாரதியாருடைய... | " பத்திரிகையினுடைய... |
| 27 | 1 | 17 | ஏப்ரலில் | மே மாதம் 12-ந் தேதி |
| 36 | 1 | 23 | ரேடியோ வைத்திருக்கும் இடத்தில்தான் | 'மீன் காலே'ஜுக்கு வடபுறம் |
| 47 | 1 | 28 | 1908 | 1909 |
| 56 | 1 | 28 | 1909 | 19—2—1910 |
| 59 | 2 | 8 | எஸ். ஹரிஹர சர்மா | வி. ஹரிஹர ஸர்மா |
| 63 | 1 | 5 | திருப்பயணம் | திருப்பழனம் |
| 64 | 2 | 39 | 1950 | 9—6—1951 |
| 67 | 1 | 36 | தெய்வசிகாமணி, கோவிந்தசாமி | கோவிந்தசாமி, (தெய்வசிகாமணி இன்னும் உயிரோடிருப்பதாக அறிந்து மகிழ்கிருேம்.) |
| 79 | 1 | 18 | 1918-ல் | 1917-ல் |
| 80 | 2 | 32 | 1925 ஜுலை 25 | 1925 ஜுலை 23 |
| 83 | 2 | 39 | 'மாதா' | 'மாதா மணி வாசகம்' |
| 83 | 2 | 43 | 'மாதா வாசகம்' | 'மாதா மணி வாசகம்' |
| 84 | 1 | 19 | 'மாதா மாணிக்க வாசகம்' | 'மாதா மணி வாசகம்' |
| 88 | 1 | 46 | எஸ். விஜயராகவாச்சாரியார் | டி. விஜயராகவாச்சாரியார் |
| 123 | 1 | 42 | சகோதரர் | மாப்பிள்ளை |
| 124 | 2 | 47 | டி. எல். நடேசனும் | எஸ். நடேசனும் |

# படமெடுத்தோர், பட உரிமை விவரம்

இந்நூலில் உள்ள படங்களில் மிகப் புராதனமானது 1896-ல் எடுக்கப் பெற்றது. மிகப் புதுமையானது நூல் வெளியாவதற்கு சில தினங்கள் முன் எடுக்கப் பெற்றது. ஆக, 61 வருஷக் கால எல்லையை இந்நூலிலுள்ள புகைப் படங்களும் சித்திரங்களும் அளவிடுகின்றன.

பாரதி அடிச் சுவடான சின்னங்கள் பல தரப்பட்டவை. பாரதியின் புகைப்படங்கள், பாரதி நண்பர் புகைப் படங்கள், பாரதி சம்பந்தப்பட்ட இடங்கள் பொருள்களின் புகைப் படங்கள், பாரதி கையெழுத்துப் பிரதிகள், பாரதி எழுத்துகள் வெளியான பழைய பத்திரிகைகள் துண்டுப் பிரசுரங்கள் நூல்கள், பாரதி நடத்திய பத்திரிகைகள்—இவ்வாறு பல்வகையானவை. இவற்றைப் படமெடுப்பதே ஒரு பெரிய அநுபவமாக இருந்தது. புகைப்படக் கலையில் இந்நூலாசிரியருக்கு 1934 முதலே பழக்கம் உண்டென்றாலும், இந்நூல் வேலைக்கென அவரும் பல புதிய புகைப்பட வேலை நுணுக்கங்களைக் கற்றறிய வேண்டியிருந்தது!

இந்நூலில் மொத்தம் 183 படங்கள் இருக்கின்றன. இவற்றில் நான்கு சித்திரங்களும் ஒரு சில புகைப்படங்களும் தவிர மற்றெல்லாப் படங்களும் முதலில் புகைப்படமாக எடுக்கப்பட்டு அதிலிருந்து ப்ளாக் செய்யப் பட்டவையே. இப்படங்கள் அனைத்தும் இந்நூலுக்காகவெனப் புதிதாகப் படமெடுக்கப் பட்டன. இதற்கான தேகப்பிரயாசையும் பணச் செலவும் வீண் போகவில்லை என்பது வெளிப்படை. இதுவரை ஒரே பிரதியாகவோ அல்லது புகைப்படம் இல்லாமலோ இருந்த பல ஏடுகளும் பொருள்களும் இந்நூலுக்காக எடுத்த புகைப் படங்களினால் எதிர்காலத்துக்கும் காக்கப் பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. இத்தகைய காப்பு வேலை இன்று தமிழ் மக்கள் உடனடியாகச் செய்ய வேண்டிய முக்கியத் தொண்டில் ஒன்றாகும்.

இந்நூலில் உள்ள 183 படங்களில், 52 படங்கள் ஆசிரியர் தாமே எடுத்தவை. இப் படங்களின் பட எண்கள் வருமாறு: ஸ்ரீநிவாஸாச்சாரியார்—(முகவுரை), 5, 6, 7, 13, 16, 24, 35, 42, 43, 45, 51, 52, 54, 59, 62 முதல் 73 வரை, 77, 78, 80, 93, 104, 124, 125, 127, 131, 132, 136, 137, 138, 151, 152, 154, 157, 158, 161, 165, 167, 174, 175, 178, 180.

நூலாசிரியருக்காக இதர புகைப் படக்காரர்கள் எடுத்துக் கொடுத்த படங்களின் எண்கள் வருமாறு: கிளேன் அண்டு பெயர்ள், சென்னை—21, 25, 26, 29, 30, 31, 32, 34, 36, 37, 39, 46, 47, 48, 49, 55, 56, 82, 83, 88, 100, 114, 115, 116, 117, 118, 126, 129, 139, 140, 141, 142, 143, 144. மதுரை வி. ஜி. சீனிவாசன் மூலம் எடுக்கப் பெற்றவை—11, 12, 14, 84, 85, 86, 87, 94, 149. 'ஹிந்துஸ்தான்' புகைப்படக்காரராயிருந்து தற்சமயம் இந்தியக் கடற்படையில் பெரிய அதிகாரியாக இருக்கும் யூ. என். ஸிங் எடுத்தவை—41, 53, 74, 75, 76. வேறு சிலர் எடுத்தவை—2, 3, 25, 26, 36, 27, 50, 90, 177.

பாரதி யன்பர் பலர் தங்கள் வசமிருந்த பல அரிய படங்களையும் அச்சுப் பிரதிகளையும் இந்நூல் உபயோகத்துக்கென மனமுவந்து அளித்திருக்கிறார்கள். இவ்வாறு நூலில் வெளியிடப் பெற்றுள்ள படங்கள் விவரம் வருமாறு :

மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார்-23, 40. ரா. சாம்பசிவய்யர்—2, 3, 112, 113. பரலி சு. நெல்லையப்பர்—15, 19, 95, 96, 97, 98, 106, 107. சி. விசுவநாதன்—101, 117 118, 146. தங்கம்மாள் பாரதி—103, 105, 129, 147. சகுந்தலா பாரதி—150. ஓவியர் ஆரியா (கே. பாஷ்யம்)—143. வி. ஹரிஹர ஸர்மா —133. புதுவை நாகசாமி —159. எம். ஓ. அழகிய சிங்காராச்சாரியார் —151 (க). டாக்டர் எஸ். டி. நரசிம்மன் — 22. டி. விஜயராகவாச்சாரியார்—89, 155. டாக்டர் வ. வே. ஸு. கிருஷ்ணமூர்த்தி—58. டாக்டர் மேஜர் வி. எஸ். மகாதேவன்—44. ரா. ஸ்ரீநிவாஸ வரதன்—115, 116, 119, 120, 121. மதுரமித்திரன் என். சுப்பிரமணியம்—114. ரா. கனகலிங்கம்—79, 160. லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி (ஸத்தியமூர்த்தியின் புதல்வி)—38. 111, 155. ஆக்கூர் அனந்தாச்சாரியார்—156. வி. எஸ். ஸர்மா—164. எம். ஆர். வைத்தியநாத ஸர்மா—82, 83. பி. பார்த்தஸாரதி—92. எஸ். ராஜா சண்முகம்-162. சி. சு. செல்லப்பா —88. கணேஷ் அண்டு கம்பெனி சுப்பையர் —176. மதுரை சோ. சாமிநாதன்—61. அரவிந்தாசிரமம்—57, 91. 'உத்போதன்' அலுவலகம், கல்கத்தா-20. 'சுதேசமித்திரன்' அலுவலகம்—122, 123, 128, 163. 'கலைமகள்' அலுவலகம்—33.

# நூலுக்கு ஆதாரங்கள்

இந்நூலை எழுதுவதில் எனக்கு அச்செழுத்தாகவும், கையெழுத்தாகவும், வாய்மொழியாகவும், சித்திரமாகவும் புகைப்படமாகவும் பற்பல இடங்களிலிருந்து ஆதாரங்கள் கிடைத்துள்ளன. அவை யாவையுமே பட்டியலிட்டு இங்கு சேர்த்தல் இயலாத காரியம். ஆதலால், முக்கியமான ஆதாரங்களை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன்.—ரா. அ. ப.


## பாரதி நூல்கள்

1. **பாரதி நூல்கள்—கவிதை**, பாரதி பிரசுராலயம், *1929*.
2. **பாரதி நூல்கள்—வசனங்கள்**, பாரதி பிரசுராலயம், *1941*.
3. **பாரதி நூல்கள்-கட்டுரைகள்**, பாரதி பிரசுராலயம் *1940*.
4. **பாரதி நூல்கள்—கவிதை**, சென்னை அரசாங்க வெளியீடு, *1954*.
5. **பாஞ்சாலி சபதம்** (இரண்டு பாகங்களும் கொண்ட முதல் பதிப்பு), பாரதி பிரசுராலயம், *1924*.
6. **வேதரிஷிகள் கவிதை**, முதல் பதிப்பு, பாரதி பிரசுராலயம், *1928*.
7. **ஸ்வதேச கீதங்கள்**, *1907*-ல் வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் வெளியிட்ட சிறு பிரசுரம்.
8. **சுதேச கீதங்கள்**, மூன்றும் பதிப்பு, பாரதி பிரசுராலயம், *1925-26*.
9. **தோத்திரப் பாடல்கள்**, முதற் பதிப்பு, பாரதி பிரசுராலயம்.
10. **பகவத் கீதை** (மூலமும் மொழிபெயர்ப்பும்), பாரதி பிரசுராலயம், *1925*.
11. **கதா மாலிகா** (பாரதியின் கதைகள் கட்டுரைகள் அடங்கிய நூல்), சுதேசமித்திரன் ஆபீஸ், *1920*.
12. **ஆசாபங்கம் முதலியன** (தாகூர் கதைகள், பாரதி மொழிபெயர்த்தவை 4, வ.வே.ஸு. அய்யர் மொழிபெயர்த்தது 1), கமல நிலையம், திருவல்லிக்கேணி, சென்னை, *1937*.
13. **பத்திராதிபர்** (இரு தாகூர் கதைகள், பாரதி மொழிபெயர்த்தவை), கமல நிலையம், சென்னை, *1937*.
14. **The Fox With the Golden Tail:** A Fable With An Esoteric Significance, by C. Subramania Bharati, 2nd. Edition, Pondicherry, 1914.
15. **Agni and Other Poems; Essays and Other Prose Fragments:** by C. Subramania Bharati, Edited by K. S. Venkataramani and C. R. Reddy, Bharati Prachuralayam, Madras, 1937.
16. **பாரதி நினைவு மலர்**, எட்டயபுரம் பாரதி மண்டபத் திறப்பு விழாவின் போது வெளியானது. *1947*.
17. **சின்னச் சங்கரன் கதை—பாரதி**, பாரதி புத்தக நிலையம், மதுரை, *1956*.
18. **உயிர் பெற்ற தமிழன் பாட்டு—பாரதி**, புதுவை 'தாய் நாடு' ஆசிரியர் வே. வேணுகோபால் நாயகர் வெளியிட்ட சிறு பிரசுரம், *1936*. கரூர் பாரதி கழக இலவச வெளியீடு, *1954*.
19. **ஆங்கிலப் பயிற்சி, சிவாஜியின் வீரமொழி**—பாரதி, மதுரை சமரஸ நிலையம், 'பாரதாச்ரமம்', அ. சுப்பிரமணியம் வெளியிட்ட சிறு பிரசுரம், *1940* (?).
20. **சென்னை அரசாங்கப் பொருட் காட்சிசாலையில் (மியூஸியத்தில்) உள்ள பாரதி கையெழுத்துப் பிரதிகளும் பழைய அச்சுப் பிரதிகள் சிலவும்.**
21. **சந்திரிகையின் கதை**—வெளியாகாத இரண்டு அத்தியாயங்களின் கையெழுத்துப் பிரதி.

## பாரதி பதிப்பித்த பத்திரிகைகள்

1. இந்தியா: வாரப் பத்திரிகை, சென்னை (1908-ல் இரண்டு இதழ்கள்.)

2. இந்தியா: வாரப்பத்திரிகை, புதுச்சேரி. (புதுவை போனது முதல் கடைசீ வரை. 1908 அக்டோபர் முதல் 1910 மார்ச் வரை).

3. விஜயா: தினசரி, புதுச்சேரி. (ஓரிதழின் தலையங்கம் மட்டும்.)

## பாரதி நூல் மொழிபெயர்ப்புகள்

1. ஷஷ்டாம்ச ('ஆறில் ஒரு பங்கு' கதையின் ஹிந்தி மொழிபெயர்ப்பு — மொழி பெயர்த்தவர் 'ஷஷ்டாம்ச கே ஸேவக்') —பாரதிபிரசுராலயம், சென்னை, 1940.

2. ஞானரத் ('ஞானரத'த்தின் ஹிந்தி மொழிபெயர்ப்பு--மொழிபெயர்த்தவர் க. ம. சிவராம்)—பாரதி பிரசுராலயம், சென்னை, 1940.

3. தராசு ('தரா'சின் ஹிந்தி மொழி பெயர்ப்பு — மொழிபெயர்த்தவர்: ஸ்ரீநிவாஸாசார்ய பாரத்வாஜீய)—பாரதி பிரசுராலயம், சென்னை, 1940.

4. **The Voice of a Poet:** English renderings of Bharati's verses by C. Rajagopalachari, Dr. James H. Cousins, Prof. K. Swaminathan, Mrs. Hephzibah Jesudasan, P. N. Appusami and Prof. A. Srinivasaraghavan. — Bharati Tamil Sangam, Calcutta, 1951.

5. **Novy Orient** என்ற செக் மொழிப் பத்திரிகையில் தொடர்புடையவரும் தமிழறிந்த திராவிடக் கலை ஆராய்ச்சிப் புலவருமான டாக்டர் காமீல் ஸ்வலேபில் (Dr. Kamil Zvelebil) என்ற செக்கோஸ்லாவகிய அறிஞர் பல ஐரோப்பிய மொழிகளில் மொழி பெயர்த்துள்ள பாரதி பாடல்கள்.

6. 'தக்ஷிண் பாரத்', 'ஹிந்தி பிரசார் பத்ரிகா', 'நவநீத்' 'நவபாரத் டைம்ஸ்' 'ஹிந்துஸ்தான்' முதலிய ஹிந்திப் பத்திரிகைகளில் 'பாரதி பக்த்', ஆர். சௌரிராஜன், பூர்ணம் சோமசுந்தரம் முதலியோர் வெளியிட்டுள்ள பாரதி பாடல் ஹிந்தி மொழிபெயர்ப்புகள்.

7. நெல்லூர் தேசபக்தர் கே. பார்த்த ஸாரதி அய்யங்கார் தெலுங்கில் மொழி பெயர்த்துள்ள சில பாரதி பாடல்கள்.

8. 'பாஞ்சாலி சபத'த்தின் ஆங்கில மொழி பெயர்ப்பு, கே. இ. விசுவநாதன் செய்துள்ளது. (கையெழுத்துப் பிரதி).

## பாரதி சரிதங்கள்

1. பாரதியார் சரித்திரம்: ச. சோமசுந்தர பாரதி, வி. சக்கரை. பரலி சு. நெல்லையப்பர் ஆகிய மூவர் எழுதிய நினைவுக் கட்டுரைகள்—பாரதி பிரசுராலயம், சென்னை, 1928.

2. **Bharati And His Works,** by C. Visvanathan, with a Foreward by A. Rangaswami Iyengar — Bharati Prachuralayam, Madras, 1929.

3. சுப்பிரமணிய பாரதியார்: 'காந்தி' மாதப் பத்திரிகையில் தொடர் கட்டுரைகள், வ. ரா. எழுதியவை. 1934-35.

4. கவிச் சக்கரவர்த்தி சுப்ரமண்ய பாரதி சரித்திரம்: ஆக்கூர் அனந்தாச்சாரி — கிட்டப்பா மலர்ப் பிரசுராலயம். செங்கோட்டை, 1936.

5. பாரதி விளக்கம்: ஸ்வாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்—பாரதி பிரசுராலயம். 1937.

6. பாரதி லீலை: சக்திதாசன் சுப்பிரமணியன், 1937

7. புதுமைக் கவி பாரதியார்: தி. ஜ. ர. — அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, 1940.

8. மகாகவி பாரதியார்: வ. ரா.—சக்தி காரியாலயம், சென்னை, 1944.

9. பாரதியார் சரித்திரம்: செல்லம்மா பாரதி சொல்வது போல தங்கம்மா பாரதி எழுதியது.—சக்தி காரியாலம், சென்னை. 1941. இரண்டாவது பதிப்பு, 1945.

10. கவிக்குயில் பாரதியார்: யோகி சுத்தானந்த பாரதி. அன்பு நிலையம், இராமச்சந்திரபுரம், 1946.

11. வி. ஓ. சி. கண்ட பாரதி (வ. உ. சிதம்பரம் பிள்ளையின் குறிப்புகளிலிருந்து

தொகுத்தது)—மெட்ராஸ் ப்ரீமியர் கம்பெனி, சென்னை, 1946.

12. மகாகவி பாரதியார்: அண்ணாதுரை; பாரதி தாசன்—கலை மன்றம், சென்னை, 1948.

13. பாரதிதாசன் கவிதைகள்—இரண்டாம் தொகுதி — பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி, திருத்திய 3-ம் பதிப்பு, 1956.

14. அமரன் கதை; தங்கம்மாள் பாரதி—ஓம்கார நூலகம், புதுக்கோட்டை, 1946.

15. பாரதியும் கவிதையும்: தங்கம்மாள் பாரதி--புதுமைப் பதிப்பகம், காரைக்குடி, 1947.

16. என் குருநாதர் பாரதியார்: ரா. கனகலிங்கம்—சக்தி காரியாலயம், சென்னை, 1947.

17. வரகவி பாரதியார்: பண்டித வித்துவான் தி. இராமானுசன்—ஏ. டி. என். நாகலிங்கம் அண்டு கம்பெனி, மதுரை, 1950.

18. பாரதி பிறந்தார்: 'கல்கி' — பாரதி பதிப்பகம், சென்னை, 1954.

19. பாரதி தமிழ்: பெ. தூரன்—அமுத நிலையம், சென்னை, 1954.

20. பாரதி நினைவுகள்: யதுகிரி அம்மாள்—அமுத நிலையம் சென்னை. 1954.

21. செட்டிநாடும் தமிழும்: 'சோமலெ', பாரி நிலையம், சென்னை—1. 1954

22. **Subramania Bharati—A Memoir** being an account of his life, and a survey of his works, together with original Englih renderings of some of his poems, by P. Mahadevan. Atri Publishers, Madras 17, 1957.

## பாரதி இலக்கியம் பற்றிய நூல்கள்

1. பாரதியின் கவிதை: கு. ப. ராஜகோபாலன்.

2. பாரதியின் இலக்கிய பீடம்: பெ. கொ. சுந்தரராஜன்.

3. அமரகவி பாரதி: ஆ. முத்துசிவன்—ஸ்டார் பிரசுரம், 1947.

4. பாஞ்சாலி சபதம்: பொ. திருகூட சுந்தரம்—காந்தி நிலையம், சென்னை. 1951.

5. பாட்டுக் கொரு புலவன்: கே. பொன்னுசாமி—இமயப் பதிப்பகம். 1954.

6. கவித் திறன்: மு. கோவிந்தசாமி—மலர் நிலையம், சென்னை, 1955.

7. பாரதியார் பெருமை: தொகுத்தது, முல்லை முத்தையா—பாரதி பதிப்பகம், 1956.

8. **Subramania Bharati-His Mind and Art:** K. S. Ramaswami Sastriar-Wealth & Welfare Office, Madras, 1951,

9. 'தமில் அவுர் உஸ்கா ஸாஹித்ய': பூர்ண சோமசுந்தரம் (ஹிந்தி)—ராஜ்கமால் பப்ளிகேஷன்ஸ், டெல்லி, 1954.

## இதர நூல்கள்

1. நினைவு மஞ்சரி: உ. வே. சாமிநாதையர். தியாகராஜ விலாசம், சென்னை—5.

2. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர்: கி. சந்திரசேகரன், 'கலைமகள்' காரியாலயம், சென்னை—4.

3. அரசியல் ஞானி அரங்கசாமி அய்யங்கார்: ஆர். கிருஷ்ணமாச்சாரியார், அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை—4, 1934.

4. கப்பலோட்டிய தமிழன்: ம. பொ. சிவஞானம்.

5. வீர சிதம்பரனார்: நா. இராமய்யா பிள்ளை. விவேகாநந்தா அச்சகம், மதுரை, 1950

6. நினைவு அலைகள்: டாக்டர் தி. சே. சௌ. ராஜன். கலைமகள் காரியாலயம், சென்னை.

7. மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள்: வ. வே. ஸு. அய்யர், (4-ஆம் பதிப்பு.) அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை 4. 1953.

8. **The Kural**, Translated by V.V.S. Aiyar Second Edition, The Bharadwaja Ashrama, Shermadevi.

9 Proceedings of the Madras Legislative Council, Vol. XLIV, Oct. 8—12, 1928, Govt. of Madras.

## பத்திரிகைகள், பிரசுரங்கள்

1. ஞான பாநு: மாதப் பத்திரிகை, ஆசிரியர், சுப்பிரமணிய சிவம், மயிலாப்பூர், சென்னை. 1913 - 1914 இதழ்கள்.

2. லோகோபகாரி: வாரப் பத்திரிகை, ஆசிரியர்: பரலி சு. நெல்லையப்பர், 1935, 1936, 1938 ஆண்டுகளில் குறிப்பிட்ட சில இதழ்கள்.

3. பால பாரதி: ஆசிரியர்: வ. வே. ஸு. அய்யர், சேரமாதேவி. 1924-இல் ஓர் இதழ்.

4. ஹிந்துஸ்தான்: வாரப் பத்திரிகை, ஆசிரியர்: ரா. நாராயணன். சென்னை. 1938-1941. முக்கியமாக இவ்வாண்டுகளில் வெளியான பாரதி மலர்களும், வ. வே ஸு. அய்யர் மலரும்.

5. விவேக பாநு: மாதப் பத்திரிகை, மதுரை. 1904.

6. சுதேசமித்திரன்: தினசரி, வாரப் பதிப்பு, சென்னை. நவம்பர் - டிஸம்பர் 1918, ஸெப்டம்பர் 1921.

7. ஹிந்து: ஆங்கில தினசரி, சென்னை. ஸெப்டம்பர், 1921.

8. முருகப்பா மணிவிழா மலர்; ஹிந்து மதாபிமான சங்கம், காரைக்குடி. 1954.

## தகவல் தந்து உதவியவர்கள்

எட்டயபுரத்தில் ஜனித்தது முதல் திருவல்லிக்கேணி மயானத்தில் பஞ்சபூதங்களுடன் இணைந்தது வரை பாரதியை பாலகனாகவும், பள்ளித் தோழனாகவும், மிடுக்கான வரகவியாகவும், துடிப்பு மிக்க இளைஞனாகவும், பள்ளியில் சகஊழியராகவும், சகபத்திரிகைக்காரராகவும், ஆர்வமிக்க எழுத்தாளராகவும், தோழமை மிக்க தேசியத் தலைவராகவும், கவிகளும் வியக்கும் கவிதா வெறிகொண்ட புலவராகவும், கனல்பறக்கும் சீர்திருத்தவாதியாகவும், நம்பரும் பக்திகொண்ட வேதாந்தியாகவும் அவரைக் கண்டோர் பலர்.

ஆனால் கண்டோரெல்லாம் அவரை அறிந்தனரா! அவரை அறிந்தோர் வெகு சிலரே. அவர்களில் 1935-ஆம் ஆண்டும் அதற்குப் பின்னரும் ஜீவிதர்களாயிருந்த, ஜீவிதர்களாயிருக்கும் பெரும்பாலோரை நான் நேரில் சந்தித்தோ கடிதமூலம் தொடர்பு கொண்டோ பல விவரங்களைச் சேகரித்திருக்கிறேன். அத்தகைய விவரங்கள் அளித்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் வருமாறு:

1. சதாசிவானந்தா (ஆர். சாம்பசிவய்யர்.) (பாரதியின் இளமையும் பிற்காலமும்.)

2. செல்லம்மா பாரதி. (குடும்ப வாழ்வும் இதர விவரங்களும்.)

3. தங்கம்மா பாரதி. ( ,, ,, )

4. சுகுந்தலா பாரதி. ( ,, ,, )

5. சி. விசுவநாதன். (குடும்ப வாழ்வு, பாரதி பிரசுராலய சரிதம்.)

6. வி. ஹரிஹர சர்மா. (குடும்ப வாழ்வு, பாரதி பிரசுராலய சரிதம்)

7. ச. சோமசுந்தர பாரதி. (இளமை.)

8. பண்டிட் எஸ். நாராயணய்யங்கார். (காசி வாசம், முதல் சென்னை வாசம்.)

9. ப. ரா அய்யாசாமி அய்யர். (மதுரை வாசம்.)

10. மண்டயம் எஸ் ஸ்ரீநிவாஸாச்சாரியார் (ஸ்ரீ.ஸ்ரீ. ஆசார்ய.) (சென்னை வாசம், புதுவை வாசம், அந்திய காலம்.)

11. சா. துரைஸ்வாமி அய்யர் (சென்னை வாசமும் பிற்காலமும்.)

12. கி. பாலசுப்பிரமணிய அய்யர் (சென்னை வாசம்.)

13. வ. ரா. (திருப்பழனம் வ. ராமஸ்வாமி அய்யங்கார்.) (புதுவை வாசம், இரண்டாவது சென்னை வாசம்.)

14. பாரதிதாசன் (கனக சுப்புரத்தினம்) (புதுவை வாசம்.)

15. பரலி சு. நெல்லையப்பர். (புதுவை வாசம், அந்திய காலம்.)

16. குவளையூர் கிருஷ்ணமாச்சாரியார் (குவளைக் கண்ணன்) (புதுவை வாசம், அந்திய காலம்.)

17. வி. வேணுகோபால் நாயக்கர் (அம்மாக் கண்ணுவின் புதல்வர்) (புதுவை வாசம்.)

18. பாக்கியலக்ஷ்மி அம்மாள் (வ.வே.ஸு. அய்யரின் மனைவியார்) (புதுவை வாசம்.)

19. அமுதன் (அரவிந்தாசிரமம்.) (புதுவை வாசம்.)

20. புரொபஸர் என். சுப்பிரமணிய அய்யர் (பிரம்மராய அய்யர்) (புதுவை வாசம்.)

21. ரா. கனகலிங்கம் (புதுவை வாசம்.)

22. ராஜா பகதூர் (பொன்னு முருகேசம் பிள்ளையின் மூத்த புதல்வர்) (புதுவை வாசம்.)

23. கோ. சு. ஆறுமுகம் செட்டியார் (புதுவை வாசம்.)

24. மேஜர் வி. எஸ். மகாதேவன் (சாமிநாத தீக்ஷிதரின் புதல்வர்) (புதுவை வாசம்.)

25. டி. விஜயராகவாச்சாரியார் (புதுவை வாசம்.)

26. பி. பி. ராஜரத்தினம் (குள்ளச் சாமியைப்பற்றி.)

27. ந. ரகுநாதய்யர் (கீதை பற்றி பாரதி நடத்திய பத்திரிகை விவாதம்.)

28. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் (புதுவை வாசம், இரண்டாவது சென்னை வாசம்.)

29. வை. சு. சண்முகன் (கானாடுகாத்தான், காரைக்குடி விஜயம்.)

30. சொ. முருகப்பா (காரைக்குடி விஜயம்.)

31. ராய. சொக்கலிங்கன் (காரைக்குடி விஜயம்.)

32. ரா. ஸ்ரீநிவாஸ வரதன் (கடயம் வாசம்.)

33. அமிர்தசாமி (எட்டயபுரம் விஜயம்.)

34. ஆக்கூர் அனந்தாச்சாரியார் (கடயம் வாசம்.)

35. கே. எஸ். வெங்கடராமன் (புதுவை வாசம், இரண்டாவது சென்னை வாசம்.)

36. வி. எஸ். சர்மா (இரண்டாவது சென்னை வாசம்.)

37. எம். எஸ். சுப்பிரமணிய அய்யர் (இரண்டாவது சென்னை வாசம்.)

38. சு. நடேசன் (இரண்டாவது சென்னை வாசம்.)

39. கி. சடகோபன் (இரண்டாவது சென்னை வாசம்.)

40. ஆர். சின்னசாமி (இரண்டாவது சென்னை வாசம்.)

41. சங்கு சுப்பிரமணியம் (இரண்டாவது சென்னை வாசம்.)

42. வெ. சாமிநாத சர்மா (இரண்டாவது சென்னை வாசம்.)

43. ச. து. சுப்பிரமணிய யோகி. (ஈரோடு விஜயம்.)

44. பி. பார்த்தஸாரதி அய்யங்கார் (சுதேசி பத்மநாபய்யங்காரின் புதல்வர். தம் தந்தை பற்றி.)

45. எம். ஆர். வைத்தியநாத சர்மா (சுப்பிரமணிய சிவாவின் சகோதரர். தம் சகோதரர் பற்றி.)

46. பொன்னு இராஜமாணிக்கம் பிள்ளை (புதுவை வாசம்.)

## உபயோகமான கட்டுரைகள்

பத்திரிகைக் கட்டுரைகளிலும் நினைவுக் குறிப்புகளிலும் இந் நூலுக்குப் பயன்பட்டவை எண்ணில. "லோகோபகாரி", "நகர தூதன்", "காந்தி", "சுதந்திரச் சங்கு", "ஜெய பாரதி", "பாரதி கவிதா மண்டலம்", "பிரஜாநுகூலன்", "அமிர்தகுண போதினி", "ஹிந்துஸ்தான்", "ஹநுமான்" 'சுதேசமித்திரன்", "தினமணி", "பாரததேவி", "கலைமகள்", "ஆனந்த விகடன்", "கல்கி", "சிவாஜி", "சக்தி" முதலிய தற்காலப் பத்திரிகைகளில் அவ்வப்போது வெளியான பாரதி நினைவுக் கட்டுரைகளை முக்கியமாய்க் குறிப்பிட வேண்டும்.

# பொருள் அகராதி

# பட அகராதி

---